# ராணி முத்து

## இலக்கியத் திங்கள் இதழ்

முத்து 51 பரீதாபி ஆண்டு பங்குனி (மார்ச் 1973)


பொருளடக்கம்




## சந்தா விகிதம்:

ஓர் ஆண்டு ரூ. 12-00

6 மாதம் ரூ. 6-50

சந்தாத் தொகை அனுப்ப வேண்டிய முகவரி:

நிர்வாகி,

"ராணி முத்து",

சென்னை-7.


## பணத்துக்குப் பதில் புத்தகம்!

தமிழ் நாட்டில் உள்ள நூலகங்களுக்கு அரசாங்கம் ஆண்டுதோறும் உதவிப் பணம் அளித்து வருகிறது. அதில் இந்த ஆண்டு ஒரு மாறுதல் செய்யப்பட்டு இருக்கிறது.

உதவிப் பணம் முழுவதும் தொகையாகக் கொடுக்கப்பட மாட்டாது. முக்கால் பாகம்தான் தொகையாகக் கொடுக்கப்படும். மீதி கால் பாகம், புத்தகமாக வழங்கப்படும்.

டெல்லி சர்க்காரிடம் இருந்து தமிழக அரசுக்கு

மானியம் கிடைக்கிறது. அந்தத் தொகையிலும் பாதிக்கு புத்தகங்கள் வாங்க அரசு முடிவு செய்திருக்கிறது.

இப்பொழுது நூலகங்களுக்குக் கொடுக்கும் உதவிப் பணம் முழுவதும் நிர்வாகச் செலவுக்கே சரியாகப் போய் விடுகிறது. பல நூல் நிலையங்கள் பல ஆண்டுகளாகப் புதிய புத்தகங்கள் வாங்காமலே இருக்கிறது. அதற்குக் காரணம் பணம் இல்லாமை தான். இந்தக் குறையை நீக்கத்தான் அரசாங்கமே புத்தகங்கள் வாங்கிக் கொடுக்க முன் வந்திருக்கிறது.

இது வரவேற்கத்தக்க நல்ல மாற்றம்தான். ஆனால், இதை அமுல்படுத்துவதில் மிகவும் கவனம் தேவைப்படும்.

எந்தெந்த புத்தகங்களை—யார் யார் எழுதிய புத்தகங்களை வாங்குவது என்பதை அரசாங்கமே முடிவு செய்யும். அப்பொழுது எதிர்க்கட்சிகள் குறைகூற இடம் ஏற்படும். அதற்கு வாய்ப்பு இல்லாமல் அரசாங்கம் நடந்து கொள்ள வேண்டியது அவசியம்.

அதற்கு அரசாங்கம் ஓர் ஏற்பாடு செய்யலாம். தேவையான புத்தகங்களைத் தேர்ந்து எடுக்க ஒரு குழுவை அமைக்கலாம். அரசியல்வாதிகள், எழுத்தாளர்கள், கல்வியாளர்கள், நூலகர்கள், வாசகர்கள் முதலானவர்களுக்கு அதில் இடம் அளிக்க வேண்டும்.

பொழுதுபோக்கு என்று இல்லாமல், அறிவு வளர்ச்சிக்கான புத்தகங்களை தேர்ந்து எடுப்பதிலும் கவனம் செலுத்த வேண்டும். நூலகத்துக்கு வரும் அனைவரையும் திருப்திப்படுத்துவதாகப் புத்தகங்கள் இருப்பதுடன், புதிய வாசகர்களைக் கவரக் கூடியதாகவும் இருக்க வேண்டும்.

★

# இதயம் பேசுகிறது!

நாவலைப் படித்து முடித்துவிட்டு, உங்கள் கருத்துக்களை எழுதி அனுப்புங்கள். முகவரி: இதயம் பேசுகிறது. "ராணி முத்து", சென்னை-7.

## ஆனந்தக் கண்ணீர்!

"மைதிலி"யைப் படிக்கத் தொடங்கினேன். படித்து முடித்துவிட்டுத்தான் கீழே வைத்தேன். ஆனந்தக் கண்ணீர் வடித்தேன்.

பி. எம். கிருஷ்ணமூர்த்தி,
கீழப்பள்ளிப்பேட்டை.

பாம்பின் கால் பாம்பு அறியும். பெண்ணின் மனதை பெண்ணால்தான் அறிய முடியும். அந்த முயற்சியில் "லெட்சுமி" முழு வெற்றி பெற்று விட்டார்.

இரா. இராமகிருஷ்ணன்,
கொத்தளம்பள்ளம்.

"அகழ்வாரைத் தாங்கும் நிலம் போல தன்னை இகழ்வார் பொறுத்தல் தலை" என்ற வள்ளுவர் வாக்குக்கு எடுத்துக் காட்டாக வாழ்ந்தவள், மைதிலி. அவளை வாழ்த்துகிறேன்.

என். எஸ். தங்கராஜ்,
கிள்ளை.

ஆயிரம் நாவல்கள் வந்தாலும், ஒரு சிலதான் வாசகர் உள்ளத்தில் நிலைக்கின்றன. அந்த ஆயிரத்தில் ஒன்று மைதிலி.

ஆ. சவரிமுத்து,
நெய்வேலி-3.

மைதிலி என்னை அழச் செய்து விட்டாள். பெண்களுக்கு அவள் ஒரு வழிகாட்டி.

எஸ். சுலோசனா,
சன்னநல்லூர்.

முயற்சிக்கும் துணிவுக்கும் சிறந்த எடுத்துக் காட்டு நீலகண்டன். அவனைப் போல முன்னேற நானும் முயற்சி செய்கிறேன்.

ஆ. கெர்மன்ஜில்டு,
வில்லுக்குறி.

மைதிலியைப் போல ஒரு பெண் கிடைக்கும்வரை நான் திருமணம் செய்து கொள்ளப் போவது இல்லை!

மு. குத்புதீன்,
தஞ்சை.

பெண்களுக்குப் பிடித்த நாவலே தொடர்ந்து வெளிவருகிறதே. ஆண்களுக்கும் ஒரு நாவல் வெளியிடக் கூடாதா!

எல். டில்லி,
நெற்குன்றம்.

ராஜாஜிக்கு அஞ்சலி செய்யும் முறையில் அவரது வண்ணப் படத்தை வெளியிட்டது வரவேற்கத்தக்கது.

செ. மு. யூசுப்,
திருச்சி-1.

பிரபல பழனி

வை த் தி ய தி ல க ம்



Dr. S. காளிமுத்து
R. M. P. (IND)
V.V.C.A.M.I.H.

வை த் தி ய ரா ஜ்

பழனி சித்தவைத்தியத்திற்கு சிறப்பு பெற்றதே! அதிலே முன்னணியில் திகழ்பவர், உலகப் புகழ்பெற்ற வைத்தியதிலகம் வைத்தியராஜ் டாக்டர் S. காளிமுத்து R. M. P. (IND), V. V. C., A. M. I. H. அவர்களே என்பது அறிந்ததே!

இந்தியாவின் முக்கிய மாநிலங்களில் சுமார் 40 நகரங்களில் முகாம் செய்து, மற்றவர்களை விட ஏராளமான வாலிப வயோதிக அன்பர்களுக்கு சிகிச்சை செய்து, பாராட்டும், நற்சாட்சிகளும், மெடல்களும், புகழும் பெற்றவர் இவர் ஒருவரே

## தங்கபஸ்பம்—சிடடுக்குருவி லேகியம்

கலந்து சாப்பிடுங்கள். இதற்கு நிகரானது எதுவுமில்லை. இழந்துபோன சக்தியை மடக்கவும், இல்வாழ்க்கைப் பிரச்னை. இளமை உணர்ச்சி குறைவு, கைகால் அசதி, புஷ்டி நஷ்டம், தளர்ச்சி, வெட்கம், பயம், ரத்தக்குறைவு, கெட்ட கனவுகள் முதலியவற்றைக் குணப்படுத்தி, புதிய சக்தி, புத்துணர்ச்சி தந்து இல்வாழ்க்கையில் இணையில்லா வெற்றி தருகிறது. 73 வருட அனுபவமும் நற்சாட்சிகளும் பெற்றது இதுவே. பத்தியம் இல்லை. 30 வேளை தங்கபஸ்பம்—சிட்டுக்குருவி லேகியம் விலை ரூ. 60-00. பாதி அளவு அனுப்ப இயலாது. வி.பி.பி யில் பெற இன்றே எழுதுங்கள்

## ஆஸ்துமா நோயாளிகளை கவனிக்கவும்; கஸ்தூரி கல்பம்

உபயோகியுங்கள். ஆஸ்துமா என்னும் இருமல், சளி, இளைப்பு, கபக்கட்டு, கோழை, சளி அடைப்பு, தொண்டைக்கட்டு, பேசவும் மூச்சுவிடவும் கஷ்டம், கர்முர் சப்தம், மூச்சுத் திணறல் மூக்கில் நீர் வடிதல், தினசரி அலுவல்களில் அவஸ்தை, பலவீனம் முதலியவற்றால் பலகாலம் கஷ்டப்பட்ட நோயாளிகள் நம்மிடம் மருந்து சாப்பிட்டு நலம் பெற்றுவிட்டார்கள். பத்தியமில்லை நற்சான்றுகள் ஏராளம் வி. பி. தபால் பார்சலில் பெற இன்றே எழுதுங்கள். 24 நாள் கஸ்தூரி கல்பம் கோர்ஸ் ரூ. 34-00.

கிளை: 41, நைனியப்பன் தெரு, மண்ணடி, சென்னை-1. போன்: 21448.

சென்னை கிளை ஆபீசில் 1 முதல் 7 தேதி மீண்டும் 15 முதல் 21 தேதி நேரில் விஜயம்.

GOVT REGD I. M. No 204841 REGD. 15448

வைத்திய திலகம், வைத்தியராஜ், டாக்டர் S. காளிமுத்து R. M. P. (IND)

போன்: 316. **பழனி சித்தர் வைத்தியசாலை (RM) பழனி S. I.** தந்தி: சித்தர்.

# எப்படிப் புதைப்பது?

மேற்கு ஜெர்மனியில் டோர்னெஷ் என்ற சிறு நகரின் கவுன்சிலரும் மனைச் சிற்பியுமான கெர்கார்டு நியூமன் என்பவர், அந்நகரின் இடுகாட்டில் சடலங்களைப் புதைப்பதற்குப் போதிய இடம் இல்லாததைக் கண்டு, இந்தப் பிரச்சினைக்கு தீர்வு காண ஒரு யோசனை தெரிவித்திருக்கிறார்.

இடுகாட்டில் சடலங்களைப் படுக்க வைத்துப் புதைப்பதற்குப் பதிலாக செங்குத்தாக நிற்க வைத்துப் புதைக்கலாம் என்பதே அவரது யோசனை!

பத்திரிகையில் இந்த யோசனை வந்ததும், இதனைக் குறித்து வாக்குவாதங்களும் தொடங்கிவிட்டன. உதாரணமாக, கல்லறையின் மீது நடப்படும் கல்லில் இன்னார் இங்கே "உறங்குகிறார்" என்று எழுதுவதற்குப் பதிலாக, இனி "நிற்கிறார்" என்று எழுதவேண்டுமே என்று எல்சிகெல்டு என்பவர் கவலை தெரிவித்திருக்கிறார். எல்சாபோர்ன் என்ற பெண்மணியோ இத்தகைய யோசனையைக் கூறுவதே ஒரு நீசத்தனமான செயல் என்று ஆத்திரப்பட்டிருக்கிறார். "அந்தக் கவுன்சிலரையே நிற்க வைத்துப் புதைக்க வேண்டும்—அதுவும் உயிரோடு!" என்று எழுதியிருக்கிறார், அந்தப் பெண்மணி!

# தேர்தல் பந்தயம்!

சென்ற டிசம்பர் முதல் தேதியன்று மேற்கு ஜெர்மனியிலுள்ள கொலோன் நகரைச் சேர்ந்த கிரைஸ்ட் என்ற திரைப்படக் காமிரா நிபுணர் ஒரு சிரமமான பயணத்தை மேற்கொண்டார். மேற்கு ஜெர்மனியிலுள்ள பிளென்ஸ்பர்கிலிருந்து ஆஸ்திரிய நாட்டின் எல்லைவரை —அதாவது மேற்கு ஜெர்மனி முழுவதையும்—நடந்தே கடந்து, எல்லைப்புறத்தில் 2000 மீட்டர் உயரமுள்ள மலையொன்றின் மீது புத்தாண்டு தினத்தன்று ஒரு கொடியைப் பறக்க விட்டார். அது மட்டுமல்லாமல் இந்த ஒரு மாத காலத்திலும் அவர் போகும் வழியில் தமக்கு வேண்டிய உணவைத் தாமே சமைத்துச் சாப்பிட்டுக் கொண்டார். அவர் ஏன் இவ்வாறு செய்தார்?

மேற்கு ஜெர்மனியில் நடந்த பொதுத் தேர்தலின் போது கிறிஸ்டியன் டெமாக்ரட்டிக் யூனியன்தான் மிகப் பெரும்பான்மையான கட்சியாக வெற்றி பெறும் என்று கூறி அவர் பந்தயம் கட்டினார். பந்தயத்தில் தோற்றால், தாம் மேற்கூறியவாறு செய்வதாகக் கூறினார். தேர்தல் முடிவுகள் அவர் எதிர்பார்த்ததற்கு மாறாகப் போய்விட்டன. எனவே பந்தயத்தின்படி பயணம் புறப்பட்டுச் சென்றார்.

## சிந்தனைப் போட்டி-8

# பரிசு ரூ. 1000!

### கட்டணம் இல்லை!!

இந்தப் போட்டி ஒவ்வொரு மாதமும் நடத்தப்படும். போட்டி பற்றிய விவரங்கள் மாதந்தோறும் "ராணிமுத்து" இதழில் வெளியிடப்படும்.

வாசகர்களின் சிந்தனையைத் தூண்டுவதற்காகவே இந்தப்போட்டி நடத்தப்படுகிறது. எனவே, போட்டியில் கலந்து கொள்ள எவ்விதக் கட்டணமும் கிடையாது.

விடைகளை நன்ருக சிந்தனை செய்து சீர்தூக்கி எழுத வேண்டும் எடுத்துக்காட்டாக "இது சிலருக்குப்பிடிக்காது: இகழ்ச்சி—புகழ்ச்சி" என்பதை எடுத்துக் கொள்வோம். "இகழ்ச்சி" என்று சாதாரண மாகச் சொல்லுவார்கள். நன்ருக சிந்தித்துப் பார்த்தால், சிலருக்கு புகழ்ச்சி பிடிக்காது என்ற உண்மை புரியும்.

முழுவதும் சரியான விடைகள் எழுதியவருக்கு ரூ. 1,000/– பரிசு கொடுக்கப்படும். பலர் சரியான விடை எழுதியிருந்தால், பரிசுத் தொகை பகிர்ந்து அளிக்கப்படும்.

**நிபந்தனைகள்:**

(1) எதிர்ப்பக்கத்தில் இருக்கும் அச்சிட்ட கூப்பனில்தான் விடைகளை எழுதி அனுப்ப வேண்டும்.

(2) விடை எழுதும்பொழுது, முழு வார்த்தையையும் ("இகழ்ச்சி" என்ருே "புகழ்ச்சி" என்ருே) எழுத வேண்டியது இல்லை. 1 அல்லது 2 என்ற எண்ணை மட்டும் கட்டத்தில் குறிப்பிட வேண்டும்.

(3) ஒருவர் எத்தனை விடைகள் வேண்டுமாலுைம் அனுப்பலாம். ஆனுல், எதிர்ப்பக்கத்தில் அச்சிட்டுள்ள கூப்பனைத் தான் அதற்கு பயன்படுத்த வேண்டும். வெள்ளைத் தாளில் எழுதி அனுப்பக்கூடாது.

(4) முடிவு தேதிக்குப் பிறகு வரும் கூப்பன்கள் ஏற்றுக் கொள்ளப்படமாட்டா.

(5) ஆசிரியரின் தீர்ப்பே இறுதியானது.

முடிவு தேதி: 31–3–73 (சரியான விடைகள் 22–4–73 "ராணி" வார இதழில் வெளிவரும்.)

# உலகின் ஒன்பதாம் அதிசயம்!

உலக வரலாற்றிலேயே மிக உயரமான, மிகப் பெரிய கட்டடம், நியூயார்க் நகரில் மன்காட்டன் தீவின் தென் மேற்குப் பகுதியில் விரைந்து வளர்ந்து வருகிறது.

ஒவ்வொன்றும் 110 மாடி கொண்ட இரு கோபுரங்கள் உள்ள உலக வணிக நிலையக் கட்டடம்தான், அது. அலுவலகங்கள், கடைகள், வீடுகள் ஆகியன இதில் இடம் பெறும்.

புதிய கட்டடத்தின் உரிமையாளர் யார் தெரியுமா? நியூயார்க் துறைமுக நிறுவனத்தினர். உலகிலேயே ஓய்வில்லாமல் கப்பல்கள் வந்து போய்க் கொண்டிருக்கும் ஒரு துறைமுகத்தையும் இது நடத்து கிறது.

உலக வணிக நிலையத்தின் கோபுரங்கள் இந்த ஆண்டு கட்டி முடிக்கப்பெறும். பின்பு, அங்கு நூறுக்கும் மேற்பட்ட நாடுகளைச் சேர்ந்த அரை லட்சம் "குடித்தனக்காரர்கள்" இருப்பார்கள்; 30 வங்கிகள் செயல்படும்; நூற்றுக்கணக்கில் வணிக நிலையங்கள் இருக்கும். தினமும் 80,000 பேருக்கு மேல் இங்கு வந்து போவார்கள் எனக் கணக்கிடுகிறார்கள்.

நியூயார்க் துறைமுக நிறுவனத்தின் மாபெரும் புத்தம் புதிய கட்டடம்தான் உலக வணிக நிலையம். ஆனால், இந்த நிறுவனம், முன்பே, நான்கு விமான நிலையங்களும், ஆறு பாலங்களும் சுரங்கப் பாதைகளும், உலகிலேயே ஓய்வு ஒழிச்சல் இல்லாத ஒரு ரயில்வேயும், வேலை நாளில் தினமும் 2 லட்சம் பேருக்கு மேல் வந்து போகும் பஸ் நிலையமும் நடத்துகிறது. மேலும், நியூயார்க் நகரிலும், நியூ ஜெர்சி மாநிலத்திலும் துறைமுகங்கள் நடத்துகிறது. 1921–ல் நியூயார்க், நியூஜெர்சி மாநிலங்கள் சேர்ந்து நியூயார்க் துறைமுக நிறுவனத்தைத் தோற்றுவித்தன.

## 1350 அடி உயரம்!

உலக வணிக நிலையத்துக்கு வடிவம் வகுத்த கட்டடக் கலைஞர், மினேருயமசாக்கி என்னும் (ஜப்பானிய) அமெரிக்கர் தலைசுற்றச் செய்யும் 1,350 அடி உயரமுள்ளதாக நிலையத்தின் இரட்டைக் கோபுரங்களைக் கட்ட அவர் திட்டமிட்டார். இது, 102 மாடிகள் உள்ள "எம்பயர் ஸ்ட்டேட்" கட்டடத்தைக் காட்டிலும் சரியாக 100 அடி கூடுதல் (சிக்காகோ நகரில் உருவாகி வரும் "சீயர்ஸ் ரோபக்"

கட்டடம் 1,450 அடி உயரம் இருக்கும்.)

61 டன் எடை வரை தூக்கக்கூடிய ஆஸ்திரேலிய நாட்டு "கங்காரு" கிரேன்களைப் பயன்படுத்தி, உலக வணிக நிலையத்தின் பாகங்களை அலக்காகத் தூக்கி மேலே வைத்துக் கொண்டே போனார்கள். கட்டடத்தில் 104 "லிப்ட்டு"கள் உண்டு; ஒவ்வொன்றும் 5 டன் எடையுள்ளது; 55 பேர்களை ஏற்றிச் செல்ல வல்லது.

16 ஏக்கர் நிலப்பரப்பில் வணிக நிலையம் அமைந்திருக்கிறது. அளவில் எகிப்திலுள்ள மிகப் பெரிய "பிரமிடு" கோபுரத்துக்கு இணையானதெனலாம். வாணம் தேண்டுகையில் அகழ்ந்தெடுத்த 10 இலட்சம் கனகெஜம் மண்ணும் கல்லும் சேர்ந்து, கட்சன் ஆற்றோரமாகப் புதிதாக 24 ஏக்கர் பரப்பு நிலத்தைப் படைத்துள்ளது!

1970 டிசம்பர் முதலே "குடித்தனக்காரர்கள்" கட்டடத்தில் குடியேறத் தொடங்கிவிட்டார்கள். இரு கோபுரங்கள் நீங்கலாக, 800 அறைகள் உள்ள ஒரு பெரிய ஓட்டல் உண்டு. இதில் மாநாடு நடத்த வசதிகள், காட்சி மன்றங்கள், பல நாட்டுக் கடைகள், சிற்றுண்டிச் சாலைகள் முதலியன இருக்கும். வாடகைக்கு இடம் எடுத்துள்ளவர்கள் அனைவருமே அநேகமாக உலகளாவிய வாணிபத்தில் ஈடுபட்டுள்ளவர்கள்.

## வணிகக் கல்விக் கழகம்

வடக்குக் கோபுரத்தின் 55–வது மாடியில் உலக வணிகக் கழகம் இருக்கிறது. உலக வாணிபத்தில் தொடர்புள்ள பாடங்களிலும் கல்வியளிக்கும் தனியார் நிறுவனம், இது.

ஒரு வெளிநாட்டவர் இரட்டைக் கோபுரங்களையும் அண்ணாந்து பார்த்து, "அடேயப்பா, என்ன உயரம்! உலகின் ஒன்பதாம் அதிசயம் இதுதானோ!" என்று கூறி வியந்தார்.



---


## NOTICE

Statement of Ownership and other particulars about "RANI MUTHU", Madras.

1. Place of Publication: 1, Rundalls Road, MADRAS-7. 2. Periodicity of its Publication: Monthly. 3. Name of Printers: R. Baskaran, Indian 1, Rundalls Road, Madras-7. 4 & 5. Name of Publisher & Editor: B. Sivanthi Adityan, Indian. 1, Rundalls Road, Madras-7. 6. Name & Address of the Owner: RANI PUBLICATIONS, 1, Rundalls Road, MADRAS-7.

I, B. Sivanthi Adityan, here by declare that the Particulars given above are true to the best of my knowledge and belief. (Sd.) B. SIVANTHI ADITYAN, Publisher. Date: 1-3-1973.

# ஓடுங்கள்—
# உயிரைக் காத்துக் கொள்ள!

ஸ்டீவ் செண்க்மன்

நாள் முழுவதும் வேலை செய்த பின்னர், ஓய்வெடுப்பதற்கு, நீங்கள் ஒரு சாய்வு நாற்காலியில், ஏதேனும் ஒரு பத்திரிகையைக் கையில் வைத்துக் கொண்டு சாய்ந்து விடுகிறீர்கள் அல்லவா?

அது தவறு!

அப்படியானால் என்ன செய்ய வேண்டும்?

அரைக்கால் சட்டையும், ஒரு பனியனையும் அணிந்து கொண்டு உங்கள் வீட்டைச் சுற்றி ஓடுங்கள்.

என்ன விழிக்கிறீர்கள்? ஆமாம்! உண்மைதான்! இதை நான் கூறவில்லை, விஞ்ஞானம் கூறுகிறது.

அண்மையில், உழைப்பு—பொழுதுபோக்கு–உடற்பயிற்சி குறித்து, ஏழு நாடுகள் மாநாடு ஒன்று ரஷியாவில் நடைபெற்றது. 40 பேராசிரியர்களும், 100 நிபுணர்களும் மேற்சொன்ன முடிவை ஆமோதித்தனர்.

வேலை செய்து கொண்டிருக்கும்போதே, இடை நேரத்தில் சிறிதளவு உடற்பயிற்சிக்குச் செலவிட்டால், அது உடல் திறனை அதிகரிக்கும் என்றும் அவர்கள் கருத்துத் தெரிவித்தனர்.

## இது ஓய்வு அல்ல!

நாள் முழுவதும், தனது மேஜையில் அமர்ந்து வேலை செய்த பின்னர், ஒரு மனிதன் மாலைப் பொழுதில் நாற்காலியில் சாய்ந்து விடும்பொழுது என்ன நேர்கிறது? அவன் தான் ஓய்வெடுத்துக் கொண்டிருப்பதாக நினைக்கிறான். ஆனால், உண்மையில் அவன் தனது களைப்பையும், சோர்வையும் மேலும் அதிகமாக்கிக் கொண்டிருக்கிறான்.

எந்தெந்த அமைப்புக்களுக்கும், மண்டலங்களுக்கும் ஓய்வு தேவையில்லையோ, அவையும் இயங்காமல் இருந்து விடுகின்றன.

தசைகளுக்கும், இதயத்திற்கும், நுரையீரல்களுக்கும் இயக்க நட வடிக்கைகள் தேவைப்படுகின்றன; ஆனால், அவை கிடைப்பதில்லை.

இதற்கு மாற்று வழி என்ன?

செயலூக்கமுள்ள, சுறுசுறுப்பான ஓய்வே, வேலைச் சுமை ஏற் படுத்திய பாதிப்புக்களைப் போக்கவல்லது; அதாவது, உடலுக்கு எதிர்ச் சுமையை அளிக்க வேண்டும்.

இதற்கான சாதாரண வழிகள் விளையாட்டும், உடற்பயிற்சியுமே.

**ஓடுங்கள்!**

ஓட்டம்தான் மிகச் சிறந்த "எதிர்ச்சுமை' யாகும்.

உடல் திண்மையைப் பெருக்கும் பயிற்சிகள் அனைத்தும் பயனுள் ளவை என்றும், அவற்றுள் ஓட்டமே மிகச் சிறந்தது என்றும் மாநாட்டு நிபுணர்கள் முடிவுக்கு வந்தனர்.

ஒரே நிதானமாக ஓடுவது, இதயத்திற்கும், இரத்த ஓட்ட மண்ட லத்திற்கும் பெரும் பயனை அளிக்க வல்லது.

நீண்ட தூரம் மெதுவாக ஓடுவது, எல்லா ஆரோக்கியமான வர்களுக்கும் பரிந்துரைக்கப்படும் குறிப்பாகும். ஆனால், ஏதேனும் நோயினால் பாதிக்கப்பட்டு உள்ளவர்கள், வைத்திய மேற்பார்வை யிலேயே ஓட்டத்தை மேற்கொள்வது நல்லது.

இதய நோயால் பீடிக்கப்பட்ட நோயாளிகளுக்கும், சிகிச்சை யளிப்பதற்கு இந்த ஓட்ட முறையை வெற்றியுடன் பயன்படுத்தியுள் ளார், மாஸ்கோவைச் சேர்ந்த பேராசிரியர் பெலாயா என்பவர்.

இரத்த மிகு அழுத்தம், உடல் பருமன், ஆஸ்துமா, வாதநோய் ஆகியவற்றால் பீடிக்கப்பட்டு இருப்பவர்களுக்கும் ஓட்டம் சிறந்த பலனை அளிக்கும் என்று டாக்டர்கள் கூறுகின்றனர்.

எனினும், ஓட்டத்துடன் சேர்ந்து உடற்பயிற்சி, நீச்சல், நடை, விளையாட்டு ஆகியவற்றையும் ஒருங்கிணைத்தல் சிறந்த பலன்களை அளிக்கும் என்று நிபுணர்கள் கூறியுள்ளனர்.

உங்களுக்கு இதய நோய் பீடித்து விடுமோ என்ற அச்சம் உள் ளதா? உங்களைப் பாதுகாத்துக் கொள்ள, உங்கள் உயிரைக் காப் பாற்றிக் கொள்ள இப்பொழுதே ஓடுங்கள்!



# 55 இலட்சம் "முதலை" விற்பனை!

## போரிஸ் பிரிவலோவ்

ஒரு விளையாட்டு வீரன் மற்றவர்களைவிட வேகமாக ஓடினாலோ, அதிக உயரம் தாண்டினாலோ, அதிக பளுவைத் தூக்கினாலோ, அவன் ஒரு சாதனையை நிகழ்த்தி விட்டான் என்று நாம் கருதுகிறோம். ஆனால், ஒரு நகைச்சுவைப் பத்திரிகையின் சாதனையை எவ்வாறு அளவிடுவது? அதற்கு என்ன அளவுகோல்? ஒருவரின் புன்னகையே அதற்கு அளவுகோல் என்று சிலர் கூறலாம். ஆனால் எத்தனை புன்னகைகள் என்று கணக்கிட முடியுமா?...

ரஷியாவில் வயது வந்தவர்களுக்காக இருபது நகைச்சுவைப் பத்திரிகைகள் நடத்தப்படுகின்றன. மிகச் சிறிய 'மாரி' மாநிலத்தில் "பசேமிஷ்" ('குளவி') என்ற நகைச்சுவைப் பத்திரிகை உள்ளது. இது 'மாரி' மொழியிலும், ரஷிய மொழியிலும் வெளிவருகிறது. 7 இலட்சத்துக்கும் குறைவான இந்தக் குடியரசின் மக்கள் இடையே, இரு மொழி வெளியீடுகளும் சேர்ந்து மொத்தம் 2 இலட்சம் பிரதிகள் விற்பனையாகின்றன. ஒவ்வொரு 'மாரி' குடும்பத்திலும் "பசேமிஷ்" பிரதி ஒன்றை வாங்குகிறார்கள். எனவே, "பசேமிஷ்" இதழில் நிரம்ப நகைச்சுவை இருக்கிறது என்று தானே பொருள்?

தாஷ்கெண்டில் இருந்து "முஷ்தும்" (முஷ்டி) என்றொரு நகைச்சுவைப் பத்திரிகை வருகிறது. உஸ்பெக் மொழியில் வெளிவரும் இந்தப் பத்திரிகை, 5½ இலட்சம் பிரதிகள் விற்பனையாகிறது.

உக்ரேனில் இருந்த "மிளகு" என்ற நகைச்சுவைப் பத்திரிகை வருகிறது; அதன் ஒவ்வொரு பதிப்பும் 24 இலட்சம் பிரதிகள் விற்பனையாகிறது.

### முதலை

இது ஓர் உலக சாதனை என்று நீங்கள் எண்ணலாம். அப்படியல்ல. மாஸ்கோவில் இருந்து பத்து நாட்களுக்கு ஒருமுறை வெளிவரும் "குரோகடைல்" ('முதலை') என்ற நகைச்சுவைப் பத்திரிகையின் ஒவ்வொரு பதிப்பும் 55 இலட்சம் பிரதிகள் விற்பனையாகிறது! இந்தப் பத்திரிகையின் எல்லா இதழ்களும் சுடச்சுட விற்றுப் போகின்றன!

ரஷிய மக்கள் நகைச்சுவை உணர்ச்சி உள்ளவர்கள் என்பதற்கும்,

அவர்கள் சிரிக்க விரும்புகிறார்கள் என்பதற்கும், இது ஓர் எடுத்துக் காட்டு.

1922 ஆகஸ்டில் "குரோகடைல்" பத்திரிகை வெளிவந்தது. இன்று ரஷியாவில் தலைசிறந்த நகைச்சுவைப் பத்திரிகையாகவும், உலகிலேயே மிக அதிகமாக விற்பனையாகும் நையாண்டி இதழாகவும் "குரோகடைல்" திகழுகிறது. "குரோகடைல்", புத்தகங்களையும் வெளியிடுகிறது. இதுவரை 666 நகைச்சுவைப் புத்தகங்களையும் நையாண்டி நூல்களையும் அது வெளியிட்டு உள்ளது. உலகெங்கும் உள்ள நகைச்சுவை எழுத்தாளர்களின் படைப்புகளை நூல் வடிவில் அது வெளியிடுகிறது. எனவே, அனைத்து நாட்டு நகைச்சுவைக் களஞ்சியமாக "குரோகடைல்" வெளியீடுகள் விளங்குகின்றன.

**வலிமை தருவது**

முதல் சோவியத் கலாசார அமைச்சரான அனதோலி லூனசார்ஸ்கி ஒரு முறை கூறினார்:

"நகைச்சுவை என்பது வலிமையின் அடையாளம் மட்டும் அல்ல; வலிமையை அளிப்பதும் ஆகும்."



# எழுத்தாளர் அறிமுகம்

# மீ. ப. சோமு

சென்னை அகில இந்திய ரேடியோவின் நிகழ்ச்சி அமைப்புத் துறையில் முக்கியமான பதவி வகித்துவரும் ஆசிரியர் திரு. மீ. ப. சோமு (மீ. ப. சோமசுந்தரம்) அவர்கள், 1921-ல் திருநெல்வேலியில்



ஓ[illegible] [illegible]ற [illegible]க் குடும்பத்தில் பிறந்தவர். முறையான தமிழ்ப் புலமை[illegible] ஆங்கிலக் கல்வியும், வடமொழி, இந்தி ஆகிய மொழிப் புலமை[illegible] [illegible]யவர். சென்னைப் பல்கலைக் கழகத்தின் புலவர் பட்டமும் பெற்றுள்ளார்.

முப்பத்து இரண்டு ஆண்டுகள் ஒலிபரப்புத் துறையில் அனுபவம் பெற்றுள்ளதோடு, இங்கிலாந்து சென்று ஒலிபரப்புக் கலையில் சிறப்புப் பயிற்சியும் பெற்றவர். மேனாடுகளில் பரந்த சுற்றுப் பிரயாணம் செய்திருக்கிறார். சிற்பம், சங்கீதம், ஓவியம் ஆகிய கலைகளில் ஆழ்ந்த ஆராய்ச்சியுடையவர். சில ஆண்டுகள் "கல்கி" பத்திரிகையின் ஆசிரிய

ராகப் பணி புரிந்து அரிய பல தொண்டுகள் செய்திருக்கிறார். கட்டுரை, கதை, கவிதை, இலக்கிய ஆராய்ச்சி ஆகிய பல துறைகளிலும் அரிய படைப்புகள் செய்து, தமிழ் மக்களின் உள்ளங்களைக் கவர்ந்துள்ள ஒரு முன்னணி எழுத்தாளர், சிறந்த கவிஞர்.

இவர் பெற்றுள்ள பரிசுகள்: 1938–பாரதி தங்கப் பதக்கம்; 1940–ஆனந்த விகடன் சிறு கதைப் போட்டியில் முதல் பரிசு; 1948–சென்னை அரசாங்கத்தின் கவிதைப் பரிசு "இளவேனில்" என்ற இவரது கவிதை நூலுக்கு; 1961–சென்னை அரசாங்கத்தின் சிறு கதைப் பரிசு "கேளாத கானம்" என்ற கதைத் தொகுதிக்கு; 1963–சாகித்திய அகடாமிப் பரிசு "அக்கரைச் சீமையில்" என்ற பிரயாண நூலுக்கு.



## குடிகாரன் கணக்கு!

பிரான்ஸ் நாட்டில் அண்மையில் குடிப்பழக்கத்துக்கு எதிரான தேசியக் கமிட்டியின் நூற்றாண்டு விழா கொண்டாடப்பட்டது. அச் சமயத்தில் பிரெஞ்சு நாட்டில் குடிப்பழக்கம் எந்த அளவுக்கு உள்ளது என்ற புள்ளி விவரங்கள் வெளியிடப்பட்டன. அதன்படி ஒரு பிரெஞ்சுக் காரர் சராசரியாக ஒவ்வோர் ஆண்டிலும் அருந்தும் ஒயினின் அளவு 110 லிட்டர். இதில் பிரான்ஸ் உலகிலேயே முதலிடம் வகிக்கிறது.

ஆஸ்பத்திரிக்கு வரும் கேஸ்கள் அனைத்திலும் மூன்றிலொரு பகுதி குடிப்பழக்கத்தினால் கல்லீரல் பாதிக்கப்பட்டு நோய்க்கு உள்ளான கேஸ்களாகவே உள்ளன! தொழிற்சாலைகளில் நடைபெறும் விபத்துக்களில் குறைந்த பட்சம் 15 சதவீத விபத்துக்கள் குடிப்பழக்கத்தினாலேயே ஏற்படுகின்றன.

## பாம்புத் திருடர்கள்!

அமெரிக்காவிலுள்ள செயின்ட் பீட்டர்ஸ்பர்க் இடத்திலுள்ள மிருகக் காட்சிசாலையிலிருந்து இரண்டடி நீளமுள்ள ஒரு முதலையும், மூன்றடி நீளமுள்ள ஒரு முதலையும், ஒவ்வொன்றும் சுமார் ஏழு அடி நீளமுள்ள ஐந்து பயங்கர போவா பாம்புகளும், ஒரு மலைப்பாம்பும் திருடு போய்விட்டன. இவற்றைத் திருடிய திருடன் யார் என்று அந் நகரப் போலீசார் தேடி வருகின்றனர்!

மீ. ப. சோமு

எழுதிய

# சீதாமணி

இது துப்பறியும் காதல் அல்ல. தூய ஒரு பெண்மணியின் தூயக் காதல் கதை, இது. ஆனாலும், துப்பறியும் கதை போன்ற துடிப்புடன் மீ. ப. சோமு எழுதியிருக்கிறார்.

—ஆசிரியர்.

# 1 திருடர்கள் ஜாக்கிரதை!

இரண்டு மாதத்துக்கு முன்பு நள்ளிரவில் நவநிதியம் பாங்கில் ஒரு விசித்திரமான களவு நடந்தது!

பாங்கிலிருந்து களவு போவது என்றால் ஆயிரக்கணக்கில் இலட்சக் கணக்கில் நோட்டு நோட்டாகப் போயிருக்க வேண்டும் என்றுதானே நாம் எல்லாரும் எதிர்பார்ப்போம். அப்படியில்லை, இந்த விசித்திரமான களவு! உண்மையில் அந்தப் பாங்கிலிருந்து ஒரு சிறு நயாபைசாகூடக் காணமல் போகவில்லை! இரவு நேரத்திலே மிகவும் கஷ்டப்பட்டு, பூட்டுக்களையெல்லாம் உடைத்து வீரத் துணிவோடும் 'அரிய' திறமையோடும் உள்ளே நுழைந்த திருடர்கள், பணம் இருந்த பெட்டியின் பக்கமே போகவில்லை! நோட்டு நோட்டாகக் கட்டிப் பெட்டியிலே பூட்டி வைத்திருந்த அறை அப்படியே பூட்டியபடியே இருந்தது. யாரும் தொடவில்லை. அப்படியானல் காணமல் போன அந்த அதிசயமான பொருள் என்ன என்று நினைக்கிறீர்கள்? அந்தப் பாங்கின் சுவரிலே மாட்டித் தொங்கவிட்டிருந்த ஒரு படம்!

ஆமாம்! பாங்கில் பணம் கொடுக்கல் வாங்கல் நடந்து கொண்டிருக்கும் விசாலமான முகப்பு அறையில், மூன்று படங்கள் தொங்கிக் கொண்டிருந்தன. ஒன்று மகாத்மா காந்தியின் படம். நமது தேசத் தந்தையல்லவா? தமக்குப் பின்னல் தம்முடைய பரம்பரையானது பணத்தை எப்படி விநியோகிக்கிறது என்பதைப் பார்த்துக் கொண்டே மோனமாக நின்றார், தேசத் தந்தை. அவரது படத்திற்கு எதிர்ப் பக்கத்துச் சுவரிலே திருப்பதி வெங்கடாசலபதி. உலகின் தந்தை, நித்தம் படியளக்கிறவர்! இந்த உலகளந்த பெருமாள் மக்களின் பேராசையை மூன்றுவது அடியால் இன்னும் அளந்து கொண்டேயிருந்தார்! இந்த இரண்டு படங்களோடு மூன்றுவதாகத் தொங்கக் கூடிய பெருமைபெற்ற அந்தப் படம் எது தெரியுமா? அந்தப் படத்

தைத்தான் யாரோ திருடர்கள் திருடிக்கொண்டு போய்விட்டார்கள்! வெண்ணெய் திருடிய மாயவனையும், பாரத மக்களின் உள்ளத்தைக் கொள்ளை கொண்ட மகாத்மாவையும் விட்டுவிட்டு, அந்தத் திருடர்கள் அத்தனை பிரியத்தோடு திருடிய படம் எதுவென்றால், அதுவே ஒரு திருடர்களின் படம்! அதாவது திருடர்கள் பலரின் முகங்களை நமக்கு அறிமுகம் செய்வித்து, 'திருடர்கள் ஜாக்கிரதை' என்று எச்சரிக்கை செய்கிற படம், அது!

'திருடர்கள் ஜாக்கிரதை' என்றால் 'திருடர்களே ஜாக்கிரதையாக இருங்கள்' என்று அல்ல! 'திருடர்களிடமிருந்து ஜாக்கிரதையாக இருங்கள்' என்று பொதுமக்களான நமக்கு அறிவுறுத்துகிற எச்சரிக்கைச் சித்திரம் அது! அந்தப் படத்தைத் தான் யாரோ திருடிக் கொண்டு போய் விட்டார்கள்!

இந்த விநோதமான திருட்டு நடந்து இரண்டு நாள்களில் மறுபடியும் அதே படத்தின் பிரதி இன்னொன்றை இன்னொரு பாங்கிலே பார்த்தேன். அதற்குப் புதிதாகத் திருகு ஆணி போட்டு சுவரோடு சுவராகப் பதித்து வைத்திருந்தார்கள்—திருடத் தெரியாதவர்கள் யாரும் எளிதில் கொண்டு போய்விட முடியாதபடி! அந்த அதிசயமான படத்தில் திருடுவதற்கு என்ன அத்தனை அழகு இருக்கிறது என்று தெரிந்து கொள்ள எண்ணினேன், நான். ஆனால், பாங்கில் யாரும் அதை இலட்சியம் செய்யக் காணோம்!

திருடர்களின் படமே திருடு போய்விட்டது என்றால், அந்தப் படத்தைப்பற்றி எத்தகைய பரபரப்பு இருக்க வேண்டும்! ஆனால், இந்தப் பாங்கில் அப்படி ஒன்றும் காணவில்லை! ஒரு வேளை திருடு நடந்து இரண்டு நாள் ஆகிவிட்டதால் பரபரப்பு அடங்கியிருக்கலாம். அல்லது அந்தப் பாங்கில் புதிய படத்தைப் பத்திரமாக மாட்டிவிட்டதால், பரபரப்பு ஓசைப்படாமல் அடங்கியிருக்கக்கூடும். ஆனால், என் வரையில் படத்தைப் பார்த்த பிறகுதான் பரபரப்பு அதிகரித்தது என்று சொல்ல வேண்டும். அப்படிப்பட்ட முக்கிய காரணம் அந்தப் படத்திலே இருந்தது!

'திருடர்கள் ஜாக்கிரதை' என்ற அந்தப் படத்தைப் பார்த்தேன். சுமார் முப்பது முகங்கள் சிறுசிறு அளவில் மூன்று வரிசையிலே காட்சி தந்தன. அத்தனையும் திருடர்கள். "எந்த ஆண்டில், எந்த நூற்றாண்டில் எங்கே திருடினார்களோ, அந்த அந்த முகங்களையெல்லாம் ஒன்று சேர்த்து இப்படி வரிசைப் படுத்திப் படமாகப் போட்டிருக்கிறார்கள்!" என்று யாரோ

இதற்கு முன்பு சொன்ன ஞாபகம். அந்த ஞாபகத்தில் படத்தைக் கூர்ந்து பார்த்தேன். அப்படியே திகைத்துப் போய்க் கல்லாக நின்று விட்டேன்!

ஆமாம்! அந்த முப்பது முகங்களிலே இரண்டாவது வரிசையின் கோடியிலே தெரிந்த முகம், என்னை வியப்பில் ஆழ்த்தியது. அந்த முகம் இதற்கு முன்பு எங்கோ பார்த்த முகம். எங்கே என்றுதான் நினைவு வரவில்லை!

மூக்குக் கண்ணாடியைக் கழற்றிக் கைக்குட்டையினால் நன்றாகத் துடைத்துவிட்டுக் கொண்டு மறுபடி பார்த்தேன். படத்தின் பதிவு தெளிவாக இல்லாததால், அந்த முகத்தை நன்றாக ஆராய முடியவில்லை. ஏதோ தெரிந்த முகம்மாதிரி இருந்தது. என்றாலும், நினைவின் பதிவிலே தெளிவு இல்லை. நினைவின் மனப் படமும் அந்தப் புகைப்படம் மாதிரியே மங்கலாகத்தான் இருந்தது!

யோசிக்க ஆரம்பித்தேன். சில சமயங்களில் வாழ்க்கையில் இப்படி நேர்வதுண்டு. பார்த்த முகம் மாதிரி இருக்கும். ஆனால், உண்மையில் பார்த்திருக்க மாட்டோம். பழகியவர் போன்று ஒரு பிரமையுண்டாகும். ஆனால், அவரை அதற்கு முன்பு சந்தித்தே இருக்கமாட்டோம். பிறகு சிந்தித்துப் பார்த்தால் நமக்குத் தெரிந்த நண்பர் யாராவது ஒருவருடைய முகச்சாயல் சற்று அவரிடம் இருக்கும். இந்தச் சாயல் காரணமாக நம்மையே நம்முடைய மனம் ஏமாற்றிவிடும். இப்படித்தான் இந்தத் திருடனின் படமும் இருக்கக்கூடுமோ என்று ஒருகணம் எண்ணினேன்.

இவ்வாறு எண்ணிய போதுதான் பளிச்சென்று எனக்கு நவ நிதியம் பாங்கின் நிர்வாகி சிவசுந்தரமும் அவருடைய மனைவி சீதாமணியம்மாளும் என் மனக் கண்ணிலே தெரிந்தார்கள். அப்படியே ஒரு கணம் உடம்பு பதறியது!

சிவசுந்தரமும் சீதாமணியும் மனத்திரையிலே சுழன்றார்கள். அவர்களின் காதல் வாழ்க்கை, அந்த வாழ்க்கைப் பூங்காவிலே பின்னிப் படர்ந்த செடி, கொடிகள், வண்ண மலர்க் கொத்துக்கள், முட்புதர்கள், சமூக வேலிகள். பிறகு அந்த வேலிகளைத் தாண்டிப் பாய்ந்து வந்த வனவிலங்குகள், மனிதக் கரடிகள், வரிப் புலிகள், ஓநாய்கள், தைரியமில்லாத மனித ஆடுகள், ஆட் கொல்லிகள்—அடடா! சிந்திக்கச் சிந்திக்க எத்தனை விசித்திரமான வாழ்க்கை, அது!

தமிழ்நாட்டின் பண்பிலே தோய்ந்து மெருகேறியிருந்த ஒரு பெண்மணியானதால் அல்லவா சீதாமணி அத்தனை சோதனை வேள்விகளிலும் மாசற்ற தங்கமாகச் சுடர் விடுகிறுள் என்று எண்ணியதும், அந்த அம்மணி இருந்த திக்கை நோக்கிக் கரங்குவித்தேன்!

காலம் மாறலாம்; நாகரிகம் தேயலாம்; சமூகத்தின் உருவம் பிறழலாம். தமிழ்நாட்டில் எத்தனை எத்தனையோ புரட்சிகள் தோன்றலாம். என்ருலும், திடீர் மழையிலே பொங்கிவரும் வெள்ளங்களுக்கு மத்தியில் நுட்பமாக நெளிந்து தன்னுடைய வேரை விட்டுப் பெயர்ந்து விடாமல் தன்னைக் காப்பாற்றிக் கொள்கிற நாணற்கொடியைப் போன்று, இந்தப் புண்ணியத் தமிழ்நாட்டின் பெண்மைக் குலம் தனது தனிப்பண்பை நிலை பெயர விடாமல் என்றென்றும் காப்பாற்றிக் கொள்ளும் என்று எண்ணிக்கொண்டேன். அப்படியே என் கண்முன்பு நின்ற அந்தப் படத்துக்கு—ஆம், திருடர்கள் படத்துக்கு—அந்தத் திருடர்களிலே ஒரு திருடனுகைச் சமூகத்தின் கண் முன்னுல் காட்சி தருகிற அந்த ஒரு தனி உருவுக்கு—வணக்கம் செலுத்தினேன். என்னையும் மறந்து கை கூப்பினேன்! அடுத்த விஞடிதான் மீண்டும் தன் நினைவுக்கு வந்தேன்.

நல்லவேளை; நான் அந்தப் படத்துக்கு அப்படி ஓர் அஞ்சலி செலுத்தியதை யாரும் கவனிக்கவில்லை! இந்தப் பணக்கார உலகம் "செக்"குகளை மாற்றுவதிலேயே கவனமாக இருந்தது. அதனுல் நானும் என் அஞ்சலியும் தப்பினேம். இல்லையென்ருல், திருடர்கள் படத்துக்கு வணக்கம் செலுத்துகிற என்னை ஒரு பைத்தியக்காரன் என்றே எண்ணியிருப்பார்கள். அதற்கு இடமின்றி என் வணக்கமும் திருட்டுத்தனமாகவே நடந்தது! வணக்கத்தை முடித்துவிட்டு மறு பக்கம் திரும்பினேன். என்ன ஆச்சரியம்! சீதாமணி அங்கே கவுண்டரில் நின்று ஏதோ 'செக்' கை மாற்றிக்கொண்டிருந்தாள். இடையிடையே அந்த அம்மாள் பின்பக்கம் திரும்பிச் சுவரில் மாட்டியிருந்த அந்தத் திருடர்கள் படத்தைப் பார்த்ததைக் கவனித்தேன். அப்படி ஒவ்வொரு முறை பார்க்கும்போதும் அவள் முகத்திலே ஏற்பட்ட போராட்டத்தைப் புரிந்து கொண்டேன். அந்த நேரத்தில் அவளுடைய கண்ணில் பட்டால் ஆபத்து என்று கருதி, விறுவிறு என்று நடையைக் கட்டினேன். ஆனுல், அந்தப் படமும் அது எழுப்பிய வண்ண வண்ண நினைவுச் சுழல்களும் ஓடும் படமாக என் கண் முன்னே சுழன்றன!

# 2 யாதும் ஊரே யாவரும் கேளிர்!

இரவு முழுவதும் பெருமழை பெய்து விடிகிற நேரத்தில் நன்ருக வெறித்தால் அந்தச் சூரியோதயத்தின் வனப்பே ஆனந்த மயந்தான்!

அன்று அப்படியிருந்தது. முந்திய இரவு மழை விடாது பெய்தது; இடியும் மின்னலும் வானத்தையும் பூமியையும் அதிர்ந்து நடுங்கவைத்தன. அந்தப் பயங்கரத்தைச் சொல்லி முடியாது. ஆனுல், இரவு நீங்கிய தருணத்தில் எத்தகைய ஆனந்த மான அமைதி!

வானம் வழக்கத்தைவிட இன்னும் சற்றுத் தெளிவாக விளங்கியது. மேகங்கள் எல்லாம் கதிரவன் வருகிருன் என்று வானப்பாதையிலே விலகி வழி விட்டு ஒதுங்கி நின்றன. தங் கத்தையும் செம்பையும் சேர்த்து உருக்கி அந்தச் செம்பொன் குழம்பை வானவீதியெங்கும் தெளித்து நின்ருள், இயற்கை யன்னே! அங்கங்கே அழகழகான கோலங்கள்! வர்ண மெழுக்கு கள்! இயற்கையன்னேயின் கற்பனேயிலேதான் எத்தனே விதமான வர்ணங்கள்! அத்தனே வண்ண வண்ண நிறங்களும் வானத்திலே ஓவிய வனப்போடு காட்சி தந்தன!

உலகம் விழித்துக் கொண்டது. வீதியெங்கும் இரவு பெய்த மழை சிறு சிறு ஓடைகளிலே சந்தனமும் குங்குமமும் சேர்த் துக் குழைத்த மங்களக் குழம்பை ஓடவிட்டிருந்தது! சூரியனின் இளங் கிரணங்கள் அந்தச் சந்தனக் குழம்பிலே கரந்தொட்டு மங்கள வரவேற்பை ஏற்றுக் கொண்டன.

இரவெல்லாம் வீடுகளில் அடைபட்டுக் கண்துயின்ற மனித குலம், கூடுகளிலிருந்து விடுபட்ட பறவைகளேப் போல சிற கடித்து வெளியே வந்தது. இருளிலே மனதில் மூடிக் கிடந்த வாழ்வுக் கனவுகளேச் சிறு சிறு காகிதப் படகுகளாக வெள்ளப் புனலில் மிதக்க விட்டது, இந்த நாட்டின் எதிர்கால மன்னர் களாக விளங்கப் போகும் இன்றைய சிறுவர் உலகம்!

சென்னேப் பட்டினத்தின் தார்ரோடுகள் வெள்ளத்திலே குளித்துப் புதிய மினுக்குடன் காலே வெயிலிலே மேனி பள

ளக்க நெளிந்தன! கட்டுப்பாடு இல்லாது உயிர்வர்க்கத்தைச் மக்கக்கூடிய ஆற்றல் படைத்த பஸ்கள், பூமியின் பொறுமை யோடு போட்டி போட்டுக் கொண்டு அந்த மினுமினுக்கிற ாலைகளிலே பறக்க ஆரம்பித்தன. அப்படிப் பறக்க ஆரம்பித்த ஸ்களில் ஒன்றில் 'திருக்கழுக்குன்றம்' என்ற பலகை உதய ரியனுடைய கை பட்டுப் பொன்னுக மின்னுகிறது!

பஸ் சென்னையின் எல்லையிலே வளைகிறது. நகரத்தின் நாகரி கத்திலிந்து ஒரு பெரிய மாறுதல்; ஒட்டமும் வேகமும் நிறைந்த சென்னைப் பட்டினத்தின் அசுர வேகத்திலிருந்து தப்பியடித்துக் கொண்டு வந்த பஸ், அமைதியான அரச பாட்டையிலே வேக மாகவே வளைகிறது.

எத்தகைய மாறுதல்!

மனித நாகரிகத்திலேதான் மாறுதல்; சூழ்நிலையிலேதான் மாறுதல்; ஆனுல் மழை? சென்னைப் பட்டினத்திற்கு ஒன்றும் அதற்கு வெளியே ஒன்றுமாகப் பெய்யுமா! அதன் சமதர்மம் ந்தக் கிராமச் சாலையிலும் வெள்ளமாக ஓடிக் கொண்டிருக் றது! சாலையின் இருமருங்கிலும் நிற்கிற மருத மரங்கள் நேற்று இரவு பெய்த கடுமையான மழையின் பயங்கரக் கதையை யல்லாம் வார்த்தை வார்த்தையாகச் சொட்டுச் சொட்டாக திர்க்கின்றன!

இதோ! பஸ் மறுபடியும் இன்னொரு வளைவு வளைந்து ரும்புகிறது. மருத மரங்கள் மாறிப் பனை மரங்களும் வயல் களும் தெரிகின்றன. கண்ணுக்கு எட்டிய எல்லைவரை ஒரே பசுமை! அந்த வயல்களிடையே குதிபோட்டுக் கொண்டு செல் லும் மழைத் தண்ணீர்! போர்வை போர்த்தியவாறு நடந்து செல்லும் பெரிய மனிதர்கள் தோன்றுகிருர்கள். அவர்களுக்கு அப்பால் சாலையின் இறக்கத்திலே ஏர் பூட்டிய கலப்பைகளோடு செல்லும் உழவு மாடுகள்! அவற்றைச் செலுத்திச் செல்லும் உழவர்கள்!

தயிர்ப் பானையைத் தலையிலே தூக்கிச் செல்லும் பெண் கள்!

கூடை கூடையாகக் காய்கறிகளை ஏந்திச் செல்லும் தள்ளு வண்டிகள். அவற்றை இழுத்துச் செல்லும் மனிதர்கள். அந்தத் தள்ளுவண்டிகளோடு சேர்ந்தே மனிதரோடு தாங்களும் சரி நிகர் சமானம் என்ற பெருமையிலே சில வயதான காளைகள், மெத்தனமாக இழுத்துச் செல்லும் பார வண்டிகள், அவற்றி

லும் காய் கறிக் கூடைகளும் மூட்டைகளும்! எல்லாம் மனித குலத்தின் வளர்ச்சிக்கான தினப்படி உணவுப் பொருள்களைச் சுமந்து செல்கின்றன!

இவற்றையெல்லாம் இலட்சியம் செய்யாது செல்கிறது திருக்கழுக்குன்றம் பஸ். இதோ இன்னொரு வளைவு வருகிறது.

நெடுஞ் சாலையிலிருந்து தனியாகப் பிரிந்து ஒரு சிறு சாலை செல்கிறது. பஸ் அந்தச் சாலையின் திருப்பத்தில் நிற்கிறது. மறு விநாடி அந்தப் பஸ்ஸில் இருந்து சில சிறுவர்கள் இறங்குகிறார்கள்—கையில் புத்தகப் பையோடு! அவர்களை இறக்கி விட்டுவிட்டுப் பஸ் 'ஆரன்' அடித்தவாறு அங்கிருந்து புறப்படுகிறது.

பள்ளிச் சிறுவர்களைப் பின் தொடர்ந்து செல்கிறோம். எத்தனை வேகமாக நடக்கிறார்கள், அந்தப் பையன்கள்!

அதோ ஒரு பெரிய கட்டடம் தெரிகிறது. அதைச் சுற்றித் தான் எத்தனை அழகான தோட்டம்!

கட்டடத்தின் முகப்பு தெரிகிறது! "ஆண்டவன் நிலையம்" என்று பெரிய கொட்டை எழுத்துக்களிலே வளைந்த சந்திரன் வடிவில் எழுதியிருக்கிறது. அந்த முகப்பு வளைவிலே வண்ண மலர்க்கொடி பின்னிப் படர்ந்திருக்கிறது.

இதோ! பூட்டிய பெரிய கதவுகளைத் திறந்து கொண்டு கையிலே காகிதக் கப்பலோடு நாலைந்து சிறுவர்கள் ஓடி வருகிறார்கள். ஆண்டவன் நிலையத்தைச் சுற்றி எழுப்பியுள்ள மதில் சுவருக்கு வெளியே மழைத் தண்ணீர் ஓடிக் கொண்டிருக்கிறது. ஓடியே வந்த சிறுவர்கள் அந்தத் தண்ணீரிலே படகை விடுகிறார்கள். வேகமாக மிதந்து ஓடுகிறது காகிதப் படகு. சிறுவர்கள் துள்ளிக் குதித்துக் கொண்டே ஓடையின் கரையோரமாக அந்தப் படகைத் தொடர்ந்து தாங்களும் ஓடுகிறார்கள்!

இதோ படகு வளைகிறது! ஆரம்பத்திலே பஸ்ஸில் இருந்து இறங்கிய சிறுவர்கள் தொலைவிலிருந்து இந்தக் காட்சியைப் பார்த்துக் கொண்டே குதிபோட்டு ஓடிவருகிறார்கள். இப்பொழுது ஓடைத் தண்ணீர் இன்னொரு சிறிய ஓடையிலே கலந்து கொள்கிற விதத்தில் மதில்சுவர் வளைந்து திரும்புகிறது! காகிதப் படகு இன்னும் வேகமாகக் குதிபோட்டுக் கொண்டு ஒரு துள்ளுத் துள்ளி ஓடுகிறது. சிறுவர்களும் துள்ளுகிறார்கள். வளைந்து திரும்பி ஓடுகிறார்கள்.

இந்தச் சிறுவர்கள் அனைவரிலும் முன்னாக ஓடிய ஒரு

பையன் காகிதப் படகைத் தொடர்ந்தவாறு வேகமாக அந்த மதில் சுவரின் வளைவிலே மறுபக்கம் திரும்பினானோ இல்லையோ, அப்படியே மலைத்துப் போய் நிற்கிறான். மறு வினாடி, "டேய்! டேய்! எல்லாரும் ஓடி வாங்கடா" என்று கதறுகிறான். அவனுடைய கையும் காலும் பதறுகின்றன.

பையன்கள் அனைவரும் ஓடுகிறார்கள். இதற்குள் 'ஆண்டவன் நிலைய' த்திலிருந்து புதிதாக ஓடி வருகிற பெண் குழந்தைகளும் இவர்களோடு சேர்ந்து கொண்டு ஓடுகிறார்கள்.

பதறுகிற பையனை நெருங்கியதும் சிறுவர் சிறுமியரின் கூட்டம் அப்படியே நின்றுவிடுகிறது! எதிரே என்ன பார்க்கிறார்கள் அவர்கள்?

மழைத் தண்ணீர் பாய்ந்து ஓடுகிற அந்த ஓடையின் கரையிலே, ஆண்டவன் நிலையத்தின் மதில்சுவர் ஓரமாக, ஒரு பெண் மணி மயங்கிக் கிடக்கிறாள்.

முப்பந்தைந்து வயதிருக்கலாம்! அந்த முகத்திலே நினைவு மயங்கிக் கிடக்கிறது. புடவையும் உடம்பும் நன்றாக நனைந்து போய் ஜில்லிட்டுக் கிடக்கின்றன. அவளது கூந்தலும் நனைந்து போய்க் கிடக்கிறது. ஓடைத் தண்ணீர் ஏதோ ஒரு விவரம் தெரியாத இரக்கத்தோடு சற்று ஒதுங்கிப் பட்டும் படாமலும் ஓடுகிறது! சிறுவர்களின் காகிதப் படகு மட்டும் அந்த இடத்திலே வந்ததும் பெண்மணியின் பாதங்களிலே வந்து முட்டி நின்று விடுகிறது.

"ஐயய்யோ! பயமாயிருக்கே!" என்றான் ஒரு சிறுவன் கைகளை உதறிக் கொண்டே! "பாவமாயிருக்கு. அய்யா கிட்டே போய்ச் சொல்லுவமா?" என்றாள் ஒரு சிறுமி. முகத்தில் தாபம் படர்ந்தவாறு.

"எல்லோரும் வாங்க. ஓடியே போய் ஐயாகிட்டேச் சொல்லலாம்!" என்கிறாள். சற்று வளர்ந்த இன்னொரு சிறுமி.

"நீங்க எல்லாரும் போயிட்டு வாங்க. நான் இங்கேயே இருந்து இந்த அம்மாவைப் பார்த்துக் கொள்கிறேன்!" என்கிறாள். முதலிலே பேசிய சிறுமி.

சிறுவர் சிறுமியர் கூட்டம் வேகமாக ஓடுகிறது.

மயங்கிக் கிடக்கும் அந்த அம்மாளின் அருகிலே மழைத் தண்ணீர் சற்றும் வராதபடி மண்ணைக் கொண்டு அணை போடுகிறாள், சிறுமி. ஆர்வமும் இரக்கமும் பசலைக் குணங்களோடு

சேர்ந்து மழைத் தண்ணீரை விடப் பெரிய வெள்ளமாக அவளு டைய முகத்திலே நெளிந்து ஓடுகின்றன.

அணை போட்டு மழைத் தண்ணீரைத் தடுத்தநம், அந்தச் சிறுமி மயங்கிக்கிடக்கும் பெண்மணியின் முகத்துக்கு அருகிலே போய் உற்றுப் பார்க்கிறாள். நெற்றியைத் தன் பிஞ்சுக் கையினால் தொடுகிறாள். பெண்மணியின் மூக்கிலே விரல்களைக் கொண்டு வைத்து மூச்சு இழைகிறதா என்று சோதிக்கிறாள். ஒரு பெண் குழந்தைக்குப் பிறவியிலேயே அமைந்துள்ள தாய்மையின் பரி வோடு அந்தப் பச்சிளஞ் சிறுமி மயங்கிய பெண்மணிக்கு ஏதேதோ பசலைச் சிகிச்சைகள் செய்கிறாள்!

இதோ! சிறுவர் கூட்டம் மறுபடியும் வெளித் தோன்று கிறது. ஓடிக்கொண்டு வரவில்லை. பயபக்தியோடு வருகிறது.

காரணம் அந்தக் கூட்டத்தின் மத்தியிலே வயதான பெரிய மனிதர் ஒருவர் வருகிறார்—அவர்களுடைய 'ஐயா!'

தூய வெள்ளை ஜிப்பாவும் நீண்டு தொங்கும் கைகளுமாகப் பார்ப்பதற்குக் கண் நிறைந்த காட்சி அளிக்கிற தோற்றம். அறு பது வயதுக்குமேல் இருக்கலாம். நீண்ட முகம்; அந்த முகத் திலே அனுபவ முதிர்ச்சியின் ரேகைகள். அகன்ற நெற்றி; அந்த நெற்றியின் இரு ஓரங்களிலும் வந்து வளைந்து புரளும் நீண்ட முடி. "தேச சேவையிலே தலை நரைத்துப் போனவர்" என்று சொல்லுகிறார்களே; அப்படி வெள்ளை வெளேர் என்று தோன்று கிற அந்த முடியின் பின் பகுதி தாமரை இலைத் தண்ணீர் போலப் பற்றின்றி முதுகிலே புரள்கிறது. கண்களின் கூர்மை யைத் தாண்டிவிட்டுத் தொலை தூரத்தைப் பார்த்தவாறு வேகமாக வருகிறார் அவர்—சிறுவர் சிறுமியர் சூழ!

பெண்மணியின் அருகிலே அவர் வந்து சேர்வதற்குள் ஆண்டவன் நிலையத்தின் மறுபக்க வாசலைத் திறந்து கொண்டு ஐந்தாறு காவலாளர்கள் ஓடி வருகிறார்கள்.

ஐயா, பெண்மணியின் அருகிலே சென்று மூக்கில் இழைகிற மூச்சின் ஓட்டத்தைப் பார்க்கிறார். மறு விநாடி நனைந்துபோய் விறகுக் குச்சியைப் போன்று கிடந்த அந்த அம்மாளின் கையை மெதுவாக எடுத்து நாடிபார்க்கிறார். அவருடைய முகத்திலே வியப்பு, துயரம், குழப்பம்—எல்லாம் சேர்ந்து குழம்புகின்றன!]

"சங்கரா!" என்று கூப்பிடுகிறார்.

காவலாளர்களில் ஒருவன் அவருக்குப் பக்கத்திலே வந்து பணிவோடு நிற்கிறான்.

"நிலையத்துக்குள்ளே போய் நாலைந்து பெண்களை உடனே அழைத்து வா!" என்கிருர்.

சங்கரன் அகல்கிருன்.

"கந்தப்பா" என்கிருர். இன்னெரு காவலாளன் வருகிருன்.

"நிலையத்துக்குள்ளே போய் டாக்டர் அம்மாவையும் நர்சையும் தயாராக இருக்கச் சொல்லு!" என்கிருர்.

கந்தப்பன் செல்கிருன்.

"கன்னையா" என்கிருர்.

"நிலையத்துக்குள்ளே போய் அன்னபூரணி அம்மாளிடம் சொல்லு. இந்த அம்மாள் பத்து மாத கர்ப்பம் என்று தெரிகிறது!"

கன்னையன் வேகமாக நடக்கிருன்

இந்த நிகழ்ச்சிகள் எல்லாம் நடந்த சில நிமிட நேரத்தில் 'ஆண்டவன் நிலையத்துக்குள்ளே பரபரப்பு காண்கிறது.

இறைவனின் பெருங்கருணையைப் போல எல்லையற்றுப் பரந்து கிடக்கும் அந்த விசாலமான நிலையத்தின் கட்டடம் ஒவ்வொன்றிலும் வெளியே மனிதர்கள் கூடி ஏதோ 'கசமுச' என்று பேசிக் கொள்கிருர்கள். அந்தக் கட்டடத்திற்குள்ளே உள்ள நூற்றுக்கணக்கான சிறுவர் சிறுமியர்கள் அமைதியாக ஓசைப்படாமல் அங்கங்கே நிற்கிருர்கள். ஆனுலும்; எல்லாருடைய முகத்திலும் ஒரு கலவரம் காண்கிறது. இத்தனைக்கும் காரணம் நிலையத்தின் தலைவரான 'ஐயா' என்றும் இல்லாதபடி இன்று, மாபெரும் கவலையிலே ஆழ்ந்து, முகம் எல்லாம் வெளுத்துப் போய்க் காணப்படுகிருர் என்பதுதான்!

ஆமாம்; அந்தப் பெண்மணியை 'ஆண்டவன் நிலையத்'துக்குள்ளே கொண்டுவந்த வினடியிலிருந்து ஐயாவுக்கு நிம்மதியில்லை. முன்பின் தெரியாத ஒரு பெண்மணி தமது நிலையத்தை நாடி இந்த மழையிலே நடந்து வந்து, மதில் சுவருக்கு வெளியே மயங்கி விழுந்திருக்கிருளே என்ற நினைவு அவருடைய உள்ளத்தைத் துன்புறுத்துகிறதா?

'ஆண்டவன் நிலையத்'தின் ஆஸ்பத்திரி வளைவிலே ஒரு கோடியில் இருந்தது, மகப்பேறு நிலையம்! அதன் திண்ணை நெளிவிலே ஒரு சாய்வு நாற்காலியில் உட்கார்ந்து "என்ன ஆயிற்ருே?" என்ற கவலையிலே சோர்ந்து சாய்ந்திருக்கிருர்,



மயங்கிக் கிடந்த பெண்ணின் அருகில் சென்று, அவளைத் தூக்கினார் ஐயா.

ஐயா. உள்ளே அறை பூட்டியிருக்கிறது. நர்சுகள் போவதும் வருவதுமாக இருக்கிறார்கள். எல்லாருடைய முகத்திலும் பரபரப்பு!

ஐயா தம் முகத்தைத் தூக்கி ஒவ்வொரு விநாடியும் அறையின் கதவைப் பார்க்கிறார். சாத்தப்பட்டிருக்கும் சன்னலைப் பார்க்கிறார். அவருடைய நெற்றியிலே கவலை பலவிதமாக நெளிகிறது.

இதோ சன்னல் திறக்கப்படுகிறது. "குவாகுவா!" என்று ஓர் அழுகைக்குரல் வருகிறது! பெரியவரின் முகத்தில் கவலை மாறி அமைதி அரும்புகிறது.

"ஐயா!" என்று கூப்பிட்டுக்கொண்டே அந்த நேரத்தில் அங்கே ஓடோடியும் வருகிறாள், ஆண்டவன் நிலையத்துச் சிறுமிகளில் மிக மிகத் துடியான தேவகி என்ற ஒரு நான்கு வயதுப் பெண் குழந்தை! அவளுடைய கையில் ஒரு ரோஜாப் பூ!

"ஐயா! உங்களை எங்கெல்லாம் தேடுகிறது, நான்! இன்னிக்கி ஏன் என்னோட பூவை நீங்க இன்னம் வாங்கிக்கலே!, இந்தோ!" என்று சொல்லிக் கொண்டே அதிகாலையில் பூத்த அந்த ரோஜாமலரைத் தன் கையிலிருந்து பெரியவர் கையிலே கொடுக்கிறாள்! ஒவ்வொரு நாளும் அதிகாலையில் எழுந்ததும் தேவகியின் முதலாவது அன்புப் பணி அது!

"ஏம்மா கண்ணு! என்னை எல்லா இடத்திலேயும் தேடீட்டியா இன்னிக்கி!" என்று எல்லையற்ற பரிவுடன் கேட்டார், பெரியவர்.

"ஆமான்னு! இந்த நிலையத்திலே ஒரு மூலை பாக்கியில்லாமத் தேடினேன்! கடைசியிலே நீங்களானு ஆஸ்பத்திரியிலே வந்து உட்காந்திருக்கீங்க! ஆமாம், ஏன் இன்னிக்கி பசங்க எல்லாம் ஒரு மாதிரியா இருக்காங்க ஐயா!" என்று கேட்டாள், தேவகி.

"ஒன்றுமில்லே; இந்த ரோஜாப்பூவைப் போல இன்னொரு ரோஜாப்பூப் பூத்திருக்கு!"

"ரோஜாப்பூப் பூத்தா அதுக்காக எல்லாரும் கவலைப் படணுமா! என்ன சொல்றீங்க, ஐயா நீங்க!" என்று கேட்டாள், தேவகி.

ஆஸ்பத்திரி நர்ஸ் சுமதி வெளியே வந்தாள்.

"என்ன சுமதி! சந்தோஷச் செய்திதானே?" என்று கேட்

டார், ஆண்டவன் நிலையத்தின் உயிர் நாடியான ஐயா. இதற்குள் அன்னபூரணி அம்மாளும் அங்கே வந்து விட்டார்.

"என்ன அன்னபூரணி! ரோஜாப்பூ பூத்தா அதற்காக ஏன் எல்லாரும் கவலைப்பட வேணும் என்று தேவகி கேட்கிறாள்!) இவளுக்கு என்ன பதில் சொல்லுவது?" என்று கேட்டார், பரிவோடு, பெரியவர்.

"புதிய ரோஜாப்பூ பூத்தது. ஆனால் அந்த ரோஜாச் செடி நேற்றுப் பெய்த மழையிலே சரிந்து விழுந்து விட்டது" என்றாள், அன்னபூரணி.

"என்ன! என்ன!" என்று பதறியவாறு கேட்டார், ஐயா.

"ஆமாம். சந்தோஷச் செய்தியோடு சேர்த்து அந்தத் துயரச் செய்தியையும் உங்களுக்குச் சொல்ல வேண்டியதிருக்கிறது. குழந்தை பிறந்தது. பெண் குழந்தை. முகம் பால்வடிகிறது. சூரியோதயம் ஆனதுபோல இருக்கிறது! ஆனால் தாய் தான் குழந்தையை விட்டுப் பிரிந்து சென்றுவிட்டாள்!"

அன்னபூரணி அம்மாள் இப்படிச் சொன்னபோது உள்ளே அறையிலிருந்து "குவா குவா" என்று பச்சிளம் பசலை வீறிட்டு அழுதது!

துயரம் நிறைந்த இந்த உலகுக்குத் தன்னை அனுப்பிவிட்ட விதியை நினைந்து அழுததா? அல்லது தன்னை விட்டுப் பிரிந்த அருமை அன்னையை நினைந்து அழுததா?— யாருக்குத் தெரியும்?

அந்தக் குழந்தைக்கே அத்தகைய அழுகையின் பொருள் தெரியாது!

உலகில் பிறக்கின்ற ஒவ்வொரு குழந்தையும் அழுது கொண்டுதான் பிறக்கிறது! அப்படித்தான் இந்தக் குழந்தையும் அழுதது. ஆனால், பெரியவருக்கு இந்த அழுகை அப்படித் தோன்றவில்லை. அவருடைய கண் துயரத்தினால் கலங்கியது.

"அன்னபூரணி! சுமதியைக் கூப்பிடு. பாவம் குழந்தையின் அழுகையைக் கேட்கவே என்னால் முடியவில்லை. சுமதியைக் கூப்பிட்டுக் குழந்தையைக் கவனித்துக் கொள்ளச் சொல்!" என்றார்.

அவரது கவலையைப் புரிந்துகொண்டு சுமதியே அறையிலிருந்து அங்கே வந்தாள்.

"குழந்தை நன்றாக இருக்கிறது. நீங்கள் கவலைப்படாதீர்கள்!" என்று சொல்லிக் கொண்டு அவசரமாக மீண்டும்

குழந்தை இருந்த அறைக்குள்ளே சென்றாள், சுமதி என்ற அந்தத் தாதி.

பெரியவருக்கு இப்பொழுது கொஞ்சம் நிம்மதி தோன்றியது, முகத்தில்! அன்னபூரணியிடம் ஏதோ சொல்ல ஆரம்பித்தார்.

"ஐயா! நான் கொடுத்த பூவை வாசனை பாக்கவே இல்லையே நீங்க! ஏன் அப்படி!" என்று இடை மறித்தாள், தேவகி.

முகத்தில் முறுவல் தோன்ற ஐயா தேவகி கொடுத்த ரோஜா மலரை மூக்கிலே கொண்டு நன்றாக நுகர்ந்து பார்த்தார்.

"பேஷ்! வாசனை பிரமாதமாக இருக்கிறது! இப்பொழுது தான் மலர்ந்திருக்கிறது! சபாஷ் தேவகி" என்று சொல்லித் தேவகியின் ரோஜா மலர் போன்ற இளம் கன்னங்களைக் கிள்ளி விட்டுக் கொஞ்சலோடு அவளை அங்கிருந்து அனுப்பினார்.

மறுவினாடி அன்னபூரணி அம்மாளை அழைத்துக் கொண்டு வேகமாக நடந்தவாறு இரண்டு கட்டடங்களைத் தாண்டிக் கொண்டு தமது அறையிலே நுழைந்தார், ஐயா.

அந்த அறையின் வாசல் முகப்பில் தொங்கிய பலகையிலே கீழ்க்கண்ட வரிகள் பளிச்சென்று எழுதப்பட்டு, உள்ளே நுழைகிறவர்களை வரவேற்றன:

"யாதும் ஊரே யாவரும் கேளிர்!"

# 3 பாட்டும் படமும்

'உலகம் எல்லாம் நமது ஊர்; இந்த உலகத்தில் உள்ளவர்கள் அனைவருமே நம்முடைய உறவினர்கள்' என்று இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் ஒரு தமிழ்ப் புலவர் எண்ணினார். உலகத்தின் அளவுக்கு விரிந்து பரந்த அவருடைய விசாலமான உள்ளம் கண்ட அந்தக் கனவுதான் "யாதும் ஊரே யாவரும் கேளிர்" என்ற சொல் மலராகப் பூத்தது. அந்தக் கொள்கை ஆண்டவன் நிலையத்துக்கு எவ்வளவு பொருத்தமானது!

ஆண்டவன் நிலையத்தின் அருமைக் குழந்தைகளையும் அங்கே வாழ்கின்ற திக்கற்ற பெண்களையும், தொண்டர் விடுதியையும்,

இலவச மருத்துவ நிலையத்தையும், மற்றச் சூழ்நிலைகளையும் பார்த்தால் மேற்கண்ட எண்ணந்தான் நம் உள்ளத்தில் தோன்றி எழும். அந்த நிலையத்தின் தலைவரான ஐயா அவர்களைப் பார்த்துப் பேசிப் பழகிவிட்டாலோ இந்த எண்ணம் நன்றாக உறுதிப் பட்டுவிடும்! இந்த உலகிலுள்ள ஊர்கள் அனைத்தும் ஐயா அவர்களின் ஊர்கள்: இந்த உலக மக்கள் அனைவரும் அவருடைய உறவினர்கள் என்று சொல்லத் தோன்றும்—அவரோடு நெருங்கிப் பழகியவர்களுக்கு! "யாதும் ஊரே யாவரும் கேளிர்" என்ற அந்தப் பாட்டுக்கு அவரே பதவுரையும் பொழிப் புரையும் உருவகமுமாகிக் காட்சி தருகிறார்!

அப்படிப்பட்ட ஐயா இப்போது அந்தவரிகளை ஏதோ புதிய ஒரு பாடலைப் படிப்பதுபோல உரக்கப் படித்துக் கொண்டே ஒரே சிந்தனையிலே புன்னகை செய்தார்.

"அன்னபூரணி! 'இந்தப் பாடலுக்கு இன்றுதான் முழு அர்த்தம் பிறந்திருக்கிறது. இதுவரைக்கும் இந்த வார்த்தைகளுக்கு இப்படிப்பட்ட ஆழமான பொருள் இருக்கக்கூடும் என்று நான் சிந்தித்ததே இல்லை" என்றார், ஐயா.

அன்னபூரணி அம்மாள் ஐயாவின் சாய்வு நாற்காலிக்கு எதிரே இருந்த சோபாவில் திகைப்போடு உட்கார்ந்தாள். ஐயாவின் கருத்து என்ன என்று அவளுக்குச் சரியாகப் புரியவில்லை.

ஐயா சொன்னார்:

"இங்கு உள்ளவர்கள் அனைவருக்கும் இந்த ஆண்டவன் நிலையந்தான் ஊரும் உலகமும்! இங்கு உள்ள குழந்தைகள் எல்லாருக்கும் அன்னபூரணி அம்மாள்தான் தாயும் தந்தையும்!, என்றாலும்..." என்று ஆரம்பித்தார், ஐயா.

"என்ன, அப்படிச் சொல்லுகிறீர்கள், நீங்கள் என்னை முக்கியப் படுத்திப் பேசுவதே உங்கள் வழக்கமாகிவிட்டது! ஏன் அப்படிச் சொல்லுகிறீர்கள்? இந்த நிலையத்தில் உள்ள குழந்தைகளுக்கு மட்டும் அல்லாமல் வயதான என் போன்றவர்களுக்குமே தாயும் தந்தையும் நீங்கள்தான்! அதில் என்ன சந்தேகம்?" என்று உணர்ச்சியோடு கேட்டாள், அன்னபூரணி!

"அதற்குச் சொல்லவில்லை, அன்னபூரணி! இதுவரை இங்கு வளர்ந்துள்ள குழந்தைகளுக்கும் இப்போது வளரப் போகும்

குழந்தைக்கும் ஒரு முக்கிய வித்தியாசம் இருக்கிறது. அதைத் தான் சொல்ல வந்தேன்!" என்று கூறிவிட்டு, நெற்றியைப் பிசைந்தவாறு ஒரு நிமிடம் யோசனை செய்தார் ஐயா. பிறகு சொன்னார்:—

"இங்குள்ள குழந்தைகளுக்கு நம்மை யார் எவர் என்று தெரியாது. என்றாலும், நமக்கு இந்தக் குழந்தைகளைப் பற்றி ஓரளவு தெரியும். ஆனால் இன்று நம் நிலையத்துக்கு வந்துள்ள புதிய குழந்தை இவ்வகையிலும் ஒரு புதிய உயிர்தான்! இந்தப் பெண் குழந்தைக்கு நாம் யார் என்று தெரியாது. அது போலவே நமக்கும் இந்தக் குழந்தை யார் என்று ஒன்றுமே தெரியாது! குழந்தையின் தாயாரையாவது நன்றாகப் பார்த் தாயா? முகத்தை நன்றாகக் கவனித்தாயா?" என்று ஆவலோடு கேட்டார், ஐயா!

அன்னபூரணி சொன்னாள்:

"கவனித்தேன். பரம்பரை பரம்பரையாகப் பிறவியிலேயே உண்டாகி வளர்கிற தமிழ்நாட்டின் சிறந்த மனப் பண்புகளை அந்த அம்மாளின் முகத்திலே கண்டேன். ஏதோ ஒரு பெரிய வீட்டுப் பெண். பெரிய குடும்பத்திலே பிறந்தவள் என்று தோன்றுகிறது. தமிழ்க் குலத்தின் பண்பாடு என்று சொல்லு வார்களே, அது அந்த முகத்திலே நன்கு துலங்குகிறது. ஆனால், கையிலும் கழுத்திலும் எந்தவிதமான 'நகை நட்டும்' இல்லை— மாங்கலியத்தைத் தவிர! என்ன துயரமோ, என்ன இடையூறு களோ, பாழும் விதி அந்த அபலையை என்னென்ன அனுபவங் களுக்கெல்லாம் உள்ளாக்கியதோ, தெரியவில்லை! இந்த அனாதை விடுதியை நாடி அவள் வரவேண்டிய காரணம் என்னவோ! பல நாள் யாரையோ தேடித் தேடிக் களைத்துக் கண்டுபிடிக்க முடியாமல், உடலும் உள்ளமும் சோர்ந்துபோன ஏக்கமும் ஏமாற்றமும் அவளிடம் கண்டேன்! யாரைச் சென்று தேடி னாளோ, யாருக்காக ஊரெல்லாம் அலைந்து மறுகினாளோ, பாவம், ஒரு செய்தியும் தெரியவில்லை. ஒரு வேளை அவளுடைய கணவன் அவளைக் கைவிட்டு எங்கேயும் சென்று விட்டானோ என்னவோ! அவனைத் தேடித்தான் ஊர் ஊராகத் திரிந்திருப் பாள் போலிருக்கிறது! எண்ணிப் பார்க்கவே பரிதாபமாக இருக்கிறது!"—இப்படி அன்னபூரணி சொல்லும்போது அவளு டைய கண்கள் கலங்கின.

ஐயா சொல்லுவார்:

"அந்தப் பெண்மணியின் கழுத்தில் தாலிச் சரடு இருந்ததை

நானும் கவனித்தேன். அத்தனை துயரங்களுக்கு மத்தியிலும், அந்த மயக்க நிலையிலுங்கூட அவள் அந்தச் சரட்டைக் காப் பாற்றித்தான் வந்திருக்கிருள்! நமது புண்ணியத் தமிழ்நாட்டுப் பெண் குலத்தின் பெருமையை எப்படித்தான் வியந்து போற்று வது! எண்ணிப் பார்க்கவே மெய் சிலிர்க்கிறது! அவளுடைய முகத்தில் ஒரு பிரகாசம்! அவளுடைய நெற்றியிலே தனது பரம்பரையின் பெருந்தன்மை! அதை நன்முகப் பார்த்தேன். அந்தப் பெருந்தன்மையை விட ஒரு பெண்ணுக்கு வேறு என்ன உயர்ந்த ஆபரணம் உண்டு, இந்த உலகில்? அவளை நிர்க்கதியாக விட்ட கணவன் மற்ற நகைகளையெல்லாம் பறித்துக் கொண் டான் போலும்! ஆனுல், இந்தக் கற்புக்கரசியின் பெண்மைப் பெருந்தன்மையை மட்டுந்தான் அவனுல் பறித்துக் கொள்ள முடியவில்லை!"

ஐயாவின் குரல் கம்மிற்று. அன்னபூரணி சொன்னுள்:

"உண்மை, மரணத்தினுல்கூட அந்த ஒப்பற்ற குண நகையை அவளுடைய முகத்திலிருந்து கவர முடியவில்லை. இப்போதும் அந்த முகத்தைப் பார்த்தால்...! அதை எப்படிச் சொல்வது? ஐயா, நீங்களே வந்து பாருங்கள். உயிர் பிரிந்து விட்டதாகவே அந்த முகத்தில் தெரியவில்லை. மாசு மறுவற்ற பெருந்தன்மை இன்னும் அந்த முகத்திலே அவளுடைய நெற்றியிலே ஒப்பற்ற ஒரு நவரத்தின ஆபரணமாக ஒளி வீசிக் கொண்டிருக்கிறது! அதைப் பார்க்கப் பார்க்க...!"

"வேண்டாம், அதை வர்ணிக்காதே! உயிர் பிரிந்துவிட்ட பிறகு எனக்கு அந்த நற்பண்புகளையெல்லாம் பற்றிக் கேட்கவே கஷ்டமாக இருக்கிறது. வயதாகிறது அல்லவா எனக்கு? என் முதுமையின் பலவீனத்தினுல் இப்பொழுதெல்லாம் இதயத்திற் குத் துயரத்தைத் தாங்குகிற சக்தியே இல்லாமல் போய்விட் டது. அதன் குற்றந்தான் என்று நினைக்கிறேன். நீ அந்தப் பெண் ணைப் பற்றிச் சொல்லச் சொல்ல என் நெஞ்சத்தில் ஏதோ வேதனை செய்கிறது. குத்தல் எடுக்கிறது. நீ போ. உடனே போய் டாக்டர் அம்மாளிடமும் சுமதியிடமும் சொல்லி அந்தப் பெண்மணியின் சடலத்துக்கு வேண்டிய வைத்தியப் பரிசோதனை சடங்குகளை முடிக்க ஏற்பாடு செய். சற்று நேரத்துக்கு முன்பு தேவகி ஒரு பனி மலர் கொண்டு வந்து கொடுத்தாள் அல் லவா? அது இதோ இருக்கிறது! இந்த மலரை ஈன்ற ரோஜாச் செடி நேற்றுப் பெய்த மழையிலே சரிந்து விட்டது என்று சொன்னுய் அல்லவா? அந்த ரோஜாச் செடிக்கு அருகிலேயே இந்த மனித ரோஜாச் செடியையும் அடக்கம் செய்து விடு.

அதில் ஒரு பொருள் இருக்கிறது. இந்தா, இந்த மலரை நீயே எடுத்துக் கொள். யார் என்று உலகுக்குத் தெரியாத அந்தப் பெண்மணியின் உயிரற்ற சடலத்துக்கு ஆண்டவன் நிலையத்து இந்தக் கிழவனின் இறுதி மரியாதையாக இந்தப் பனி மலரை அந்த உடம்பிலே வைத்துவிட்டு, என் பிரார்த்தனையோடு உடலை அடக்கம் செய்துவிடு!''

இவ்வாறு சொன்னார், ஐயா. அவருடைய கண்ணிலிருந்து ஒரு சொட்டுக் கண்ணீர் அந்தப் பனிமலரை நனைத்தது!

ஐயாவின் அறையை விட்டு வெளியே வந்ததும் அன்ன பூரணி அம்மாள் நேரே ஆண்டவன் நிலையத்து மருத்துவ விடு தியை நோக்கி நடந்தாள்.

அவளுடைய மனம் ஒரு நிலையில் இல்லை.

சகோதரி அன்னபூரணி அம்மாள் இந்த உலகின் சுக துக் கங்களை அனுபவிப்பதற்காக இல்லறத்தில் நீண்ட நாள் ஈடு பட்டுக் குடும்பம் என்றும் குடித்தனம் என்றும் நடத்தவில்லை. அவளது வாழ்க்கை தமிழ்க் குலத்தின் தியாகத்துக்கும் சீலத்துக் கும் உதாரணமாக விளங்குகிற வாழ்க்கை. சிறுவயதில் இந்த உலக வாழ்வின் முதலாவது சோகம் அவளைத் தாக்கியது. இளம் வயதிலேயே கைம்பெண் ஆகிவிட்ட அன்னபூரணிக்கு அன்றில் இருந்து அறிவு நிரம்பிய அவளுடைய தாய் தந்தையர் அவளது மன அமைதிக்கு உகந்த முறையிலே அவள் வாழ்வை வகுத்துக் கொடுத்தார்கள்.

''அன்பர் பணி செய்யஎனை
ஆளாக்கி விட்டுவிட்டால்
இன்பநிலை தானே வந்து
எய்தும் பராபரமே''

என்ற பாடலையே இலட்சியமாகக் கொண்டு அன்பர் பணியிலே ஈடுபட்டாள், சகோதரி அன்னபூரணி. அந்த ஆண்டவன் நிலையம் சிறிய ஓர் ஆசிரமமாகத் தொடங்கியது. இன்று அத்தனை பெரிய நிலையமாக, நூற்றுக்கணக்கான அனாதைகளுக்குப் புக லிடமாகவும், நூற்றுக்கணக்கான குழந்தைகளுக்குத் தாய் வீடாகவும், திக்கற்ற நோயாளிகளுக்கும் ஆதரவற்ற ஏழை களுக்கும் இலவச மருத்துவ நிலையமாகவும், வறிய குழந்தை களுக்கு அன்போடு கல்வி வழங்குகிற ஓர் அறச்சாலையாகவும் விளங்குகிறது என்றால், அத்தனைக்கும் காரணம், அவளது

தளராத பணியும், அந்தப் பணிக்கெல்லாம் உயிர்நாடியாக விளங்கக்கூடிய ஐயாவின் அன்பும் ஆதரவுமே!

ஆமாம்; வாழ்வின் ஆரம்பத்திலே அன்னபூரணி அம்மாளைத் துயரம் தாக்கியது. அந்தத் துரதிருஷ்டமே பிறகு ஒரு பெரிய அதிர்ஷ்டமாகவும் மாறியது. இல்லையென்றால் இன்று அத்தனை பெரிய தியாக வாழ்விலே அவள் இவ்வளவு பெரிய இன்பத்தைக் காணும் வாய்ப்பு இல்லாமல் அல்லவா போயிருக்கும்? இப்படித்தான் ஐயா அடிக்கடி அன்னபூரணியின் வாழ்வை விமரிசனம் செய்வார்.

ஐயா—ஆம், அன்னபூரணி அம்மாள்தான் முதன் முதல் அவரை 'ஐயா' என்று அன்போடு அழைத்தாள். பிறகு அந்த நிலையத்திலே உள்ள மற்றப் பெண்களும் அவரை அப்படியே அழைத்தார்கள். அந்த நிலையத்தின் குழந்தைகள் அவரை 'ஐயா' என்றார்கள். இன்று அங்குள்ள அத்தனை நூறு குழந்தைகளுக்கும், பெண்களுக்கும், அனாதை மனிதர்களுக்கும் அவர் 'ஐயா' தான்!

அன்னபூரணி அம்மாள் பலமுறை தன் மனத்துக்குள்ளேயே நினைத்துக் கொள்வாள்; ஆண்டவன் தன் விஷயத்தில் உண்மையிலேயே பெரிய கருணையைத்தான் வழங்கியிருக்கிறான். இத்தனை மகத்தான ஒரு பெரியவரைத் தனக்குப் பக்கபலமாகவும், வழி காட்டியாகவும்,ஆதரவாகவும் வழங்கிய இறைவனின் கருணைக்கு ஈடு இணை ஏது? இப்படி எண்ணி எண்ணி அன்னபூரணி அம்மாள் மகிழ்வது உண்டு.

அவள் மட்டுந்தானா? அந்த ஆண்டவன் நிலையத்திலே உள்ள குழந்தைகளையும் பெண்களையும், ஏழை மனிதர்களையும் போலவே, அந்த நிலையத்தின் தோட்டத்திலே உள்ள கிளிப் பிள்ளைகள், அங்கே உல்லாசமாகத் தோகை விரித்து ஆடிக் கொண்டே நடமாடுகிற மயில்கள், துள்ளித் துள்ளி ஓடுகிற வண்ண மான்கள், புதர்களுக்குள்ளே கண் பொத்தி ஆடுகிற முயல்கள்—அத்தனைக்கும் ஐயா என்றால் தனியான களிப்புத் தான்!

மயிலை அவர் அன்போடு வருடுவதும், மான்களுக்கு அருகிலே சென்று புல் கொடுப்பதும், முயல் குட்டிகளை எடுத்து மடியிலே வைத்துக் கொண்டு கொஞ்சுவதும், அந்த ஆண்டவன் நிலையத்தில் சாதாரணமாகக் காலை மாலை நேரங்களில் இயல்பாகப் பார்க்கக்கூடிய காட்சிகள். அந்நிலையத்தில் அவர் ஓர் இலட்சிய புருஷர். அதன் தலைவர் என்றும் அதிபர் என்றும்

அழைக்கப்பட்டாலும், உண்மையில் அவர் அந்த ஆண்டவன் நிலையத்தின் மனித தெய்வம்.

அப்படிப்பட்ட ஐயா இவ்வளவு தூரம் துயரத்திலே மூழ்கி இப்படியெல்லாம் கவலையோடு பேசியது அன்னபூரணியின் உள்ளத்தைத் துன்புறுத்தியது.

'ஏன் நம் ஐயா வழக்கமான நிம்மதியோடு இல்லை! இதை விடப் பெரிய துயர நிகழ்ச்சிகளையெல்லாம் பார்த்துப் பழகியவர், அவர்! பிறரின் துயரங்களிலே அனுதாபப்படக் கூடியவர் என்பது உண்மைதான்! ஆனாலும், இந்தப் பெண்மணி மழையிலே மயங்கி விழுந்து கிடந்ததும், பிறகு இந்தக் குழந்தையை உலகிற்குக் கொடுத்துவிட்டு அவள் மறைந்துவிட்டதும் ஐயாவை இவ்வளவு தூரம் பாதித்து விட்டனவே? ஏன் அப்படி? முதுமையேதான் காரணமா? எந்தச் சூழ்நிலையிலும் கலங்காத அவர் உள்ளம் எவ்வளவு கலங்கிவிட்டது! முதுமை மட்டுந்தானா இதன் காரணமாக இருக்கக் கூடும்?'

இவ்வாறு ஏதேதோ பல காரணங்களை எண்ணிக்கொண்டு நடந்தாள். அன்னபூரணி. அவள் மனதில் ஐயாவின் கலக்கம் அத்தனை பெரிய குழப்பத்தை உண்டாக்கிவிட்டது!

ஐயா சொன்ன வார்த்தைகள்கூட அவளை அத்தனை குழப்பவில்லை. அன்று காலையிலிருந்து அவர் முகத்திலே படர்ந்து நின்ற விவரிக்க முடியாத ஒரு சோகப் படலம்—அதைப் பார்க்கப் பார்க்க, அதை நினைக்க நினைக்க, அன்னபூரணி நிலை கலங்கினாள்!

அன்னபூரணி எழுந்து சென்றதும் ஐயா தமது சாய்வு நாற்காலியிலிருந்து எழுந்தார். வாசற் கதவுக்கு அருகில் சென்று, இரண்டு கதவுகளையும் அறைக்குள் இருந்தபடியே பூட்டித் தாள் போட்டார்.

மீண்டும் மேஜைக்கு அருகே தமது சாய்வு நாற்காலிக்கு வந்து உட்கார்ந்தார். தாளிடப்பட்டிருந்த அந்த அறையில் ஏகாந்தமான சூழலிலே ஐயா தமது மேஜையைத் திறந்து அதிலிருந்த ஒரு 'போட்டோ ஆல்ப'த்தை எடுத்தார்.

தாமும், தமது மனச்சான்றும், தம்மைப் படைத்த ஆண்டவனுமே சாட்சியாக அந்த 'ஆல்ப'த்தின் ஏடுகளை ஒவ்வொன்றாக மிக ஆவலோடு புரட்டிக் கொண்டே வந்த ஐயா, ஒரு குறிப்பிட்ட பக்கம் வந்ததும் புரட்டுவதை நிறுத்தினார்.

கண்கள் கலங்கின. இதயத்திலிருந்து விம்மல் வந்தது. பொருமினர்.

அப்படியே 'ஆல்ப'த்தின் அந்தக் குறிப்பிட்ட ஏட்டை நெஞ்சோடு சேர்த்து அணைத்துக் கொண்டே சாய்வு நாற்காலியில் சாய்ந்தார், ஆண்டவன் நிலையத்தின் அதிபர் ஐயா!

# 4 சுமதியின் தீர்மானம்

"இந்த முடிவுக்கு நீ வந்தது உறுதிதானா? நன்றாக யோசித்து விட்டாயா?" என்று கேட்டாள், டாக்டர் மீனாட்சி, சுமதியைப் பார்த்து.

"ஆமாம். அதில் எள்ளத்தனையும் சந்தேகமில்லை. நன்றாக யோசித்து விட்டேன். இனிமேல் யோசிப்பதற்கே ஒன்றுமில்லை!" என்று உறுதியோடு கூறினாள், சுமதி.

மாலை ஆறுமணி இருக்கும். அது வைகாசி மாதம்; பவுர்ணமி! புத்தரைப் போன்ற மகான்களும், பல சித்தர்களும் பிறந்த புண்ணியதினம். அது மட்டுமில்லை. பிறந்ததோடு மட்டுமில்லை. பிறவியின் கடலைத் தாண்டி ஞானோதயம் பெற்ற புண்ணிய நாளும் இதே வைகாசிப் பவுர்ணமிதான். அந்தப் புண்ணியமான பவுர்ணமி இரவிலேதான் சுமதி அப்படிப்பட்ட ஒரு பெரிய தீர்மானத்துக்கு வந்து, அதை டாக்டர் மீனாட்சியிடம் சொன்னாள். டாக்டருக்கு வியப்பாக இருந்தது.

"உன் கையில் உள்ள அந்தக் கடிதத்தை எதற்காகக் கிழித்தெறிய வேண்டும்? விருப்பமில்லை என்று பதில் எழுதிவிட்டாலே போதுமே! அதற்காக அந்தக் கட்டளைக் கடிதத்தைக் கிழித்தெறிய வேண்டுமா, என்ன!" என்று சிரித்துக் கொண்டே கேட்டாள், டாக்டர்.

"இல்லை, டாக்டர். இந்த 'ஆர்டர்' கையிலேயே இருந்தால் அடிக்கடி சபலம் ஏற்பட்டுக் கொண்டேயிருக்கும். ஏதோ வாழ்க்கையில் ஒரு பெரிய வாய்ப்பை இழந்துவிட்டோம் என்று கூறிக்கொண்டேயிருக்கும், இந்தக் கடிதம். இதைக் கிழித்தெறிந்து விட்டால் அத்தோடு அந்த நினைப்பே தீர்ந்தது, பாருங்கள். சபலத்துக்கே இடமில்லாமல் போய்விடும் அல்லவா!" என்றாள் சுமதி.

"அது சரி; ஆனாலும், இந்த வயதில் உனக்கு எப்படி இத்தனை உறுதி வந்தது என்பதுதான் எனக்கு ஆச்சரியமாக இருக்கிறது!" என்றாள், டாக்டர்.

"என்னைப் பாராட்டாதீர்கள். உண்மையில் இந்தத் தீர்மானத்துக்கு நான் வர நேர்ந்ததற்கு முக்கிய காரணம் இன்னொருவர்தான்! நான் இல்லை!" என்றாள் சுமதி.

"என்ன! பெரியவரே உன்னை இந்த மாதிரி உறுதியெடுத்துக் கொள்ளும்படி சொன்னாரா?" என்று ஆவலோடு கேட்டாள், டாக்டர் மீனாட்சி.

"இல்லை! அவர் அப்படிச் சொல்லவில்லை, நான் ஏற்கனவே செய்துவிட்ட முடிவுக்கு அவர் கொடுத்த ஒரு பொறுப்பு ஊக்கமும் வலிமையும் கொடுத்தது. உங்களுக்கு நேரம் இருந்தால் விரிவாகச் சொல்லுகிறேன்!" என்ற சுமதி மீண்டும் தொடர்ந்தாள்:

"டாக்டர்! என் வாழ்க்கை ஒரு விசித்திரமான வாழ்க்கை. என்னிடம் நீங்கள் இத்தனை அனுதாபத்தோடு பழகுவதால் உங்களிடம் அதைச் சொல்ல நான் கூசவில்லை. என்றாலும், ஒரே கவலை மட்டும் எனக்கு உண்டு. அதாவது உங்களுக்கு இருக்கிற எத்தனையோ தொல்லைகளுக்குள் என் துயரங்களையும் சொல்லி உங்கள் மனத்தை நான் துன்பப்படுத்தக் கூடாதே என்பதுதான்!" என்றாள், சுமதி.

"இல்லை. நீ நினைப்பது தவறு. நமது துயரத்தைப் பிறருக்கு எடுத்துச் சொல்லும்போது நமது மனத்திலுள்ள பாரம் குறைகிறது. அதுபோலவே பிறர் ஒருவரின் துய்ரத்தைக் கேட்டு அதற்காக அனுதாபப்படும்போதும் நம் உள்ளத்தின் சுமை குறைகிறது. இது ஒரு நுட்பமான மனதத்துவம். இந்த மனதத்துவத்தினால்தான் உலகில் ஒருவருக்கொருவர் அனுதாபம் என்றும், இரக்கம் என்றும் அன்பு என்றும் வளர்வதற்கு இடம் செய்திருக்கிறது இயற்கை! இந்தப் படைப்பு இரகசியத்தை அறியாதவர்கள்தான் பிறரின் சுக துக்கங்க்ளில் பங்கு கொள்ளாமல் தனித்து வாழ ஆசைப்படுகிறார்கள்! நான் அப்படியில்லை. சொல்லப்போனால் இந்த ஆண்டவன் நிலையத்தின் இலட்சியமே தனித்து வாழ்கிற முறையை நீக்கி, நாம் எல்லாம் உறவினர்களாக ஒரே குடும்பமாக வாழவேண்டும் என்பதுதானே?" என்றாள், டாக்டர் மீனாட்சி!

சுமதி சொன்னாள்:

"டாக்டர்! பெண் குழந்தைகள் அதிகமாகப் பிறந்துவிட்ட ஒரு குடும்பத்தில் நான் பிறந்தேன். இந்தத் துர்ப்பாக்கியத்தினுல் நான் பட்ட தொல்லையைவிட என் தகப்பனுர் அனுபவித்த தொல்லைதான் அதிகம். ஏன் இப்படிச் சொல்லுகிறேன் என்ருல், என்னைப்போலவே என் அக்காள் தங்கைகளும் படிப்பிலே ஊக்கம் செலுத்தினுர்கள். வீட்டிலே அடை பட்டுக் கிடப்பதை விரும்பாமல், நன்ருகப் படித்து வாழ்க்கையிலே முன்னேற வேண்டும் என்று ஆசைப்பட்டார்கள். இது காரணமாக என் மூத்த சகோதரியை பி. ஏ. வரை படிக்க வைத்தார், என் தந்தை. ஏராளமாகப் பொருள் செலவாயிற்று. பிறகு அவளுக்காக வரன் தேடுகிற முயற்சி நடந்தது. சாதாரணமான ஒரு பெண்ணுக்கே பொருத்தமான கணவன் அகப்படுவது கஷ்டம். இந்நிலையில் அந்தக் காலத்தில் பி. ஏ. வரை படித்துவிட்ட ஒரு பெண்ணுக்கு வரன் அகப்படுவது என்ருல் எளிதா? தகப்பனுர் மிகவும் கஷ்டப்பட்டார்.

"அக்காளுக்கோ வயது ஆகிக்கொண்டே வந்தது. சமூகத்தின் பழிச் சொல்லுக்கும் உறவினர்களின் வசவுக்கும் குறைவில்லாத நிலையில், அக்காளுக்கு இருபத்தெட்டு வயது வரை கலியாணம் ஆகவில்லை! அந்தக் கவலையிலேயே எங்கள் அம்மா காலமானுள். பிறகு அக்காளுக்கும் மன வியாதி பற்றிக் கொண்டது. கடைசியில் சயரோகம் கண்டு அவளும் இறந்தாள்!

"நான் எங்கள் குடும்பத்தில் இரண்டாவது பெண். எனக்குப் பிறகு ஐந்து தங்கைகள்.

"என் தகப்பனுர் வக்கீல் குமாஸ்தாவாக இருந்து ஓய்வு பெற்றவர். அவரது சிறிய வருவாயில் இத்தனை பெரிய குடும்பத்தையும் நிர்வாகம் பண்ணி இத்தனை பேரையும் படிக்க வைத்து எப்படி முன்னுக்குக் கொண்டு வருவது?

"நான் எஸ். எஸ். எல் சி. தேறிக் கல்லூரியில் சேர்ந்து படிக்க ஆரம்பித்தபோதே என்னை ஒரு நல்ல இடத்தில் பெண் கேட்டார்கள். கலியாணம் முடித்து விடலாம் என்று அப்பா கருதினுர். ஆனுல், என் விருப்பமோ வேறு விதமாக இருந்தது.

"டாக்டர், உங்களிடம் மனம் விட்டுச் சொல்லுகிறேன். நான் கல்லூரியில் சேர்ந்த புதிதிலேதான் அந்த மாணவரை முதன் முதலாகச் சந்தித்தேன். அவர் பெயர் சுந்தரமூர்த்தி! இராமனுதபுரத்தைச் சேர்ந்த ஒரு கிராமத்திலிருந்து எங்கள் ஊரான மதுரைக்குப் படிக்க வந்திருந்தார். அதிகம் வளர்த்தாமல் சொல்லுகிறேன். வாழ்வில் அவ[illegible]ஹவிர இன்னெருு

வரைத் திருமணம் செய்து கொள்வதில்லை என்று என் மனத்துக்குள் நான் தீர்மானம் செய்து கொண்டேன். ஆனால், குடும்ப நிலையோ அதற்கு இடம் தரவில்லை.

"சுந்தரமூர்த்திக்கும் எங்களுக்கும் சாதி வித்தியாசம் இருந்ததால், எங்களுக்குள் கலப்பு விவாகம் நடைபெற்றால் என் தங்கைகளுக்குத் திருமணம் நடைபெறுவதில் பிறகு தொல்லைகள் ஏற்படும். இது ஒரு பெரிய சிக்கலாக நின்றது. இதற்கு மத்தியில் எங்கள் அப்பாவோ வேறு இடத்திலே என் திருமணத்தை முடித்துவிட வேண்டும் என்று விரும்பினார். இந்த நிலையில் என்ன செய்வது என்று ஒன்றுமே புரியாமல் குழம்பினேன், கடைசியில் ஒரு நாள் அப்பாவிடம் ஒரு தீர்மானத்தைச் சொன்னேன்.

'அப்பா! எனக்கு ஆஸ்பத்திரியில் நர்ஸ் வேலை செய்வது மிகவும் பிடித்திருக்கிறது. எனக்குத் தெரிந்த ஒரு டாக்டர் அம்மாள் மதுரையிலிருந்து சென்னைக்கு மாற்றலாகிப் போகிறாள். அவள் தன்னோடு வந்து இருக்கும்படி என்னிடம் சொல்லுகிறாள். நர்ஸ் வேலைக்குப் படிக்க வைத்துப் பிறகு அவளே என்னைத் தன்னுடன் அமர்த்திக் கொள்வதாகச் சொல்லுகிறாள். எனக்கு அனுமதி கொடுங்கள். கூடியவரை திருமணத்தைப் பற்றியே என்னிடம் பேசாதீர்கள். என்னால் உங்களுக்கும் தங்கைகளுக்கும் எவ்விதத் தொல்லையும் பாரமும் இல்லாமல் நான் நடந்துகொள்வேன். இது உறுதி!' என்று அப்பாவிடம் சொன்னேன்.

"டாக்டர், எங்கள் அப்பாவை எனது முடிவை ஒப்புக்கொள்ளும்படி செய்வதற்கு நான் பட்டபாடு கொஞ்ச நஞ்சமல்ல. ஏதேதோ சமாதானங்கள் எப்படி எப்படியெல்லாமோ சொல்லிக் கடைசியில் ஒரு வகையாக அவரை ஒப்புக்கொள்ளும்படி செய்துவிட்டு நான் சென்னைக்கு வந்தேன்.

"எனக்குத் தெரிந்த டாக்டர் அம்மாள் என்று ஒரு பொய் சொன்னேன் அல்லவா? உண்மையில் எனக்கு அந்த யோசனையைச் சொன்னதே சுந்தரமூர்த்திதான். சட்டக் கல்லூரியில் சேர்வதாக இருந்தார். நல்ல செல்வம் மிகுந்த குடும்பம், அவர் குடும்பம். அவர் ஏதேதோ உதவிகள் எனக்குச் செய்வதாக எல்லாம் சொன்னார். ஆனால் அதையெல்லாம் விட எனக்கு முக்கியமாகத் தோன்றியது அவருடைய, அவருடைய...டாக்டர் அதுதான் என்ன என்று எனக்குச் சொல்லத் தெரியவில்லை!

அழகான பலர் இந்த உலகில் உண்டு.

அவரைவிடப் படித்தவர்கள் பலர் இருக்கிறார்கள். பார்த்திருக்கிறேன். அவரைவிடப் பணக்காரர்கள் பலரைக் கண்டிருக்கிறேன். ஆனால், இந்த நிமிடத்திலுங்கூட அவரை நினைத்தால் என் உள்ளத்தில் ஏதோ ஒரு பாசம்—இன்னது என்று விவரித்துச் சொல்ல முடியாத ஒரு உணர்ச்சி...''

"சரி மேலே சொல்லு!'' என்று இடைமறித்தாள், டாக்டர் மீனாட்சி! அப்பொழுதுதான் சுமதிக்கும் தான் எதைச் சொல்ல ஆரம்பித்து எதிலே சிக்கிப் போனோம் என்பது புலனாயிற்று.

"மன்னிக்க வேண்டும், டாக்டர். அதெல்லாம் பழங்கதை. நான் சென்னைக்கு வந்ததும் ஆண்டவன் நிலையத்திலே சேர்ந்ததும், பிறகு குடும்பத்தோடு எனக்கு ஏற்பட்ட சச்சரவும்—அதெல்லாம் ஒரு நீண்ட புராணம். அதைச் சொல்ல நான் விரும்பவில்லை. இரண்டு நாளைக்கு முன்னால் சுந்தரமூர்த்தி மதுரையிலிருந்து எழுதிய கடிதத்தில் ஒரு கண்டிப்பு இருந்தது. சர்க்கார் ஆஸ்பத்திரியில் அவரே கடும் முயற்சிகள் செய்து எனக்கு உத்தியோகம் வாங்கிக் கொடுத்திருப்பது எங்கள் இருவரின் எதிர்காலத்தையும் உத்தேசித்துத்தான் என்று அவர் குறிப்பிட்டிருந்தார். நேற்று அந்த உத்தியோக உத்தரவும் வந்துவிட்டது என்பது உங்களுக்குத் தெரியும் ஆனால்...''

"ஆனால் நீ அங்கே போவதில்லை என்று தீர்மானித்தது தான் எனக்கு இப்பொழுது வியப்பாக இருக்கிறது. அதைத்தான் உன்னிடம் நான் கேட்டேன்!'' என்றார், டாக்டர் மீனாட்சி.

"டாக்டர்! நான் மதுரைக்குப் போவதில்லை என்பது என் முதலாவது தீர்மானம். எனது இரண்டாவது தீர்மானம், வாழ்வில் இனி விவாகமே செய்துகொள்ளப் போவதில்லை!''

"என்ன! என்ன! என்ன சொல்லுகிறாய் சுமதி!'' என்று கேட்டுக்கொண்டே நிமிர்ந்து உட்கார்ந்தாள், டாக்டர் மீனாட்சி.

"ஆமாம். அதைப்பற்றிச் சந்தேகமே இல்லை. எது ஏதானாலும் சரி, எனது இந்த முடிவு மாறாது!''

இவ்வாறு சுமதி சொல்லும்போது அவளுடைய முகத்தில் ஒரு வீரமே எழுந்து பேசியது.

"சுமதி! நான் சொல்லட்டுமா? இன்று காலை புதிதாக நடந்த இந்த எதிர்பாராத பிரசவமும், தாயின் மரணமும் பால் வடியும் அந்தக் குழந்தையின் முகமும் சேர்ந்து நம் ஐயாவின்

மனதில் பெரிய பொறுப்பையும் கவலையையும் உண்டாக்கி விட்டன. இனிமேல் இந்த அனாதைக் குழந்தையை, தாயற்ற சிசுவை வளர்த்து ஆளாக்கவேண்டிய பொறுப்பு அவரை மிகவும் வேதனைப்படுத்தியிருக்கும். அந்தப் பொறுப்பை உன்னிடம் ஒப்படைத்திருப்பார். நீயும் உனது இயல்பான இரக்க சுபாவமும் சேர்ந்து இந்த முடிவுக்கு வந்ததாகவே எனக்குப் படுகிறது. இதில் ஆச்சரியமில்லை. நான் அப்படித்தான் நினைக்கிறேன். இனி இந்த அனாதைக் குழந்தையை ஆளாக்குவது ஒன்றுதான் உன் வாழ்வின் இலட்சியம் என்று பெரியவர் உன்னிடம் சொல்லியிருப்பார். நீயும் அதற்கு இசைந்து இந்த மகத்தான தியாகத்தைச் செய்ய ஒப்புக் கொண்டிருப்பாய். அப்படித்தானே?" என்று கேட்டாள், மீனாட்சி.

"டாக்டர், பெரியவர் அப்படித்தான் நினைத்துக் கொண்டிருக்கிறார். அவர் என்னிடம் சொன்ன அன்பு வார்த்தைக்குக் கட்டுப்பட்டுத்தான் நான் இப்படி ஒரு தீர்மானத்தைச் செய்துவிட்டதாக அவர் இப்பொழுது நினைக்கிறார். அதில் தவறில்லை. அவர் சொன்னதற்காக நான் இப்படி ஒரு மகத்தான முடிவுக்கு வந்தேன் என்று எண்ணி அவர் மகிழட்டும். ஆனால், உண்மையான காரணம் அது இல்லை.

"டாக்டர்! அந்தக் குழந்தையின் தாயை எடுத்து அடக்கம் செய்யப் போகும்போது, அந்த அம்மாளின் மடியிலிருந்து ஒரு கடிதத்தைக் கண்டெடுத்தேன். அந்தக் கடிதந்தான் என்னையும், என் மனதையும், மனித வாழ்வைப் பற்றிய கொள்கையையும் அடியோடு மாற்றிவிட்டது!

"டாக்டர் உங்களிடம் மனம் விட்டுச் சொல்லுகிறேன். அந்தக் கடிதத்தை இரகசியமாக எடுத்துப் போய் என் அறையில் தனியாக இருந்து படித்தேன். படிக்கும்போதே அழுதேன். படித்துவிட்டும் அழுதேன். இப்பொழுது அதை நினைத்தாலும் அழுகை பொங்கிக் கொண்டு வருகிறது. என் இதயமே வெடித்து விடும்போல் இருக்கிறது.

"டாக்டர், அந்தக் கடிதத்தைப் பார்த்த வினாடியில் இருந்து மதுரையை மறந்தேன். சுந்தரமூர்த்தியை மறந்தேன். என் சொந்த வாழ்வு, என் புதிய உத்தியோகம் அத்தனையும் காற்றிலே பறந்து போயின. எனது உண்மையான இலட்சியம் எது என்பதை அந்த வினாடியே கண்டுகொண்டேன். அதனால் தான் சொல்லுகிறேன். இந்தக் கடிதத்தை, மதுரையிலிருந்து வந்துள்ள இந்த உத்தியோகக் கட்டளையைக் கிழித்து எறிந்து விடவேண்டும்!" என்றாள், சுமதி.

டாக்டர் மீனுட்சியின் முகத்தில் ஆவலும் கவலையும் பன்மடங்கு அதிகரித்தன. "அது சரி. ஆனாலும், இங்கே பார்த்து வருகிற உத்தியோகத்தைவிட உனக்கு இப்பொழுது வந்துள்ள உத்தியோகம் உயர்வானது. உன் எதிர்காலத்தை உத்தேசிக்கும் போது மதுரையில் நீ வாழ்க்கை நடத்துவதுதான் உனக்கு நல்லது. வீணுக உன் வாழ்வை இப்படித் தியாகம் செய்து கொள்ள வேண்டுமா?" என்ருள்.

டாக்டர் மீனுட்சி இவ்வாறு சொன்னதும் சுமதியின் கண்களில் ஆத்திரம் கனன்றது. "டாக்டர்! என் தீர்மானத்தை இனி யாராலும் மாற்ற முடியாது. அந்தக் கடிதம் அத்தனை உறுதியை எனக்கு உண்டாக்கிவிட்டது!" என்ருள்.

சுமதியின் வார்த்தைகளிலே ஒலித்த தீர்மானம் டாக்டரின் ஆவலை இன்னும் பன்மடங்கு ஆக்கிற்று. "மறைந்து சென்ற அந்த அன்னையின் மடியில் அப்படிப்பட்ட கடிதம் என்ன இருந்தது?"

டாக்டர் மீனுட்சி இந்தக் கேள்வியைக் கேட்டு முடிப்பதற்குள் சுமதியின் கண்களிலிருந்து பொல பொலவென்று கண்ணீர்த் திவலைகள் உதிர்ந்தன. அப்பொழுது "சுமதி" என்ற குரல் கேட்டது.

டாக்டர் மீனுட்சியும் சுமதியும் திரும்பிப் பார்த்தார்கள்.

ஆண்டவன் நிலையத்தின் நந்தா விளக்கான ஐயா பரிவும் கருணையும் நிரம்பியவராய் இவர்களை நோக்கிப் புல்வெளியிலே நடந்து வந்து கொண்டிருந்தார்.

# 5 பெற்ற தவம்

அன்று கோகுலாஷ்டமி. ஆண்டவன் நிலையம் உல்லாசமாகக் காட்சியளித்தது! கட்டடங்களில் எல்லாம் வண்ண வண்ணக் காகிதப் பூக்களும் ஓலைக் குருத்துக்களுமாகத் தோரணங்கள் அழகு செய்தன! மாவிலைகளும் குலைகளும் அங்கங்கே பொலிவோடு தொங்கின. சுவர்களில் எல்லாம் வர்ணப் பூச்சுக்கள் பளபளத்தன.

ஆண்டவன் நிலையத்துச் சிறுவர் சிறுமியர்கள் புதுப்புது வர்ண விசித்திர ஆடைகள் அணிந்து, குதி போட்ட வண்ணம் அங்குமிங்கும் ஆனந்தமாக ஓடிக்கொண்டிருந்தார்கள்.

அன்று கண்ணன் பிறந்த நாள். உலகை உண்ட மாயன் இந்த உலகிலே அவதரித்த புனிதத் திருநாள்! உலகைக் காக்கும் ஒரு பெருங் கடவுள் உலகிலே வந்து வாழப் பிறந்த புனித தினம்! உலகையெல்லாம் பரிபாலிக்கிற திருமால், உலக மக்களின் பரிபாலனத்தை நாடித் தெய்வக் குழந்தையாக வந்து தவழ்ந்த பேரானந்தத் திருவிழா!

ஆண்டவன் நிலையத்திலே தரையெல்லாம் மெழுகிக் கோலமிட்டு இருந்தார்கள். மாக் கோலங்கள் மஞ்சள் வர்ணத்தையும் இணைத்துக் கொண்டு ஒய்யாரமாக நெளிந்தன. மனித வாழ்வின் முக்கிய கட்டங்களும் திருப்பங்களும் போலக் கோலப் பொட்டுக்களும் கோடு நெளிவுகளும், பற்பல விதங்களாக நிலப்பரப்பிலே வளைந்து சென்றன.

தெய்வக் குழந்தையின் பாதச்சுவடுகள் படிகளில் ஏறின; கோலங் கோலமாக அந்தத் திருப்பாதங்கள் அறைகளிலே நடந்தன! மண்டபங்களிலும் திண்ணைகளிலும் முற்றங்களிலும் ஓடியாடிக் குதிபோட்டன, அந்தக் கோலம் நிறைந்த மாக் கோலத் திருப்பாதங்கள்!

உலகை மூன்று அடியால் அளந்த பாதங்கள் இன்று சிறு சிறு வண்ண வண்ணச் சுவடுகளாக அடி மேல் அடி எடுத்து வைத்து, அந்த ஆண்டவன் நிலையம் முழுவதையுமே அளந்து நின்றன!

ஆண்டவன் நிலையத்து மகப் பேறு விடுதியிலும் அனாதை ஆஸ்பத்திரியிலேயுங்கூடத் தரையெல்லாம் அந்தப் பாதச் சுவடுகளே! ஆதியற்ற அந்த அனாதியான பரம்பொருள் நாதியற்ற அனாதிக் குழந்தைகளின் திருக்கூட்டத்தில் தன் கோலத் திருவடிகளை மெல்ல மெல்லப் பதித்து நடந்தான். தானும் அவர்களில் ஒருவனாக!

“ஒருகாலில் சங்கு ஒருகாலில் சக்கரம்
உள்ளடி பொறித்து அமைந்த
இருகாலுங் கொண்டு அங்கு அங்கு
எழுதினால் போல்,
இலச்சினை பட நடந்து”

சென்றன அவன் திருவடித் தாமரைகள்!

தேவகியின் மைந்தனாகப் பிறந்து, யசோதையின் குமாரனாக அனாதை உலக மக்களின் இதயத் தொட்டிலிலே தவழ்ந்து,



அன்பு அரங்கிலே திருவிளையாடல் புரிந்த அந்த மாயவன், இன்று ஆண்டவன் நிலையத்திலே சொந்தம் பாராட்டி ஒரு தனியான வாஞ்சையோடு நிரம்பி நின்றான்.

பெண் குழந்தைகள் கண்ணனின் பொம்மையைச் சுற்றி வந்து கும்மி தட்டினார்கள். அவர்களின் சங்கீத வகுப்பை நடத்தும் ஆசிரியை, பின்னணியாகத் திவ்வியப் பிரபந்தம் பாடினாள்,

கருங்கண் தோகை மயில் பீலி அணிந்து
கட்டி நன்கு உடுத்த பீதக ஆடை
அருங்கல உருவின் ஆயர் பெருமான்
அவனொருவன் குழல் ஊதினபோது,

மரங்கள் நின்று மது தாரைகள் பாயும்
மலர்கள் வீழும், வளர் கொம்புகள் தாழும்,
இரங்கும், கூம்பும் திருமால் நின்ற நின்ற
பக்கம் நோக்கி அவை செய்யும் குணமே.

புல்லாங்குழலை உதட்டிலே பொருத்தி, இந்த உலகமும், இதில் உள்ள நிற்பனவும் நடப்பனவும் ஊர்வனவும் பறப்பனவும் மேலுள்ள வானமும் மேகக் கூட்டங்களும் எல்லாம் ஒருசேர, இன்பமயக்கிலே லயமாகும் வண்ணம் மோகன கீதம் இசைக்கும் அந்த நீல நிறத்துச் சிறுவன், ஆண்டவன் நிலையத்திலே அந்தச் சிறுமியர்களின் நடுவே நின்று புன்முறுவல் செய்தான். புல்லாங்குழல் இசைத்தான்!

எங்கோ பிறந்து எங்கோ வளர்ந்து வருகிற அந்த அனாதைச் சிறுவர் சிறுமியர்களின் மத்தியிலே நிற்பதில் கண்ண பெருமானுக்கு அத்தனை ஆனந்தம் போலும்! ஐயா சொன்னார்: "ஆண்டவன் ஆண்டுதோறும் கோகுலாஷ்டமி தினத்தில் இந்த ஆயர்பாடியிலேதான் வந்து பிறக்கிறான்."

இவ்வாறு அவர் சொன்னபோது சுமதி கூறினாள்: "ஆனால் ஒரு சிறு வித்தியாசம். இங்கே கம்சர்கள் இல்லை. பூதகி இல்லை!"

இதெல்லாம் சென்ற ஆண்டு நடந்த காட்சிகள். அவை அனைத்தும் இப்பொழுது சுமதியின் மனக்கண்முன் சுழல ஆரம்பித்தன. யசோதையின் அனுபவ நினைவு போன்ற ஓர் அனுபவ நினைவு சுமதிக்கு இப்பொழுது தோன்றியது.

குழந்தையை இந்த உலகில் விட்டுவி [illegible]

அன்னையின் கடிதத்தில் என்ன எழுதியிருந்தது என்று கேட்பீர்கள் அல்லவா, டாக்டர் மீனாட்சி? அந்த விவரத்தை எப்படிச் சொல்வது என்று உண்மையிலேயே தயங்கினாள், சுமதி. அந்தத் தர்மசங்கடமான நேரத்திலேதான் வந்து கை கொடுத்தார், ஐயா!

தோட்டத்திலிருந்து அவர்கள் பேசிக் கொண்டிருந்த போது, "சுமதி" என்று கூப்பிட்டுக் கொண்டே ஐயா வந்ததும், பதறுவதுபோல் எழுந்தாள், சுமதி. அவளுடைய உள்ளத்தில், உண்மையாகவே ஓர் ஆனந்தம் ஏற்பட்டது. ஒரு பெரிய இக்கட்டான நிலையிலிருந்து தப்புவதற்கு ஐயாவே வழி செய்து விட்டார் என்று மகிழ்ந்தாள்.

"என்ன, வெகு நேரமாக இருவரும் இங்கு வந்து உட்கார்ந்து விட்டீர்கள்? சுமதி! குழந்தை அழுதால் பால் கொடுப்பதற்கு யார் இருக்கிறார்கள், அங்கே?" என்று பரிவோடு கேட்டார், அவர்.

"குழந்தை நன்றாகத் தூங்கிக் கொண்டிருந்தது, ஐயா. விழித்து அழுதால் என்னைக் கூப்பிடும்படி சொல்லிவிட்டுத்தான் வந்தேன்" என்று கூறிக்கொண்டே விடுதியை நோக்கி விரைந்தாள், சுமதி.

டாக்டரின் அருகில் வந்தார் ஐயா.

"மீனாட்சி, உங்களிடம் ஒரு செய்தி சொல்ல நினைத்தேன். ஒருவேளை சுமதியே அதை உங்களிடம் சொல்லியிருப்பாள் என்று தோன்றுகிறது!" என்று ஆரம்பித்தார், ஐயா.

"சுமதியின் புதிய உத்தியோகத்தைப் பற்றித்தானே சொல்கிறீர்கள்?"

"ஆமாம், இங்கே அவளுக்குப் புதிய உத்தியோகம் நான் கொடுத்திருக்கிறேன். அதனால் அவள் மதுரையில் இருந்து வந்த புதிய உத்தியோகத்தை வேண்டாம் என்று சொல்லிவிட்டாள். எவ்வளவு நல்ல பெண் பாருங்கள், இந்தச் சுமதி! அன்னை பூரணியிடம் பழகினாலே எல்லா நல்ல குணங்களும் தாமாகவே வந்துவிடுகின்றன. இந்த நிலையத்துப் பெண்கள் எல்லாருமே அப்படித்தான்! இதயத்தைக் கடுமையாக வைத்துக் கொள்ள வேண்டிய மருத்துவ நிலையத்துப் பெண்மணிகள் கூட இளகிய சுபாவம் உள்ளவர்களாகவே இருக்கிறீர்கள். அது இந்த ஆண்டவன் நிலையத்தின் பாக்கியம்!"

...ம் சொல்லாதீர்கள், ஐயா. தாங்களும்

அன்னபூரணி அம்மாளும் இந்த அனாதைக் குழந்தைகளுக்குச் செய்துள்ள சேவைகளை நினைத்தால், நாங்கள் செய்வதெல்லாம் எம்மாத்திரம்? மேனாடுகளில் எல்லாம் எத்தனையோ அனாதை விடுதிகளைப்பற்றியும் அவற்றிற்காக ஏதேதோ மகத்தான சேவைகள் செய்துள்ள பெண்மணிகளைப் பற்றியும் புத்தகத்திலே படிக்கிறோம். பத்திரிகைகளிலே பார்க்கிறோம். இன்று நடை முறையில் அதை அன்னபூரணியம்மாளும் நீங்களும் செய்து காட்டுகிறீர்கள். உங்களோடு இருப்பதுதான் எங்களுக்குப் பாக்கியம்!"

"மேனாடுகளில் என்ன, நமது தமிழ்நாடு அறம் நிரம்பிய நாடு. வழி வழியாகப் பிறருக்குச் சேவை செய்வதையே புண்ணியம் என்று கருதி வருகிற நாடு. அறம் செய்ய விரும்ப வேண்டும் என்ற அந்த எண்ணத்திற்கே— 'அறம் செய விரும்பு' என்று கூறி, அந்த விருப்பத்திற்கே—ஒரு பெரிய புண்ணிய இடத்தைக் கொடுத்த நாடு நமது நாடு. 'அன்னதானத்திலே உயர் நாடு' என்று இந்தப் பழம்பெரும் நாட்டை எண்ணி எண்ணிப் பெருமை கொள்கிறோம். ஆனால் இன்று அறநிலையங்களும் சத்திரம் சாவடிகளும் இடிந்து மறைந்து போய்விட்டன. வீதிகளிலே சுமைதாங்கி வைப்பதற்குக் கூட மக்கள் முனைவதில்லை. ஆகையினால் நாம் ஏதோ புதிதாக ஓர் அற்புதத்தைச் சாதித்துவிட்டோம் என்று தோன்றலாம். அது ஒருவகை ஆணவம். அந்த ஆணவத்திற்கு இடம் கொடுத்துவிட்டோம் என்றால், நம் சேவை குன்றிவிடும்! நம் முன்னோர்கள் செய்துள்ள அறக் கட்டளைகளை நினைத்துப் பார்த்தால் இதெல்லாம் தூசி மாத்திரம்!"

டாக்டர் மீனாட்சி இந்த வார்த்தைகளுக்கு ஏதும் மறுமொழி சொல்லவில்லை. ஐயாவின் உயர்ந்த பண்புகளை நன்கு அறிந்தவள் ஆதலால், வணக்கத்தோடு அவரது பேச்சைக் கேட்டாள். கேட்டுவிட்டுச் சொன்னாள்:

"ஐயா, சுமதியின் உள்ளத்தில் ஒரு பெரிய மாறுதல் ஏற்பட்டிருப்பதைத் தெரிந்து கொண்டேன். புதிதாக நம் இடையே வந்து பிறந்துள்ள குழந்தை இனி அவளுடைய குழந்தைதான். உண்மையாகவே ஒரு தாயின் பாசம் அவளுக்கு உண்டாகிவிட்டது, அதைத் தெளிவாகக் கண்டேன்."

"டாக்டர், குழந்தையைப் பெறுவது என்பது ஒரு பெரிய தவம். அதை வளர்ப்பது என்பதோ அதைவிடப் பெரிய தவம்! பெறுவதற்குத் தவம் பெற்ற ஒரு தாயின் த

வளர்ப்பதற்குப் பெற்ற தவம் சிறந்தது. பெற்ற தாயும் பெருந் தவம் அல்லவா, அது! இதை எண்ணிப் பார்க்கும்பொழுது நம் தமிழ் மொழியிலுள்ள 'பேறு' என்ற சொல்லுக்கே ஏதேதோ ஆழமான பல பொருள்கள் பிறக்கின்றன. இந்தப் பெரிய பேறு தேவகிக்குக் கிடைக்கவில்லை. யசோதைக்குத்தான் கிடைத்தது. இதை எண்ணித் தேவகி மறுகுவதாகப் பெருமாள் திருமொழி யில் ஒரு பாடல்" என்று சொல்லி, ஐயா கீழ்க்கண்ட பாடலை ஒரே உணர்ச்சி பரவசத்தோடு பாட ஆரம்பித்தார்:

மருவும் நின் திருநெற்றியில் சுட்டி
அசைதர, மணிவாயிடை முத்தம்
தருதலும், உன்தன் தாதையைப்போலும்
வடிவு கண்டுகொண்டு உள்ளம் உள்குளிர
விரலைச் செஞ்சிறு வாயிடைச் சேர்த்து
வெகுளியாய் நின்று உரைக்கும் அவ் உரையும்
திருவிலேன் ஒன்றும் பெற்றிலேன் எல்லாம்
தெய்வநங்கை, யசோதை பெற்றாளே.

# 6 புதிர் மனிதன்

இந்த நிகழ்ச்சிகள் எல்லாம் நடந்து ஐந்து ஆண்டுகள் உருண்டோடின, ஆண்டவன் நிலையத்தில்.

ஐந்து கோகுலாஷ்டமிகள் வந்து சென்றன. ஐந்து முறை கண்ணன் இந்த உலகினருக்காக உற்சவ அவதாரம் எடுத்து விட்டான். ஆண்டவன் நிலையத்தின் முக்கிய திருவிழாவாகிய கோகுலாஷ்டமியில் இப்பொழுது சீதாமணியும் சிறுமிகளுடன் சேர்ந்து உல்லாசமாகக் கும்மியடித்தாள்.

சீதாமணி!

இப்படித்தான் அவளுக்குப் பெயர் சூட்டினார், ஐயா. உழு கின்ற கொழு முகத்தில் உதித்து வந்த சீதையைப் போல், ஆண்டவன் நிலையத்துக்கு என்று நிலமகள் இந்த மணியை ஈன்று தந்தாள் என்றே கருதினார், ஐயா! சீதாமணி ஆண்டவன் நிலை யத்தின் செல்வச் சிறுமியாக, ஐயாவின் தனி அன்புக் குரிய

அழகுப் புதல்வியாக, சுமதியின் ஆசை மகளாக வளர்ந்தாள்.

வேடிக்கை விளையாட்டுகள், களியாட்டங்கள், இசை நிகழ்ச்சிகள் அனைத்திலும் சுமதியின் மகள் விசேஷப் பங்கு கொண்டு வெண்ணமான் குட்டியைப்போல் துள்ளித் துள்ளி உலவி வந்தாள். ஆண்டவன் நிலையம் என்ற அந்த அழகுப் பூங்கா விலே!

சுமதியின் மகள்: ஆம், அப்படித்தான் உலகம் அவளை நோக்கியது. அந்தச் சிறுமியும், தன்னைச் சுமதியின் மகளாகவே கருதினாள். சுமதியோ என்றால்? தன் மகளைவிட, தான் பெற்ற செல்வத்தைவிட, வாழ்வில் தான் அடைய வேண் டாம் என்று முடிவு செய்துவிட்ட அந்தத் திருமணப் பேற்றின் இன்பக் கனியைவிட இந்தச் சீதாமணிக் கனியை தேவலோகத் துக் கற்பகக் கனியாக எண்ணி எண்ணி ஒரு தாயின் எல்லையற்ற பாசத்தோடு வளர்த்து வந்தாள்.

பசுமாடு கொண்டுவந்து காலையிலே பால்காரர் வந்தால் தன்னுடைய செல்வச் சீதாமணிக்கு என்று தன் வேலைகளை எல் லாம் விட்டு விட்டுப் பால் கறந்து முடியும் வரை பசுவின் அரு கிலேயே நின்று பார்த்துக் கொண்டிருப்பாள்; அதிலும் அந்த நிலையத்தில் உள்ள அத்தனை பசுக்களிலும் மிகவும் அதிர்ஷ்டச் சுழிகள் நிரம்பிய பசுவாகவே பார்த்துத் தேர்ந்தெடுத்து அந் தப் பாலைத்தான் சீதாமணிக்கு ஊட்டுவாள், சுமதி. பாசம் என்று ஒன்று ஏற்பட்டு விட்டால் அறிவுக்குள் அகப்படாமல் எத்தனை குருட்டு நம்பிக்கைகள்- இதயத்தில் உண்டாகுமோ. அத் தனையும் சுமதியின் இதயத்தில் நிரம்பி நின்றன, சீதாமணி சம் பந்தப்பட்டவரை! திருஷ்டி பட்டுவிடக்கூடாது, குழந்தை 'பூச்சி பொட்டு' என்று பயந்துவிடக் கூடாது என்றெல்லாம் எண்ணி, அவளைத் தனியே வெளியில் விளையாட விடமாட்டாள். ஒரு விநாடி அவளைக் காணவில்லை என்றால், கன்றைத் தேடிக் கூப்பிட்டு மறுகும் தாய்ப் பசுவைப் போல, அந்த ஆண்டவன் நிலையம் எல்லாம் எதிரொலிக்கும்படி கூப்பிட்டுக் கொண்டே ஓட ஆரம்பித்து விடுவாள்.

நாளாக நாளாக இந்தக் கவலையும் கண்காணிப்பும் நூறு மடங்கு, ஆயிரம் மடங்கு என்று அதிகரிக்க ஆரம்பித்தன. அப் படி அதிகரிக்கும்படி செய்யக்கூடிய சில அதிசய சம்பவங்களும் அந்த ஆண்டவன் நிலையத்தில் நடக்க தொடங்கின.

ஒருநாள் சீதாமணி தோட்டத்தில் சிறுமிகளோடு விளை யாடிக் கொண்டிருந்தவளை திடீரென்று காணோம் ... இருந்த

சிறுமிகளால் தகவல் சொல்ல முடியவில்லை. பிறகு ஒரு மணி நேரம் கழித்துத்தான் சீதாமணி திரும்பி வந்தாள். அந்த ஒரு மணி நேரமும் சுமதி பட்ட பாடு ஆண்டவன் நிலையத்தில் யாருக்கும் தெரியாது. அவளைப் படைத்த ஆண்டவனுக்கே தெரியும்!

இன்னொரு நாள் சீதாமணி பிள்ளைகளோடு மழைத் தண்ணீரில் படகு விட்டு விளையாடிக் கொண்டிருந்தாள். திடீரென்று அவளைக் காணோம். ஒரு மணி நேரம் சுமதி புழுவாகத் துடித்தாள். சீதாமணி வந்ததும் கேட்டால் அவளுக்குச் சரியானபடி பதில் சொல்லத் தெரியவில்லை. "ஒரு மாமா வந்து எனக்கு மிட்டாய் கொடுத்தார் அம்மா!" என்று சொல்லி பசலைச் சிரிப்போடு குதித்தாள், சீதாமணி.

நாட்கள் செல்லச் செல்லச் சீதாமணிக்கு யாரோ ஒரு மாமா எப்படியோ தலைமறைவாக வந்து மிட்டாய்களும் விளையாட்டுப் பொம்மைகளும் வேடிக்கைச் சாமான்களும் கொடுக்க ஆரம்பித்தார். அந்த மாமா யார் என்றோ, எங்கிருந்து வருகிறார் என்றோ யாராலும் சொல்ல முடியவில்லை. அத்தனை குழந்தைகளோடு ஒன்றாகச் சேர்ந்து நிற்கும் சீதாமணியை, மற்றக் குழந்தைகளுக்கெல்லாம் தெரியாமல் அழைத்துப் போய், இத்தனை வெகுமதிகளையும் ஏன் கொடுக்கிறார் என்பது யாருக்கும் விளங்காத ஒரு புதிராக இருந்தது.

சுமதி சீதாமணியைக் கண்டிக்க ஆரம்பித்தாள்! யார் எது கொடுத்தாலும் இனிமேல் வாங்கிவரக் கூடாது என்று கண்டிப்பாகச் சொன்னாள். சீதாமணிக்கு வகை வகையான பொம்மைகளும் நூற்றுக்கணக்கான விளையாட்டுப் பொருள்களும் தானே வாங்கிக் கொடுத்தாள்.

இதன் பிறகும் நின்றதா, அந்த அதிசய நிகழ்ச்சி? ஊரெல்லாம் 'கொலு கொலு' என்று அமர்க்களப்பட்டுக் கொண்டிருந்தபொழுது, ஒருநாள் திடீரென்று சீதாமணி ஒரு கையில் புல்லாங்குழல் ஊதும் கிருஷ்ணனும், இன்னொரு கையில் பால் கறக்கும் பசுவுமாக இரண்டு பொம்மைகளைத் தூக்க முடியாமல் தூக்கிக் கொண்டு அம்மாவிடம் வந்தாள்.

"இதெல்லாம் உனக்கு ஏது?" என்று கோபாவேசமாகக் கேட்டாள், சுமதி.

"கோவுச்சுக்காதேம்மா, அந்த மாமாதான் கொடுத்தார். நான் வாங்கிக்க மாட்டேன்னு எவ்வளவோ சொன்னேம்மா! அவர் கையிலே கொண்டு திணிச்சுட்டாரும்மா! நீ வேணு



“இந்த பொம்மையெல்லாம் உனக்கு ஏது?” என்று சீதா மணியிடம் கோபத்துடன் கேட்டாள் சுமதி.

கனகத்தைக் கேட்டுப்பாரம்மா" என்று பதறிக் கொண்டே சொன்னாள், சீதாமணி.

சுமதியின் கண்களில் கோபக்கனல் பறந்தது. "திணிச்சா என்ன, அப்படியே அந்தப் பொம்மையை அவரோட மூஞ்சி யிலே எறிஞ்சுட வேண்டியதுதானே. நீ ஏன் எடுத்துக்கிட்டு வந்தே?" என்று சீறினாள்;

"திட்டாதேம்மா, என்னை. உங்கிட்டே நெஜத்தைச் சொல் லட்டுமா அம்மா? அம்மா, எனக்கென்னவோ அந்த மாமா ஏதாவது குடுத்தார்னு வாங்கிக்கக் மாட்டேன்னு சொல்ல முடியலேம்மா. அவரைப் பார்த்தா எனக்கு என்னவோ பண்ணு தம்மா. அது என்னதுண்ணு தெரியலேம்மா!"

அவ்வளவுதான்; "பளார், பளார்" என்று இரண்டு மூன்று அறை! கன்னங்கள் சிவந்தன. தண்டனை அந்தப் பச்சிளம் கன்னங்களில் ஐந்து விரல்களாலும் பதிவாகி விட்டது! கதறி னாள் சீதாமணி.

"இனிமேல் புரியுமா, உனக்கு? அந்த மாமா ஏதாவது கொடுத்தார்னு இங்கே கன்னத்தில் குடுத்துடுவேன். இனிமேலா வது புரியுமா? புரியுமா? புரியுமா?"

மீண்டும் இரண்டு மூன்று அறை! மீண்டும் தண்டனை பதி வாயிற்று. சீதாமணி ஓலமிட்டுக் கதறினாள். "அம்மா அம்மா" என்று கூச்சலிட்டாள். அந்த ஒலி நிலவுலகில் இருந்து வானுல கமே சென்று ஒலித்தது, "அம்மா, அம்மா" என்று!

என்ன ஆச்சரியம்! இந்தச் சத்தத்தைக் கேட்டு ஐயா அங்கே வந்துவிட்டார், "சுமதி!" என்று கூப்பிட்டுக் கொண்டே.

"சுமதி! ஏன் இத்தனை கோபம்? மணி என்ன செய்தாள்? அவள் 'அம்மா, அம்மா' என்று கதறுவதைத் தாங்க முடிய வில்லையே!"

இவ்வாறு சொன்னபோது ஐயாவின் குரல் கம்மிற்று. கண் கூடக் கலங்கியது.

சுமதிக்கும் இதைப் பார்த்து எப்படியோபோல் ஆகிவிட் டது. "ஐயா, உங்கள் அமைதியைக் குலைத்தற்கு என்னை மன் னித்து விடுங்கள். சில சமயங்களில் அளவுக்கு மீறித்தான் கோபப்பட்டு விடுகிறேன் போலிருக்கிறது"

"அப்படியெல்லாம் சொல்லாதே சுமதி. அளவுக்கு மீறி [illegible]துகிறவர்களுக்கு அளவுக்கு மீறிக் கோபப்பட

வும் உரிமை உண்டு. பாசமுள்ள இடத்தில்தானே ஆவேசமும் உண்டாகிறது? அதற்குச் சொல்லவில்லை, நான். நடந்தது என்ன, அவள் என்ன தப்புச் செய்தாள் என்று தெரிந்து கொள்ள நினைத்தேன், அவ்வளவுதான்'' என்றார், ஐயா.

சுமதிக்குக் கண் கலங்கிவிட்டது. குழந்தையைப் போல் தேம்ப ஆரம்பித்து விட்டாள்.

"ஐயா, எனக்கு இப்பொழுது ஒன்றும் பேச வரவில்லை. கொஞ்ச நேரம் கழித்துத் தங்களை வந்து பார்க்கிறேன். எல்லாம் சொல்லுகிறேன். இப்பொழுது என்னை மன்னித்து விடுங்கள்."

இவ்வாறு சொல்லிவிட்டு, சுமதி கைகூப்பினாள். சீதாமணியை எதற்காக இப்படி அடித்துவிட்டோம் என்று எண்ண ஆரம்பித்துவிட்டாள், அவள்! ஐயா அங்கிருந்து நகர்ந்த மறு விநாடி 'விறுவிறு' என்று கட்டிலிலே போய்ப் படுத்துத் தலையணையில் முகத்தைப் புதைத்தவாறு "கூ கூ" என்று அழ ஆரம்பித்தாள், சுமதி! இதுவரை நடந்தது அனைத்தையும் பார்த்துக் கொண்டே சிணுங்கி நின்றுகொண்டிருந்த சீதாமணிக்கு இப்பொழுது முன்னைவிடப் பன்மடங்கு வேகத்துடன் அழுகை சாடிக்கொண்டு வந்தது! கையிலிருந்த இரண்டு பொம்மைகளையும் கீழே போட்டுவிட்டு அம்மாவின் அருகிலே போய்க் கட்டிலில் படுத்தவாறு தானும் அழ ஆரம்பித்தாள்.

"அம்மா, அம்மா! அழாதேம்மா" என்று சொல்லிக் கொண்டே 'கோ' என்று கதறினாள், குழந்தை.

சுமதி தலையணையில் புதைத்திருந்த முகத்தைத் திருப்பிச் சீதாமணியைப் பார்த்தாள்.

"அம்மா! இனிமே நான் தப்புப்பண்ண மாட்டேம்மா. இனிமே நான் அந்த மாமாகிட்டேருந்து எதையும் வாங்கிக்க மாட்டேம்மா. நீ அழாதேம்மா. அந்தப் பொம்மையைத் தூக்கி..."

இப்படிச் சொல்லிக்கொண்டே வேகமாக எழுந்தாள், சீதாமணி, பொம்மைகளைத் தூரத் தூக்கி எறிவதற்காக. உடனே சுமதி எழுந்து விட்டாள், மகளின் கையைப் பிடித்தவாறே.

சுமதிக்கு அந்தப் பொம்மைகளை வெளியே தூக்கி எறியப் பயமாக இருந்தது. அதிலும் கிருஷ்ணனையும், க[illegible]

தடவிப் பால் சுரக்கிற தாய்ப்பசுவையும் தூர எறிவதென்ருல் அவளுக்கு எப்படியோ இருந்தது.

ஒரு சிறு மழை பெய்து ஒய்ந்தது போல அந்தப் பொம்மை நிகழ்ச்சி வேகமாக நடந்து முடிந்தது. எங்கிருந்தோ வந்து வீசிய காற்று மழையை அடித்துக்கொண்டு போய்விடுவது போல, ஐயாவின் எதிர்பாராத பிரவேசம் அந்தச் சம்பவத்தை அப்படித் திருப்பி விட்டுவிட்டது. என்ருலும் சுமதியின் உள்ளத்தில் பூரண நிம்மதி ஏற்படவில்லை.

ஐயாவின் அறைக்குள்ளே சென்ருள், சுமதி. சீதாமணியையும் அழைத்துக்கொண்டே! அழுகை நின்று வெகு நேரம் ஆகியும் இருவருடைய முகங்களிலுமே சோகத்தின் தேக்கம் இருந்தது. கண்ணில் கலக்கமும் செந்நிறமும் படிந்து நின்றன. மழை பெய்து ஒய்ந்தபிறகு சிறு பள்ளங்களிலே தண்ணீர் தேங்கி நிற்பது போல் நின்றது, அது. அந்தச் சோகப் பிரவாகத்தைக் கவனித்து விட்டார், ஐயா.

"என்ன, இந்த ஒரு சிறு சம்பவம் ஏன் இவ்வளவு பெரிய மனவேதனையை உண்டாக்கிவிட்டது? நீங்கள் இரண்டு பேருமே குழந்தைகளாக அல்லவா இருக்கிறீர்கள்!" என்று பரிவோடு பேசினுர், ஐயா.

"என் இதயத்தின் நிதானமெல்லாம் நான்கு ஆண்டுக்கு முன்னுலேயே பறந்தோடி விட்டது. காரணம் இல்லாமல் அடிக்கடி நான் ஒரு குழந்தையைப் போல் சில நேரங்களில் அழ ஆரம்பித்து விடுகிறேன். சீதாமணி சம்பந்தப்பட்டவரை என் இதயமும் பசலையாகத்தான் இருக்கிறது! என்ன செய்வேன்?" இப்படிச் சொல்லிக் கொண்டிருக்கும்போதே சுமதிக்கு விம்மல் வந்துவிட்டது.

"சுமதி, அன்பு என்பது ஓர் அபூர்வமான மூலிகை. கல்லும் மரக்கட்டையுமாக இருக்கிற மனித உள்ளத்தை உயிரோட்டமுள்ள சக்தியாக மாற்றுகிற, சஞ்சீவி, அன்பு என்ற அந்த அபூர்வ மூலிகைதான்! பாசம் என்ற ஒரு பிணைப்புத்தான் இந்த உலகுக்கெல்லாம் உயிராக நின்று, அண்டங்களை எல்லாம் காத்து வருகிறது. அதனுல்தான் நம்மவர்கள் 'அன்பே சிவம்' என்று ஒரே வரியில் சொல்லிவிட்டார்கள். இரண்டு பேரும் நின்றுகொண்டிருக்கிறீர்களே, உட்காருங்கள்" என்ருர் ஐயா.

சுமதியும் சீதாமணியும் சோபாவிலே உட்கார்ந்தார்கள்.

...ம் சுமதி மாயமாக வந்து போகிற அந்த 'மனித

மாமனைப்' பற்றிச் சொல்ல ஆரம்பித்தாள். மிட்டாயிலிருந்து ஆரம்பித்துப் பல பல விளையாட்டுச் சாமான்களாக வளர்ந்து, இப்போது கன்னுகுட்டியும் பசுவும் கன்றுமாகவும் முற்றிவிட்ட அந்த மாய மனிதனின் விநோதச் செயலை ஐயாவிடம் சொன்னாள், சுமதி!

"ஐயா! ஊரெல்லாம் அடிக்கடி 'பிள்ளை பிடிக்கிறவனை'ப் பற்றிப் பயத்தோடு பேசுகிறார்கள். என் குழந்தை, என் கண் மணி சீதாமணியையும் யாராவது..."

இதற்குமேல் சுமதியால் பேச முடியவில்லை. விம்மி விம்மி அழுதாள். இதைப் பார்த்த சீதாமணியும் "கோ"என்று கதற ஆரம்பித்தாள். ஐயாவுக்கு மனதைத் திடப்படுத்திக் கொள்வது கஷ்டமாக இருந்தது. சற்று நேரம் அமைதியாக இருந்துவிட்டுப் பிறகு சொன்னார்:

"சுமதி, உன் பாசத்தின் தன்மை எனக்குப் புரிகிறது. அளவு மீறிய பாசத்தினால் அளவு மீறிக் கவலையும் கொள்கிறாய். பொதுவாக ஒன்று சொல்கிறேன். பிள்ளை பிடிக்கிறவர்கள் எல்லாரும் நகைக்காகவும் மற்றப் பொருள்களுக்காகவுந்தான் அப்படிப் பட்ட பாவத்தைச் செய்கிறார்கள். நம் சீதாமணியோ உன்னையும் என்னையும் போல் ஓர் ஏழைப் பிறவி. திருடர்கள் அவளை நெருங்க மாட்டார்கள். கவலைப்படாதே!"

"அப்படியானால் எதற்காக ஓர் அன்னிய மனிதன் இத்தனை குழந்தைகளிலும் இவளை மட்டும் எடுத்துக் கொஞ்ச வேண்டும்? இத்தனை சிறுமிகளிலும் இவளிடம் மட்டும் அவனுக்கென்ன அத்தனை அக்கறை? எதற்காக ஒரு திருடனைப் போல், தலைமறைவாக வந்து போக வேண்டும்? ஐயா! இதில் ஏதோ சூது இருக்கிறது; ஏதோ வஞ்சனை இருக்கிறது. எனக்கு அப்படித் தான் படுகிறது. ஐயா, கோகுலத்திலே வளர்ந்த கண்ணனுக்கு ஒரு கம்சன் இருந்தான். இன்னும் யார் யாரோ பல வஞ்சகர்கள் வளைய வந்தார்கள். என் கண்ணுக்கும், என்னுடைய கண் மணிக்கும்..."

சுமதி மீண்டும் தேம்பித் தேம்பி அழுதாள். சீதாமணி இந்தத் தடவை அழவில்லை. நிமிர்ந்து உட்கார்ந்துகொண்டு சொன்னாள்:

"அம்மா, என்னை மட்டும் யாரும் பிடிச்சுக்கிட முடியாது. எம்பக்கத்திலே யாராவது வந்தா அப்படியே ஒரு உதறு உதறிட்டு அம்மாகிட்டே ஓடியாந்துடுவேன்! ஒரே ஓட்டமாகப் பறந்து வந்துடுவேன்."

குரலையெல்லாம் கனமாக்கிக்கொண்டு, ஒரு பெரிய வீர னைப் போல் முகத்தை வைத்துக்கொண்டு. இந்த வார்த்தை களைச் சொன்னுள் குழந்தை சீதாமணி. ஐயா சிரித்தார். சுமதி யும் சிரித்துவிட்டாள்!

இந்தச் சம்பவம் நடந்து இரண்டு வாரங்கள் கழித்து ஐயாவுக்கு ஒரு கடிதம் வந்தது.

அன்புடையீர்,

உங்கள் திருவடிகளுக்கு வணக்கம்.

நான் யார், எதற்காக இந்தக் கடிதம் எழுதுகிறேன் என் பது இப்பொழுது உங்களுக்குத் தெரிய வேண்டாம் என்று நினைக்கிறேன். குழந்தை சீதாமணியின் வளர்ச்சியிலும் நல்வாழ் விலும் உங்களையும் சுமதி அம்மாள் அவர்களையும் போல நானும் அளவற்ற வாஞ்சை கொண்டவன். இந்த உலகில் அந்த மணிக் குழந்தை என்றுவது ஒருநாள் மிக உயர்ந்த நிலைக்கு வரு வாள், அதை என் கண்ணுல் காண வேண்டும் என்னும் ஒரே ஆசையில் உயிர் வாழ்கிறவன், நான். இந்தப் பரந்த பேருலகில் எங்கோ ஒரு மூலையில் ஏதோ ஒரு சூழ்நிலையில் நானும் என் தனிமையும் என்னைச் சூழ்ந்து நிற்கும் புதிருமாக வசித்து வரு கிறேன். என்றுவது ஒருநாள் உங்களை வந்து காண்பேன். அது வரை இந்த உலகில் உங்களோடும் சுமதி அம்மாள் அவர் களோடும் சீதாமணியின் மனிதனுக நான் ஒருவனும் இருக் கிறேன் என்பதைத் தயவுசெய்து நினைவில் வைத்துக்கொள்ளும் படி கேட்டுக் கொள்கிறேன்.

இப்படிக்கு,

சத்தியத்தைத் தவிர இதில் வேறு ஒன்றும் எழுதாத

அன்பன்.

இந்தக் கடிதம் தம் கையிலே கிடைத்து ஒரு வாரம் வரை யிலும் ஐயா யாரிடமும் இதைப்பற்றி எதுவும் சொல்லவில்லை. இந்தக் கடிதத்தை எழுதியது யாராக இருக்கக்கூடும் என்று பலவாறுக ஊகங்கள் செய்து பார்த்தார். கடிதத்தில் ஏதாவது சூழ்ச்சி இருக்குமா என்ற சந்தேகம் அவருக்கு ஏற்படவில்லை. சீதாமணி இந்த உலகில் வந்து பிறந்த அந்த அதிசய நிகழ்ச் சியை எண்ணிப் பார்த்தார். அவளது பிறப்பின் புதிருக்கு விடை இந்தக் கடிதத்திலே இருக்கிறதோ என்று ஒரு கணம் நினைத் தார். இந்தக் கடிதத்தை எழுதியவர் சீதாமணியின் தந்தையாக இருக்கலாம் என்று அவருக்குப் பட்டது: 'தானும் தனிமையும்

புதிருமாக' என்ற வார்த்தைகளைப் படித்ததும் ஐயாவின் உள்ளம் உருகியது. அவருடைய கண்கள் எல்லையற்ற துயரத்திலே கலங்கின. சீதாமணியின் அன்னையை ஊரறியக் கைப்பிடித்திருந்தால், அவன் ஏன் இப்படிப் பதுங்க வேண்டும்? சீதாமணியின் அன்னை அவருடைய கண் முன்னே வெள்ளத் தண்ணீரில் மயங்கிக் கிடந்த அதே காட்சியில் தோன்றினாள்! வழி வழியாகப் பிறவியிலேயே வந்தமைகிற தமிழ்ப் பண்புகள் எல்லாம் பிரதிபலிக்கக்கூடிய எழில் முகம்! அதில் சோகம் படர்ந்து நிற்கிறது. நினைவு மயங்கிக் கிடக்கிறது. கழுத்தில் தாலிச் சரடு! அதில் தங்கமணி மின்னுகிறது!

ஐயாவின் இதயம் உருகியது. இந்த உத்தமியின் கணவன் அல்லவா தலைமறைவாக வாழ்கிற ஒரு புதிர் மனிதனாக இருக்கிறான்? இல்லை. ஒருவேளை இந்தக் கடிதத்தை எழுதியது வேறு யாராகவும் இருந்தால்? ஏதோ ஒரு நோக்கத்தோடு இதை எழுதியிருந்தால்? அப்படியானால்?

ஒரு வாரம் இப்படி விநோதமான குழப்பங்களிலே கழிந்தது. இந்த ஏழு நாட்களும் அவர் அந்த விசித்திரமான கடிதத்தை ஏழாயிரம் தடவை படித்திருப்பார். ஆனாலும், உண்மை பிடிபடவில்லை. இப்படிக் குழம்பிக்கொண்டிருந்த பொழுதுதான் ஒருநாள் சுமதி, கையில் ஒரு கடிதத்துடன் ஐயாவின் அறைக்குள்ளே ஓட்டமும் நடையுமாக வந்தாள். வந்து ஐயாவின் மேஜைக்கு மேலே அந்தக் கடிதத்தை வைத்துவிட்டு ஒரே திகைப்புடன் குழம்பி நின்றாள்.

சுமதியைக் கடிதமும் கையுமாகப் பார்த்ததுமே ஐயாவுக்கு நடந்தது என்ன என்று புரிந்துவிட்டது. ஒன்றுமே பேசாமல் அந்தக் கடிதத்தை எடுத்து அமைதியாகப் படிக்க ஆரம்பித்தார்:

“தியாக வாழ்விற்கு நிலைக்களனாக விளங்கும் இந்தப் புண்ணியத் தமிழ் நாட்டுப் பெண் குலத்தின் அன்புக் கொடியாக விளங்கும் சுமதி அம்மைக்கு,

நன்றி கலந்த வணக்கம்.

கடந்த சில நாட்களாக அருமைக் கண்மணி சீதாமணியின் நடமாட்டங்களில் ஏன் இத்தனை கட்டுப்பாடு?

இந்த அகில உலகத்திலும் அருமைக் கண்மணியை யாராவது நெருங்கிவிட முடியுமா? என் உடம்பில் உயிர் உள்ளவரை யாரும் அவளைத் தொடவிட மாட்டேன். மீண்டும் சொல்கிறேன். இந்த உடம்பில் உயிர் உள்ளவரை சீதாமணியை யாரும் தொட முடியாது. கவலைப்படாதீர்கள்.

வானமும் பூமியும் கடலுமாக உயர்ந்து பரந்து விரிந்து நிற்கிற இந்த உலகின் பெரு நிலப்பரப்பிலே, எங்கோ இனந் தெரியாத ஓர் மூலையில் இருள் சூழ்ந்த தனிமைப் புதரிலே, சீதா மணிக்காக ஒரு ஜீவன் வாழ்கிறது என்பதைச் சத்தியமாக நம்புங்கள். சந்தேகம் வேண்டாம்.

ஒரே ஒரு வேண்டுகோள். என்றாவது ஒருநாள் இருந்தாற் போலிருந்து அவளைப் பார்க்க வேண்டும் என்ற ஆசை இந்த அனாதையின் உள்ளத்திலே திடீரென்று உண்டாகும். அப்பொழுது மட்டும் அவளை வந்து பார்க்க அனுமதி கொடுங்கள். யாருக்கும் தெரியாமல் அவளுக்குமே புரியாமல் அவளை வந்து பார்த்துவிட்டுப் போக என்னால் முடியும். தயவுசெய்து உங்கள் கட்டுப்பாட்டைக் கொஞ்சம் தளர்த்துங்கள். உங்கள் திசை நோக்கி வணங்குகிறேன்.

இப்படிக்கு,

சீதாமணியினால் "மாமா" என்று

அழைக்கபெறும் பெரும் பேறு பெற்ற ஒரு

**தனி மனிதன்.**

கடிதத்தைப் படித்து முடித்ததும் ஐயா திகைப்படையாமல் ஆழ்ந்த யோசனையும் செய்யாமல் தொண்டையை இருமிக் கொண்டார்.

"உட்காரு, சுமதி. இந்தக் கடிதம் ஓரளவு நான் எதிர் பார்த்ததுதான்! ஆகையால் நான் திகைப்படையவில்லை! என்றாலும் குழப்பம் முற்றிலும் தீரவில்லை," என்றார், ஐயா.

சுமதி கேட்டாள்: "இந்தக் கடிதத்தை எழுதியது யாராக இருக்கக்கூடும் என்று நினைக்கிறீர்கள், ஐயா? நிச்சயம் இது அவளுடைய தகப்பனாராக இருக்க முடியாது என்பதுதான் என் தீர்மானம்."

"அதென்ன அப்படிச் சொன்னாய்? இந்தக் கடிதத்தைப் பார்த்ததும் அவளுடைய தகப்பன் எழுதியிருக்கிறான் என்று அல்லவா யாரும் நினைப்பார்கள். நீ சொல்வது முற்றிலும் மாறாக இருக்கிறதே!"

"ஐயா, சீதாமணியைப் பெற்றெடுத்த அன்னையின் வாழ்க்கையில் உள்ள ஒரு பெரிய இரகசியம் எனக்குத் தெரியும். அது உங்களுக்குத் தெரியும் என்பதும் எனக்குத் தெரியும். அதையெல்லாம் இப்பொழுது பேசுவதில் என்ன பயன்? நான் இனிமேல் சீதா மணி விஷயத்தில் எப்படி நடந்துகொள்ள வேண்டும் என்பதை

மட்டும் எனக்கு அறிவுறுத்துங்கள். அது போதும்."

"சுமதி, அதிகமாக இந்தக் கடித ஆராய்ச்சியைச் செய்து வீணுக உன் மூளையைக் குழப்ப நான் விரும்பவில்லை. உண்மை உனக்குமே சரியாகத் தெரியாது என்று மட்டும் சொல்லி வைக்கிறேன். நீ ஏதோ ஒரு தவருன சூழ்நிலையைத் தவருகவே புரிந்து கொண்டு பேசுகிருய். அது மட்டும் எனக்குத் தெரிகிறது. இப்பொழுது ஏன் அந்தக் குழப்பமெல்லாம்? சீதாமணியின் தாய்—தந்தையரைப் பற்றிய ஆராய்ச்சி நமக்கு அவசியம் இல்லாத காரியம். என்வரையில் சீதாமணியின் தாய், தந்தை, உற்ருர் உறவினர் எல்லாமே நீதான்!"

இப்படி ஐயா சொல்லிக் கொண்டிருக்கும்போதே விம்மி விம்மி அழுதவாறு அறைக்குள்ளே நுழைந்தாள், சீதாமணி.

"அம்மா, அம்மா! நீ எனக்கு அம்மா இல்லையா? சத்தியமாகச் சொல்லும்மா. நீ எனக்கு அம்மாவா, இல்லையா? ஒரே பேச்சிலே சொல்லிடும்மா! அந்தக் கனகம் வந்து நீ என்னோட அம்மா இல்லேன்னு சொல்லுறும்மா"

இப்படிச் சொல்லிக் கொண்டே உள்ளம் எல்லாம் உருகி ஓட "அம்மா" என்று கதறிக்கொண்டே சுமதியின் மேலே பாய்ந்து பற்றிக் கொண்டு கதறினுள், சீதாமணி.

"அட அசடு! இதுக்கா இப்படி அழுவாய்? கனகம் என்னத்தைக் கண்டா? வேடிக்கைக்கு அப்படிச் சொல்லியிருக்கா! நான் ஒன்னோட அம்மா இல்லேன்ன வேறு யாராம் பைத்தியம்!"

இப்படிச் சொல்லிக்கொண்டே சீதாமணியை ஆவிசேர்த்து அணைத்தாள், சுமதி.

"கனகம் சத்தியம் பண்ருும்மா, நீ என்னோட அம்மா இல்லேன்னு! என்னோட அம்மா என்னை விட்டுவிட்டுச் செத்துப் போயிட்டாளாம். என்னோட அப்பாவும் என்னைப் பிடிக்கலேண்ணுட்டு எங்கேயோ போயிட்டாராம்— அப்படீன்னு சொல்ருும்மா கனகம். நீ சொல்லம்மா, நீதான் எனக்கு அம்மான்னு சொல்லம்மா? சத்தியமாய்ச் சொல்லம்மா, எனக்கு அழுகை அழுகையா வருது. சொல்லம்மா."

சீதாமணி விம்மலும் விக்கலுமாகத் தேம்பித் தேம்பி இந்த வார்த்தைகளை உதிர்த்தாள்.

சுமதி தன் கண்களைத் துடைத்துக் கொண்டு து[illegible]கத்தை

எல்லாம் இதயத்தின் அந்தரங்கத்திலே கொண்டு பூட்டிக் கொண்டு சொன்னாள்:

"கண்ணு, சத்தியமாச் சொல்றேன், மூணு தடவை சத்திய மாகச் சொல்கிறேன், நான்தான் உன்னோட அம்மா. எனக்கு, உனக்கு, நம்ப எல்லோருக்குமே 'ஐயா' தான் அப்பா! அழா தடா கண்ணு. சத்தியம்...சத்தியம்...சத்தியம்!"

ஐயா சொன்னார்: "சுமதி, மணியை அழைத்துக் கொண்டு நீ உன் அறைக்குச் செல். இந்தக் கடிதம் என்னிடமே இருக்கட் டும். நான் நன்றாக யோசனை செய்கிறேன். எதற்கும் கவலைப் படாதே. உண்மையாகவே சொல்கிறேன். சீதாமணியின் வாழ் வில் நம் இருவரையும் போல் கண்ணும் கருத்துமாக இருக்கிற இன்னொரு ஜீவன் இந்த உலகில் நிச்சயம் இருக்கிறது. சீதா மணிக்காகவே அந்த உயிர் வாழ்கிறது. பொய்யும் பூசலும் பொறாமையும் வஞ்சகமும் நிறைந்த உலகில் சீதாமணி என்ற பெண் கொழுந்து வளர்ந்து தழைக்க வேண்டும் என்று ஒவ் வொரு விநாடியும் கவலைப்படுகிற அந்த மனிதன் யார் என்பதைப் பற்றி நமக்கு இப்பொழுது கவலையில்லை. அப்படி ஒரு மனிதன் இருக்கிறான் என்று மட்டும் நன்றாகத் தெரிகிறது. அதுபோதும். எல்லோருக்கும் மேலாக நம் அனைவரையும் கண்காணித்து வருகிற ஆண்டவன் ஒருவன் இருக்கிறான் அல்லவா? அவன் பார்த்துக் கொள்ளுவான்."

இப்படிச் சொல்லிவிட்டு தமது இருக்கையிலிருந்து எழுந் தார், ஐயா.

சுமதியும் சீதாமணியை அழைத்துக் கொண்டு தன் அறைக் குப் புறப்பட்டாள்.

அந்த நேரத்தில் ஆண்டவன் நிலையத்தின் காவற்காரன் அவசரம் அவசரமாக ஐயாவின் அறைக்குள்ளே நுழைந்தான்.

"ஐயா, யாரோ முன்பின் தெரியாத ஒரு புதிய மனிதர் தங்களைப் பார்க்க விரும்புகிறார். யார் என்று கேட்டால் தகவல் சொல்ல மறுக்கிறார். தங்களைத் தனிமையிலே காண வேண்டு மாம்." என்று அவன் கூறினான்.

ஒரு விநாடி இமைகளை மூடிக்கொண்டு யோசித்தார் ஐயா. மறுகணம் சொன்னார்: "சரி. அந்தப் புதிய மனிதரை உடனே இங்கு அழைத்து வா."

காவற்காரனிடம் இவ்வாறு கூறிவிட்டு சுமதியைப் பார்த் துச் சொன்னார்:

"சுமதி! நீ சீதாமணியை அழைத்துக் கொண்டு, இந்த அறையின் பின் பக்கத்து வாசல் வழியாகச் சென்றுவிடு. இங்கே நடக்கிற சம்பவங்கள் எல்லாம் இரகசியமாகவே இருக்கட்டும். பெண்களுக்கு இரகசியத்தைக் காப்பாற்றிக் கொள்ளத் தெரியாது என்று சொல்லுவார்கள். உன் விஷயத்தில் நான் அப்படி நினைக்கவில்லை. சீதாமணிக்குத் தாயாக விளங்குவதும் தந்தையாக விளங்குவதும் நீயேதான் அல்லவா? அதனால் ஒரு தந்தையின் மன உறுதியோடு இந்த விஷயங்களை எல்லாம் உள்ளத்தின் அந்தரங்கத்துக்குள்ளே வைத்துப் பூட்டி விடு, யாரிடமும் எதுவும் பேச வேண்டாம்! நீ புறப்படு."

உடனே சீதாமணியும் சுமதியும் ஐயாவின் அறைக்குப் பின்புறத்தில் இருந்த வாசல் வழியாகச் சென்றார்கள்.

சோபாவில் வந்து மீண்டும் உட்கார்ந்தார், ஐயா.

முகத்தை நன்றாகத் துடைத்துக் கொண்டு புதிய மனிதரை வரவேற்பதற்கு ஆயத்தமானார், ஆண்டவன் நிலையத்தின் அருமைத் தந்தை!

# 7 மனப் பறவை

நீல மயமான வானத்தில். முழு வட்டமான சந்திரன் புன்னகை செய்து மிதந்து கொண்டிருந்தான். நிரை நிரையாக அங்கங்கே மேகக் கூட்டங்கள் நிலவின் ஒளியிலே வெள்ளை யானைக் குட்டிகளைப் போன்று வான வெளியில் ஓடித் திரிந்து கொண்டிருந்தன. வேகமான காற்று வீசும் போது மரங்கள் அசையுமே அந்தச் சலசலப்பைத் தவிர, வேறு எவ்வித ஓசையும் இல்லை.

அந்த நிசி நேரத்தில் சாளரத்தின் வழியாக வானத்தையே பார்த்துக் கொண்டிருந்த ஐயாவின் கண்களில் இரண்டு கண்ணீர்த் துளிகள் கலங்கி நின்று நிலவின் ஒளியிலே விம்மின.

ஆண்டவன் நிலையத்து அறைக் கதவுகள் மூடப்பட்டிருந்தன. அப்பொழுது மணி இரண்டு.

பவுர்ணமி! வானத்தையும் பூமியையும் வெள்ளி கொண்டு இழைத்துப் பால் கொண்டு தெளித்து அமுது கொண்டு கோலம் செய்தான் பூரணச் சந்திரன். அவனது வைபவத்தில் இந்த

மாநிலம் கண்மூடி ஊமையாகி பேரானந்த லயத்திலே கிறங்கிக் கொண்டிருந்தது.

ஆண்டவன் நிலையத்திலே அத்தனை அனுதைகளுக்கும் சம தர்ம முறையிலே தன் இன்ப நிலவமுதைச் சரிநிகர் சமானமாக வழங்கி உலகமெல்லாம் இன்புறுவது கண்டு தான் இன்புற்று நின்றான், வானமாமதிச் செல்வன். சாளரம் தோறும் ஆயிரம் ஆயிரம் ஒளிக்கைகளை உள் நுழைத்து அங்கங்கே கண்ணயர் கின்ற ஒவ்வோர் அநாதைக் குழந்தையின் மதி முகத்தையும் அன் போடு வருடினன், பவுர்ணமிச் சந்திரன்.

ஆண்டவன் நிலையத்துத் தோட்டத்தின் பக்கமாக ஐயா தம் பார்வையைச் செலுத்தினர். வாழைகள்; அவற்றின் அருகே கன்றுகள்! மரங்கள்; அவற்றின் அருகே செடிகள்! பூங்கொடி கள்; அவற்றின் அருகே பதியங்கள்! ஆலமரங்கள்; அருகில் அவற்றைத் தாங்கி நிற்கும் விழுதுகள்! தென்னைகள்! வானை அளாவி நிற்கும் மருத மரங்கள்! நிம்மதியான மோனத்திலே நிற்கும் கடம்ப மரங்கள்! தாயும் சேயும், தந்தையும் மகனும் என்ற உலக நியதியைப் பெரிதும் சிறிதுமாக' அருகருகே நின்று அந்தப் பட்டப்பகல் போன்ற நிலவின் ஒளியிலே உணர்த்தி நின் றது; மரஞ் செடி கொடிகளின் அந்த மாபெரும் கூட்டம்! இவற்றுக்கு அருகிலேதான் தாய் தந்தையற்ற குழந்தைகள் கோல நிலவின் அரவணைப்பிலே கண் துயில்கிறார்கள் என்ற ஒரு விநாடி கண்முன்னே தோன்றி மறைகிறது. ஐயா கண்களைத் துடைத்துக் கொள்கிறார்.

குடும்பம் என்றும், தாயும் பிள்ளையும் என்றும் ஏற்படுகிற இந்த இணைபிரியாத ஓர் உறவு மனிதகுலத்திற்கு மட்டுந்தானா? தன் கண்முன்னே தோன்றுகின்ற அந்தத் தோட்டத்தில் உள்ள மரக்குலத்துக்குள்ளும் அல்லவா இந்த உறவு அநாதிகாலமாக வித்துக்குள் நின்று வளர்ந்து வருகிறது.

ஐயா ஏதேதோ சிந்தனை செய்யத் தொடங்கினர். அன்று மாலை எதிர்பாராமல் வந்து சென்ற அந்தப் புதிய மனிதனின் வரவும், அவன் பேசிய வார்த்தைகளும் அவருடைய நெஞ்சத்தை அத்தனை தூரம் நெகிழவைத்து விட்டன!

எத்தனையோ கோடி காதங்களுக்கு அப்பால் நிற்கிற பூர ணச் சந்திரனுடைய ஒளியினுல் குமுதம் மலர்கிறது. கோடிக் கணக்கான காதங்களை ஒரு கணத்துள்ளே தாண்டி வந்து, இந்த வையத்து மலரை அணைக்கிறது, சந்திரனின் நிலாக்கற்றை. பாசம் என்ற அந்த ஒளி ஆற்றல் வானத்தைவிட உயர்ந்தது.



இந்த வையகத்தைவிட அகன்றது. அப்படியானல் மனித மனங்களை அது என்ன பாடு படுத்தும்! அந்த மனிதன் அப்படிப் பேசியதில் வியப்பு என்ன இருக்கிறது? ஒரு குழந்தையைப் போல் தேம்பித் தேம்பி அழுதானே, ஒரு வயதான மனிதன்! பாசம் செய்கிற வேலையல்லவா, அது! அன்பு படுத்துகிற பாடல்லவா, அது!

இப்படி எண்ணியதும் ஐயாவின் கலங்கிய கண்களில் நின்று தயங்கிய நீர்த்துளிகள் நிலவின் ஒளியிலே உதிர்ந்தன. மீண்டும் ஒருமுறை தமது கண்களைத் துடைத்துக் கொண்டார், ஆனாலும் உள்ளத்தின் ஊற்றில் இருந்து பெருகிய அந்த நீர்த்துளிகளை அவரால் அடைத்து நிறுத்திவிட முடியவில்லை. கண்களை மூடினார், உள்ளத்தை மூட முடியவில்லை. கண்களைத் துடைத்தார், உள்ளத்தைத் துடைக்க அவருக்குத் தெரியவில்லை.

ஆம். இரவு முழுதும் ஐயா தூங்கவில்லை. அவரது அறையின் கதவுகள் நன்றாக மூடித்தாளிடப்பட்டு இருந்தன. ஆனல், மனக்கதவு நன்றாகத் திறந்து கொண்டிருந்தது. எண்ணம் என்ற பறவை அறைக்கு வெளியே வானத்திற்கும் பூமிக்குமாகப் பறந்து கொண்டிருந்தது. மனித வாழ்வில் அறுபது எழுபது ஆண்டுகள் என்றால் மனப் பாதையிலே அது எத்தனை காததூரம்? ஆசைகள்—பாசங்கள், இன்பங்கள்—துன்பங்கள், உயர்வு—தாழ்வுகள் என்றெல்லாம் மனித மனம் பின்னிப் படர்கிற சிந்தனைக் காட்டுக்குள்ளே எங்கெங்கோ போய் முட்டி, மோதி, இடறி, தடுமாறி, ஊர்ந்து—எழுந்து—நின்று—நடந்து பறந்து, சுற்றித் திரிந்து மீண்டும் உழன்றார் ஐயா! அவரது அறிவு குழம்பியது.

எங்கோ ஒரு மரக்கிளையில் இருந்து ஒரு பறவைக் குஞ்சின் மெல்லொலி கேட்டது. அதைத் தொடர்ந்து தாய்ப்பறவையின் இறகுகள் படபடவென்று அடிக்கும் ஓசை! மீண்டும் அமைதி. ஐயா நினைத்தார், எல்லாம் அன்பு படுத்துகிற பாடு என்று!, மறுபடி அவருடைய கண்கள் கலங்கின.

இரவு முழுதும் அவர் மனம் நினைவுக்களத்திலே கால் பாவாமல் பறந்தும் திரிந்தும் தடுமாறி அலைந்தும் தத்தளித்துக் கொண்டிருந்தது. இதயத்துக்குள்ளே பூட்டி வைத்திருந்த அந்த இரகசியத்தை வெளியே விடவும், அப்படியே பூட்டி வைக்கவும் முடியாமல் திணறிக் கொண்டிருந்தார்.

# 8 வினாவும் விடையும்

மாய மனிதன் வந்துபோன நாளிலிருந்து சுமதிக்கு ஒரு விஷயம் உள்ளத்தை வேதனை செய்து கொண்டே இருந்தது. அவள் எதிர்பார்த்தாள், அந்த மனிதன் யார் என்பதையும், எதற்காக வந்தான் என்பதையும், என்ன பேசினான் என்பதையும் ஐயா தன்னிடம் சொல்லுவார் என்று! ஆனால், ஐயாவோ அது பற்றி ஒன்றுமே கூறாமல் நிசி நேரத்துப் பிரபஞ்சம் போல் அமைதியாக இருந்தார். இது அவளுக்கு வியப்பை அளித்ததோடு, வேதனையையும் உண்டாக்கியது. தன்னிடம் ஐயாவுக்கு நம்பிக்கை இல்லையா என்றுகூட ஒரொரு சமயம் அவள் சந்தேகப்பட்டாள். ஆனால், அதே சமயம் எவ்வளவு பெரிய பொறுப்பை, எத்தனை பெரிய நம்பிக்கையோடு தன்னிடம் ஒப்படைத்திருக்கிறார் ஐயா என்ற மகத்தான நினைவும் உள்ளத்தில் எழும். உடனே, கலக்கத்தைச் சரி செய்து கொள்வாள்.

இன்னொரு விஷயமும் சுமதியை வியப்பில் ஆழ்த்தியது. அந்த மாய மனிதன் வந்துபோன நாளில் இருந்து மாய மாமனைப்பற்றி ஏதொரு பேச்சும் இல்லை. அவளுக்கு அந்த விசித்திரமான கடிதத்தை எழுதியனுப்பிய அந்த மாமன், ஆண்டவன் நிலையத்துப் பக்கமே தலைகாட்டவில்லை. ஒரு நாள் சுமதி, சீதாமணியிடமே கூட ஆவலின் மிகுதியால் கேட்டுவிட்டாள், அந்த மனிதன் எப்பொழுதாவது வந்தானா என்று!

"அந்த மாமாதானே? காணவே காணோம்மா!" என்றாள் சீதாமணி. அப்படிச் சொல்லும்பொழுது அந்தக் குழந்தையுள்ளத்தில் தன்னையும் மீறிய ஒரு பாசம் எழுந்து ஒலித்தது. இந்தமுறை சுமதி, சீதாமணியை அந்தப் பாசத்திற்காகக் கோபிக்கவில்லை. ஏனென்றால், இப்பொழுதெல்லாம் சுமதிக்குமே உள்ளத்தின் ஒரு கோடியிலே அந்த மாய மனிதனிடத்தில் விவரிக்க முடியாத ஒரு பிரியம்! அது பிரியமா, அனுதாபமா அல்லது இரக்கமா? இல்லை, உண்மையான ஓர் அன்புதானா என்று சுமதியினாலேயே தீர்மானம் செய்ய முடியவில்லை.

நாட்களும் மாதங்களும் ஆண்டுகளும் பாசம் என்ற காலச் சக்கரத்தின் காலிலே இப்படி உருண்டு ஓடின.

சீதாமணி சிறுவர் கூடத்தில் இருந்து சிறுவர் பள்ளிக்குச் சென்றாள். பாலர் வகுப்பில் இருந்து ஆரம்பப் பள்ளிக்குச் சென்றாள். ஆரம்பப் பள்ளியில் இருந்து பின்னர் ஆரம்ப உயர் நிலைப் பள்ளிக்குச் சென்றாள். இந்தப் பள்ளியின் ஆரம்பத்திலே ஒரு நாள்:

சீதாமணியின் பள்ளிக்கூடத்திற்கு இன்ஸ்பெக்டர் அம்மாள் வந்திருந்தாள். அவளை மிகவும் வியப்பிலே ஆழ்த்திய ஒரு சம்பவம் நடந்தது.

ஆங்கிலத்தில் முதன்மையாக நின்ற மாணவி யார் என்று கேட்டால், "சீதாமணி" என்றாள், ஆசிரியை. தமிழில் முதன்மை யார் என்றால், மறுபடியும் "சீதாமணி" என்றாள், அந்த ஆசிரியை. கணக்கில் முதன்மை? சீதாமணி! சரித்திரத்தில்? சீதாமணி! பூகோளத்தில், பவுதிகத்தில், பொது அறிவில், வியாசத்தில்—எல்லாவற்றிலுமே "சீதாமணி, சீதாமணி" என்றே சொன்னாள், ஆசிரியை, உண்மையையும் அதே சமயம் சிரிப்பையும் அடக்க முடியாமல் புன்முறுவல் செய்து கொண்டே! மளமளவென்று வகுப்பிலே கேள்விகள் கேட்டாள், இன்ஸ்பெக்டர் அம்மாள், சீதாமணியைப் பார்த்து! ஆங்கிலத்தில், தமிழில், கணக்கில், சரித்திரத்தில், பவுதிகத்தில், பொது அறிவில்; பட்பட்டென்று பதில் வந்தது, சீதாமணியிடமிருந்து. திருப்தியும் வியப்பும் ஒருங்கே அடைந்த இன்ஸ்பெக்டர் அம்மாள், தலைமை ஆசிரியையின் அறைக்கு வந்ததும் நாற்காலியை இழுத்துப் போட்டு உட்கார்ந்து கொண்டே கேட்டாள்: "ஆமாம், இத்தனை பாடங்களிலும் உங்கள் சீதாமணி முதன்மையாக இருக்கிறாளே, விளையாட்டுப் போட்டியில் அந்த வகுப்பில் யாருக்கு முதன்மை இடம்?"

சந்தேகமென்ன? தலைமை ஆசிரியை சிரிப்பை அடக்க முடியாமல் சீதாமணி என்றே தீர்மானமாகச் சொன்னாள். இன்ஸ்பெக்டர் அம்மாளுக்கு இதற்கு மேல் வியப்பை அடக்க முடியவில்லை. சொன்னாள்: "ஏது இந்தப் பெண் ஒரு விசித்திரப் பிறவியாக இருப்பாள் போலிருக்கிறதே!"

இப்படிச் சொன்னபோது **பிறவி** என்ற சொல்லை அணைத்து நின்ற **விசித்திரம்** என்ற சொல்லின் பொருள் சீதாமணி விஷயத்தில் அத்தனை விசித்திரமாக இருக்கும் என்று அவள் அறிந்திருக்கவில்லை. தலைமை ஆசிரியை அமைதியாக நின்றதைப் பார்த்துவிட்டு. இன்ஸ்பெக்டர் அம்மாள் சொன்னாள்: "அந்தப் பெண்ணை இங்கே வரவழையுங்கள். அந்த விசித்திரப் பிறவி

யோடு தனியாக இரண்டு வார்த்தைகள் பேசிப் பார்க்க வேண்டும் என்று இருக்கிறது, எனக்கு."

அவ்வளவுதான். சீதாமணி உடனே வரவழைக்கப்பட்டாள். ஆவலுடன் அன்பும் ததும்பத் தனது கேள்வி மாரியைப் பொழிய ஆரம்பித்தாள் இன்ஸ்பெக்டர் அம்மாள். ஆனால், எத்தனை ஏமாற்றம் அவளுக்கு? வகுப்பில் "பட்பட்" என்று கேள்விகளுக்குப் பதில் சொன்ன சீதாமணி இப்பொழுது ஏன் தடுமாற வேண்டும்?

இன்ஸ்பெக்டர் அம்மாளுக்கு ஒன்றும் விளங்கவில்லை. இத்தனைக்கும் அவள் கேட்ட கேள்விகள் பாடம் சம்பந்தமான கேள்விகளே அல்ல. எந்த அசட்டுக் குழந்தையும் 'பளிச்' சென்று பதில் சொல்லிவிடக் கூடிய மிகவும் சாதாரணமான கேள்விகளே அவை.

முதலாவது கேள்வி, "உன் தகப்பனார் பெயர் என்ன?"

"ஐயா!" என்று பதில் சொன்னாள், சீதாமணி.

இன்ஸ்பெக்டர் அம்மாள் சிரித்தாள். "தகப்பனாருக்குப் பெயர் ஐயாவா!" என்றாள்.

சீதாமணிக்குக் கேள்வியின் பொருள் விளங்கவில்லை. தயங்கிக் கொண்டே, "ஆமாம்" என்றாள்.

"அப்படியானால் அம்மாவின் பெயர் அம்மாதானுக்கும்!" என்று இன்ஸ்பெக்டர் சொன்னாளோ இல்லையோ, சீதாமணிக்குக் கண் கலங்கிவிட்டது! முன்பொரு நாள் கனகம் தன்னிடம் வந்து தன் அம்மா இறந்துவிட்டாள் என்று சொன்னதும், அதன் பிறகுதான் அழுதுகொண்டே ஓடியதும்—எல்லாம் அப்படியே நினைவுக்கு வந்தன. அதன் பிறகு இன்ஸ்பெக்டர் அம்மாள் கேட்ட கேள்விகள் ஒன்றுமே சீதாமணியின் காதில் ஏறவில்லை!

இன்னொருநாள் யாரோ ஒரு பெரிய மனிதர் சீதாவின் பள்ளிக்கூடத்துக்கு வந்தார். வகுப்பில் முதன்மையாக இருந்த காரணத்தால் சீதாமணியைத் தனியாக விசாரணை செய்ய ஆரம்பித்தார் அவர். விசாரணை என்றால் என்ன?

"உன் தகப்பனார் பெயர் என்ன?"

மற்றொருநாள் சீதாமணியின் வகுப்புக்கு ஊசி குத்துகிற நகராண்மை அதிகாரி வந்தார்! அவராவது ஒன்றும் பேசாமல்

ஊசியை மட்டும் குத்திவிட்டுப் போகக்கூடாதா? அவரும் அதே கேள்வியைக் கேட்டார்! "உன் தகப்பனுர் பெயர் என்ன?"

சீதாமணிக்கு இந்தக் கேள்வி அவர் குத்திய ஊசியைவிட அதிகமாக வலித்தது!

ஊசி குத்துகிற மனிதர் மருந்தைத்தான் குத்தினுர். ஆனுல் இந்த உலகம் சீதாமணியின் தகப்பனுரைப் பற்றிய கேள்வியிலே விஷத்தையும் சேர்த்துக் குத்த ஆரம்பித்தது. சீதாமணியின் உள்ளத்துக்குள்ளே! இப்பொழுது சீதாமணி சென்னை மாநகரத்தின் பெரிய பள்ளிக்கூடம் ஒன்றிலே உயர்ந்த வகுப்பில் படித்துக் கொண்டிருந்தாள்!

ஆமாம்; படிப்பு உயர உயர அவளது பிறப்பைப் பற்றிய நிலை தாழ ஆரம்பித்தது. அவளோடு படித்த மாணவிகளில் சிலர் சீதாமணியின் தாயைப் பற்றியும் சீதாமணியின் பிறப்பு இரகசியத்தைப் பற்றியும் சீதாமணியின் காதில் விழும்படியாகவே பேச ஆரம்பித்தார்கள்.

சீதாமணி இப்பொழுது எஸ். எஸ். எல் சி. வகுப்புக்கு வந்துவிட்டாள். அவளது அறிவுக் கூர்மையைப் பாராட்டாத ஆசிரியர்களே இல்லை. ஆனுல்?

சீதாமணி எல்லாப் பாடங்களிலும் அபாரமான திறமையோடு விளங்கினுள் என்ற காரணத்தினுல், கல்வி நிலையத்திலே அவளுக்கு ஒரு செல்வாக்கு இருந்தது என்பது உண்மை. ஆனுல், ஏதோ ஒரு தாழ்வு மனப்பான்மை அவளையும் அறியாமல் அவள் மனத்துக்குள் புக ஆரம்பித்தது! உலகம் அதை வளர்த்தது!

ஆண்டவன் நிலையத்து ஐயா தன் தகப்பனுர் இல்லை என்பது வெளிப்படை. சீதாமணிக்கு அது நன்ருகத் தெரிந்தது. ஆனுல் சுமதியைத் தன் வளர்ப்புத்தாய் என்று தெரிந்து கொள்ளத்தான் நீண்டநாள் பிடித்தது. அப்படித் தெரிந்தாலும் அதை உண்மை என்று நம்புவதற்கு அவள் இதயம் கஷ்டப்பட்டது! பெற்ற தாய் இதைவிட எப்படி அன்பாக இருப்பாள்? தனக்கு எவ்வகையிலும் சம்பந்தமில்லாத ஒரு பெண்மணி தன்னிடம் தாயைப் போல் இத்தனை வாஞ்சையோடு இருப்பது என்ருல் அது எப்படி?

சீதாமணி விடுமுறை நாட்களில் எல்லாம் தனியாக

அறைக்குள்ளே இருந்து கொண்டு பலவாறாக யோசிப்பாள். சுமதியம்மையிடம் சென்று இதைக் கேட்டு விடலாமா என்று கூடத் தோன்றும். சிறு வயதில் இதே கேள்வியை ஓடோடியும் சென்று கேட்ட சீதாமணி. இப்பொழுது மாதக்கணக்காக—ஆண்டுக்கணக்காக இந்தக் கேள்வியை மனத்துக்குள்ளேயே போட்டு உழப்பிக் கொண்டிருந்தாள்.

இப்படியிருக்கும்போதுதான் ஒரு நாள் பள்ளிக்கூடத்தில் "பெற்றோர் தினம்" விமரிசையாகக் கொண்டாடுவதற்கு ஏற்பாடுகள் நடந்து கொண்டிருந்தன. பள்ளித் தலைமையாசிரியை சீதாமணியைக் கூப்பிட்டு, "இந்த விழாவுக்கு யாரை அழைத்து வருவது என்று நீ தயங்காதே. சுமதியம்மாளைக் கட்டாயம் வரும்படி நான் அழைத்தேன் என்று சொல்லு!" என்று கூறினார்.

சீதாமணி அன்று நிலையத்துக்குத் திரும்பிச் செல்லும் போது பஸ்சில் இருந்து கொண்டே சிந்தனை செய்தாள்; தலைமை ஆசிரியை இப்படிச் சொன்னாளே, சுமதியம்மாள் வரலாம், தயங்கவேண்டியதில்லை என்று கூறினாளே—இதன் பொருள் என்ன? தலைமை ஆசிரியைக்கு எல்லா விவரங்களும் தெரியுமா? அப்படியானால் தன்னைப்பற்றிய தன் பிறப்பைப் பற்றிய செய்திகளை எல்லாம் சுமதியம்மை இந்த ஆசிரியையிடம் சொல்லியிருப்பாளோ?

இப்படியெல்லாம் எண்ணிக் குழப்பிக் கொண்டே வேதனை கொண்ட உள்ளத்தோடு ஆண்டவன் நிலையத்துக்குள்ளே வந்தாள், சீதாமணி.

"மணி! முகம் எல்லாம் எப்படியோ இருக்கிறதே? ஏனம்மா? ஏன் இப்படிக் களைத்துப் போயிருக்கிறாய்?" என்று கேட்டாள், சுமதி, மிக்க அன்போடு.

"ஒன்றுமில்லையம்மா—எங்கள் பள்ளியில் பெற்றோர் தினம் கொண்டாடுகிறார்கள். அதற்கு உன்னை அழைத்து வரும்படி தலைமை ஆசிரியை சொன்னாள்—"

"சரி, வருகிறேன். அதற்கும் உன் முகமெல்லாம் வாடியிருப்பதற்கும் என்ன சம்பந்தம்?"

"அம்மா! உன்னோடு ஒரு விஷயம் பேச வேண்டும். நீ கோபிக்காமல் கேட்டால் பேசுகிறேன். எத்தனையோ நாட்களாக மனதுக்குள்ளேயே வைத்துக் கொண்டிருக்கிறேன். கேட்

பதற்குத் தைரியம் வரவில்லை. சிறு வயதில் இருந்த தைரியம் இப்பொழுது இல்லை!" என்றாள். சீதாமணி.

சுமதி சிரித்தாள். சிரித்துக்கொண்டே சொன்னாள்

"சின்ன வயதில் நீ அந்தக் கேள்வியைக் கேட்டது தைரியத்தினால் இல்லை. பசலைத்தனத்தினால் கேட்டாய். இப்பொழுது விதரணையோடு கேட்கிறாய். அதனால் தான் கேட்க முடியவில்லை. அப்படித்தானே?"

இப்படிச் சொல்லும்போதே சுமதியின் மனக்கண்முன் சீதாமணி முன்பொருநாள் சிறு குழந்தையாக விம்மி விம்மி அழுது கொண்டே ஓடிவந்த காட்சி நின்றது.

"அம்மா, அம்மா! நீ எனக்கு அம்மா இல்லையா? சத்தியமாச் சொல், நீ எனக்கு அம்மாவா இல்லையா? ஒரே பேச்சிலே சொல்லிடு அம்மா, கனகம் சத்தியம் பண்றும்மா, நீ என்னோட அம்மா இல்லேன்னு! எனக்கு அழுகை அழுகையா வருது; சொல்லம்மா."

சுமதியின் மேலே பாய்ந்து பற்றிக்கொண்டு சீதாமணிச் சிறுமி இவ்வாறு கதறியதெல்லாம் சுமதிக்கு நினைவு வந்தது.

"கண்ணு! சத்தியமாச் சொல்றேன், நான்தான் உன் அம்மா! எனக்கு, உனக்கு, நம்ப எல்லாருக்குமே 'ஐயா' தான் அப்பா! அழாதேடா கண்ணு, சத்தியம், சத்தியம் சத்தியம்!"

இவ்வாறு அந்தக் காலத்தில் சுமதி சீதாமணியிடம் கூறித் தப்பித்துக் கொண்ட நினைவு வந்ததும் சுமதியின் கண்கள் கலங்கின.

அன்று சீதாமணி பசலைச் சிறுமி. அதனால் சத்தியம் பண்ணி அவளுக்கு ஆறுதல் தந்தாள், சுமதி. இன்றோ?

"மணி, நீ குழந்தையாக இருக்கும்பொழுது உன்னை ஆறுதல் செய்வதற்கு ஒரு சத்தியம் பயன்பட்டது. இன்று உன்னிடம் அது பயன்படாது!"

இப்படிச் சொல்லியவாறு சீதாமணியின் அருகில் வந்து அவளுடைய அழகிய கூந்தலை அன்புக் கரங்களால் தடவினாள், அன்னை சுமதி.

"கண்ணே! அன்று சத்தியம் பண்ணினேன். இன்று உனக்குச் சத்தியத்தைச் சொல்லி விடுகிறேன். கவலைப்படாதே"

இவ்வாறு சொன்ன சுமதி அதற்கு மேல் பேச [illegible]

சீதாமணியின் கன்னத்தைக் கிள்ளியவாறு ஒரு தாயின் அன்போடு அவளை அணைத்துக் கொண்டாள்.

சீதாமணி சொன்னாள்:

"அம்மா! இந்த உலகில் எத்தனையோ குழந்தைகள் அன்பு என்பது என்ன என்று தெரியாமலேயே வளர்கிறார்கள். தாய் தந்தையர்கள் இருந்தும் பயத்திலும் நடுக்கத்திலும் வளர்கிற மாணவ மாணவிகள் பலரை எனக்குத் தெரியும். ஆனால், நானோ அப்படியில்லை. பிறந்ததில் இருந்து அன்பிலே தவழ்ந்தேன். ஐயாவின் கருணையிலே திளைத்தேன். அம்மா, உன் எல்லையற்ற பாச வெள்ளத்திலே கவலையின்றி மிதந்து செல்லுகிறேன். என்றாலும். என்னிடம் ஏன் மற்றக் குழந்தைகள் இரக்கப்பட வேண்டும்? எனக்காக ஏன் இந்த உலகம் அனுதாபப்பட வேண்டும்? இல்லை, இரக்கப்படுவதாகவும் அனுதாபப்படுவதாகவும் ஏன் பாசாங்கு செய்ய வேண்டும்? தாய் தந்தையர்களின் முன்னிலையில் பயந்து பயந்து சாகிற மாணவ மாணவிகளுக்கு நான் எந்த வகையில் தாழ்ந்து விட்டேன்? அவர்களுக்கு இருக்கிற துன்பம் எனக்கு இல்லையே! 'அப்பா' என்றால் நடுநடுங்கும் ஒரு மாணவி, என்னிடம் வந்து ஏன் என் அப்பாவைப் பற்றி ஓரக் கண்ணோடு பேச வேண்டும்? அதுதான் எனக்குப் புரியவில்லை! என்னை அவமதிப்பதற்காக என்றே இந்த உலகம் இப்படிச் செய்கிறதா? அல்லது, என்னைவிடத் தாம் உயர்ந்தவர்கள் என்பதை நிலைநாட்டிக் கொள்வதற்காக மற்றவர்கள் இப்படி நடந்து கொள்கிறார்களா? இதெல்லாம் எனக்குப் புரியவில்லையே அம்மா! சொல்லம்மா!"

இப்படிக் கேட்டாள், சீதாமணி.

சுமதி சொல்லுவாள்:

"கண்ணே! உலகம் என்பது அப்படியெல்லாம் விளக்கி விடக்கூடிய பொருள் இல்லை. பல்லாயிரம் ஆண்டுகளாக அழுக்கும் கறையும் படிந்துவிட்ட ஒரு பாத்திரம் இந்த மனித சமூகம். அதை விளக்கித் துலக்குவது நம் கையில் இல்லை. ஆனால், ஒன்று சொல்கிறேன்; எந்த வகையிலும் நீ மற்றக் குழந்தைகளுக்குத் தாழ்ந்துவிடவில்லை; உனக்கு உன்னைப் பற்றிய செய்திகள் தெரியாததால் நீயும் உன்னை அறியாமலேயே அந்தத் தாழ்வு மனப்பான்மை வளர இடம் கொடுத்துவிட்டாய். அது வாளவு எ[illegible] தவறு. உன்னிடம் நானே சொல்லியிருக்க வேண்

டும்; நீ கேட்கும்வரை பேசாமல் இருந்துவிட்டேன்! இனி, அப்படி இருக்கக்கூடாது."

அன்றிரவு சுமதி, சீதாமணி இருவருமே உறங்கவில்லை. சீதாமணிக்கு அவளது பிறப்பின் கதையைச் சொன்னாள் சுமதி.

# 9 மன விலாசம்

"சென்னை மாநிலக் கல்லூரி மாணவன் சிவசுந்தரமும் மேரி அரசியார் கல்லூரி மாணவி சீதாமணியும் அடிக்கடி கடற் கரையில் சந்திப்பது உண்மையா?"

இவ்வாறு ஆணித்தரமாகக் கேட்டான், கிருஷ்ணமூர்த்தி.

"சட்டசபையிலே கேள்வி கேட்கிற தோரணையில் அல் லவா போடுகிறாய், ஒரு போடு!" என்றான், ரங்கசாமி, மணலை இரண்டு கைகளிலும் எடுத்து விரல்களின் ஊடே ஒழுகவிட்டுக் கொண்டே!

"ஸ்ரீதாமணிக்கும் சிவசுந்தரத்துக்கும் வால்ட் டிஸ்னிக் கும் என்ன தொடர்பு? இந்த முக்கூட்டு ஒப்பந்தத்தின் உண்மை என்ன?" என்று கேட்டான், கிருஷ்ணமூர்த்தி.

"எல்லாரும் பார்க்கிற திரைப்படத்தைத்தான் அவர்களும் போய்ப் பார்க்கிறார்கள்! இதில் கூட்டும் அவியலும் எங்கே வந்தது?" என்று சொன்னான், ரங்கசாமி, கையில் பிடித்திருந்த சிகரெட்டின் சாம்பலைப் பெருவிரலால் தட்டிக் கொண்டே!

"இரவு நேரங்களில் மேரி ராணி ஆஸ்டலில் பன்னிரண்டு மணிக்குமேல் தன்னந்தனியே இருந்து சீதாமணி என்ன எழுது கிறாள்? அதன் மர்மம் என்ன?" என்று கேட்டான், கிருஷ்ண மூர்த்தி.

இந்தத் தடவை அவனோடு ராமமூர்த்தியும் சேர்ந்து கொண்டான்.

"இந்த மர்மத்தை விளக்க முடியுமா?" என்று கேட்டான் அவன்.

"எல்லாரும் எழுதுகிற காதல் கடிதங்களைத்தான் அவளும் எழுதுவாள்! இதில் மர்மம் என்ன இருக்கிறது?

இப்படிச் சொன்னான் ரங்கசாமி, மணலில் கிடந்த சிறு கற்களைத் தூக்கி எறிந்து கொண்டே.

சென்னை மாநகரத்தின் மாணவர் மாவட்டத்தில் சீதாமணியையும் சிவசுந்தரத்தையும் பற்றி விமர்சனங்கள் நிகழ ஆரம்பித்தன. இந்த விமர்சனங்களைப் பற்றி உண்மையிலேயே கவலைப்படாத இருவர் இருந்தார்கள். அவர்கள் சீதாமணியும் சிவசுந்தரமுமே!

ஆம். இந்த உலகில் இதுவரை சீதாமணியின் உள்ளத்தில் இருந்து வந்த ஒரு பெரிய கவலை அன்றோடு நீங்கிவிட்டது. 'மனித சமூகத்தில் தன்னை ஒரு விசித்திரப் பிறப்பு என்று நினைத்துக் கொள்பவர் நினைத்துக் கொள்ளட்டும், தன் உள்ளத்தில் தனக்கு எவ்விதத் தாழ்வு மனப்பான்மைக்கும் இனி இடம் இல்லை!' என்ற ஒரு மனநிலை, சீதாமணியின் நடையுடை பாவனைகளில் ஒரு தன்னம்பிக்கையை உண்டாக்கி விட்டது.

முன்பெல்லாம் நாலு பேர் பேசிக் கொண்டிருக்கிற இடத்தில் தானும் போய்க் கலந்து கொள்ளக் கூசுவாள், சீதாமணி. மாணவர் மன்றம், விவாத அரங்கம், சொற்பொழிவுப் பேட்டி இவற்றில் எல்லாம் கலந்து கொள்ளாமல் ஒதுங்கி நடந்து சென்று கொண்டிருந்த சீதாமணி, இப்பொழுது இரட்டிப்பு ஊக்கத்தோடு கல்லூரி வாழ்விலே பங்கு கொண்டாள்! அவள் உள்ளத்தில் ஏற்பட்டது கர்வமில்லை, ஆனால், தன்னம்பிக்கை!

அன்னை சுமதி சீதாமணிக்கு அவளது பிறப்பில் நிகழ்ந்த சோகத்தை எடுத்துச் சொல்லும்போது சீதாமணி கண்ணீர் வடித்தாள். சுமதி சீதாமணியின் உள்ளத்தைத் திடப்படுத்துவதற்காக சில செய்திகளை அழுத்தமாகவே கூறினாள். அதெல்லாம் சீதாமணியின் மன வேதனையைப் போக்கி ஒரு நூதனத் தெளிவை உண்டாக்கின.

சுமதி முடிவாகச் சொன்னாள்: "மணி! வாழ்வில் எதற்கு இடம் கொடுத்தாலும் தாழ்வு மனப்பான்மைக்கு இடம் கொடுத்துவிடாதே! மனிதர் எல்லாரும் சரி நிகர் சமானம் என்று சொன்ன புண்ணிய நாடு, நம் பாரத நாடு. இந்த நாட்டில் அனாதிகாலமாகத் தோன்றி வளர்ந்து வருகிற மனித தர்மத்தில், உயர்வு—தாழ்வு என்பதற்கு இடமில்லை. கருணை உள்ளவர்கள் உயர்ந்தவர்கள்; ஈவிரக்கம் இல்லாதவர்கள் தாழ்ந்தவர்கள் என்று ஐயர் அடிக்கடி சொல்லுவார். அதை மட்டும் எப்பொழு[illegible] வைத்துக் கொள். உன்னுடைய தாயும் தந்தையும்

"யார், எவர்?' என்ற ஆராய்ச்சியில் பிறர் பிரவேசிக்க முயலும் போதெல்லாம் நீ சற்றுக் கண்டிப்பாகவே பதில் சொல்லிவிடு. உனது தன்னம்பிக்கைதான் உனக்குப் பக்கபலம். அதை மறந்து விடாதே! இந்த மனித சமூகம் தாழ்வு மனப்பான்மை கொண்டவர்களை எத்தனையோ விதத்தில் துன்பப்படுத்தும். கங்கணம் கட்டிக்கொண்டு அவமரியாதை செய்யும். அதைப் பொருட்படுத்தினுல் வாழ்வு நரகமாகி விடும். உன் வரையில் உன் அன்னை இந்தப் புண்ணியத் தமிழ்க் குலத்தின் மாசற்ற குலக்கொடி. உன் தந்தை சமூகச் சிக்கல்களிலே அகப்பட்டு மனிதர்களின் சூழ்ச்சியினுல் நிலை குலைந்து நிற்கும் ஓர் உத்தமர். ஆனுல், இதையெல்லாம் உலகம் கண்டதா! ஏதேதோ விபரீதக் கற்பனைகளை எண்ணுகிறது. அவற்றில் நீயும் உன் உள்ளத்தைச் சிக்கவைத்து விடாதே!"

இந்த வார்த்தைகளைச் சுமதி கூறிய விஞடியில் இருந்து சீதாமணியின் மனத்தில் ஒரு புதிய நம்பிக்கை பிறந்தது. வெளி யுலகை அச்சமின்றிப் பார்க்கும் பார்வை அவளுக்குக் கிடைத் தது. என்ருலும், அவள் உள்ளத்தின் ஒரு கோடியிலே நூதன மான புதிய சிந்தனை ஒன்று பிறந்தது.

சீதாமணியோடு படித்த மாணவிகள் சிலரின் வாழ்வில் சொல்லொணுத வேதனைகள் நிகழ்ந்தது உண்டு. அவளது பிறந்த வீடான ஆண்டவன் நிலையத்திலே தாய்மார்களைப் புறக்கணித் துச் சென்றுவிட்ட தந்தையர்களைப் பற்றிப் பல சிறுவர் சிறு மியர்கள் கூறுவதுண்டு. அப்பொழுதெல்லாம் சீதாமணி தன் மனத்துக்குள் எண்ணுவாள்: 'என் அன்னை இவ்வுலகில் இருந்து மறைந்தாள். என்ருலும் தந்தை என்னைப் புறக்கணிக்கவில்லை என்பது உண்மை. எங்கோ இருக்கிருர். ஆனு லும், இருந்தும் இல்லாதது போல்தானே என் நிலை இருக்கிறது. மற்ற அனுதைக் குழந்தைகளுக்கும் எனக்கும் என்ன வித்தி யாசம்?'

இவ்வாறு ஒரு விசித்திரமான எண்ணம் எப்பொழுது தாவது அவள் உள்ளத்தில் தோன்றும். என்ருலும், உடனே புன் முறுவலோடு ஒரு தெளிவு பிறக்கும். 'என் தந்தை இந்த உல கில்தான் இருக்கிருர். எங்கோ இருக்கிருர். ஆனுல், நிச்சயம் இருக்கிருர். அவரை என்ருவது ஒரு நாள் பார்ப்பேன்!'

இப்படியெல்லாம் 'எந்தையும் தாயும்' என்று எண்ணி எண்ணிப் பலவாருக உள்ளத்திலே சிந்தனை[illegible]
அந்தக் குடும்பத்திலேயே[illegible]

டாள், சீதாமணி. எங்கோ பிறந்து, எங்கோ வளர்ந்து, எப்படியோ திரிகிற அநாதை என்று இல்லாமல், தனக்கு ஒரு விலாசம் கிடைத்து விட்டது போல் அவள் உள்ளத்தின் அந்தரங்கத்தில் ஒரு திருப்தி! அதனால் அந்த விலாசத்தை மீண்டும் மீண்டும் மனப் பலகையிலே எழுதிப் பார்த்து எழுதிப் பார்த்துத் தனக்குத்தானே மகிழ்ந்து கொண்டாள், சீதாமணி.

ஆண்டவன் நிலையத்தின் தந்தையாகிய ஐயாவின் மனதில் கடந்த சில நாட்களாக ஒரு பெரிய நிம்மதி! மனிதர்கள் பலர், வாழ்வில் எத்தனையோ சோதனைகளுக்கு உள்ளாகி அதன் விளைவாக மனித குலத்தையே வெறுத்து விடுவதைப் பார்த்திருக்கிறார். அப்படி வெறுப்புக் கொண்டவர்களை எல்லாம் அழைத்து வந்து வாழ்வில் அவர்களுக்கு ஒரு புதிய நம்பிக்கையை ஊட்ட முடிந்தால் அதுவே தான் செய்யக்கூடிய பெரிய சேவை என்று கருதி வருகிறவர் அவர். இந்நிலையில் அந்த அநாதை விடுதியில் திக்கற்ற மனிதர்கள் எத்தனையோ பேர் அவரைத் தங்களுடைய 'தந்தை' என்று கொண்டாடி வந்ததில் வியப்பில்லை அல்லவா? புது நம்பிக்கையோடு புதிய பிறப்பாகவே தங்களைக் கருதிக் கொண்டு, அந்தப் பிறப்புக்குக் காரணமான ஐயாவைத் தங்களின் 'தந்தை' என்று அழைத்ததில் ஒரு பொருத்தம் இருந்தது என அன்னபூரணி அம்மாள் சொல்வதுண்டு. ஐயாவும் இதைக் கேட்டுப் புன்முறுவல் செய்து கொள்வதுண்டு. ஆனால், சீதாமணி சம்பந்தப்பட்டவரை அவள் உள்ளத்தில் புதிதாக உண்டான தன்னம்பிக்கையும், அவளது பிறப்பைப்பற்றிய தெளிவும் ஐயாவின் உள்ளத்தில் ஏதோ ஒரு விவரிக்க முடியாத அச்சத்தை ஏற்படுத்தின. விவரம் தெரியாத வயதுவரை சீதாமணி, சுமதியே தன் 'தாய்' என்றும், ஐயாவே தன் 'தந்தை' என்றும் எண்ணி வந்தாள் அல்லவா? இதுபற்றி ஐயா ஒருவகையில் திருப்தியாகவே இருந்தார். 'தான் ஓர் அனாதை' என்று அவள் எண்ணிவிடக்கூடாதே என்ற கவலை காரணமாகவே அவர் அவ்வாறு திருப்திப்பட்டுக் கொண்டார். பிறகு அந்த உணர்ச்சியை உண்மையாகவே வளர்ப்பதற்காக அவர் தம் அன்பையெல்லாம் அந்தச் சிறுமியிடம் கொட்டினார். கருணையும் அனுதாபமும் மெள்ள மெள்ள வளர்ந்து அன்பாகி இப்பொழுது அளவற்ற பாசமாக முதிர்ந்துவிட்டது. அந்தப் பாசத்தில் சீதாமணி தன் மகள் என்பது போன்ற ஓர் எண்ணம்—அவராக [illegible] கொண்டது, பிறகு அவராகவே வளர்த்துக்

என்றோ ஒருநாள் தன்னையும் இந்த ஆண்டவன் நிலையத்தையும் விட்டுப் பிரிந்து ஏதோ சுற்றத்திலே சென்றுவிடக்கூடிய காலமும் வரத்தானே செய்யும் என்ற எண்ணம் அவர் உள்ளத்தில் அரும்ப ஆரம்பித்தது.

'குடும்பம் என்றும் உறவினர்கள் என்றும் பந்தம் இல்லாத என்போன்ற ஒரு கிழவனுக்கு இந்த நிலையத்துக் குழந்தைகள் அனைவரும் சமம்தானே! இவர்களில் வித்தியாசம் பாராட்டுவதுகூட ஒரு தவறுதானே!' என்று சில நேரங்களில் நினைப்பார். அதோடு, மாயமனிதனின் எதிர்பாராத வருகையும், அவன் சொன்ன செய்திகளும் அவர் உள்ளத்தைக் குழப்பின. ஆனாலும், சீதாமணியிடம் அவருக்கு ஏற்பட்டுவிட்ட பாசத்தை அவரால் மறைத்துக் கொள்ள முடியவில்லை. இந்த நிலைமையில்தான் சீதாமணி சென்னை ஆஸ்டலிலேயே இருந்து படிக்க வேண்டிய காலம் வந்தது!

"ஆஸ்டலில் எதற்காகச் சேர்க்க வேண்டும்? எத்தனை பிள்ளைகள் தினந்தோறும் பஸ்சில் போய் வருகிறார்கள். நம் மணியும் அப்படிப் போய் வரட்டுமே" என்று சுமதி முதலில் ஆட்சேபித்தாள். ஐயா என்னவோ அது விஷயத்தில் தீர்மானமாக இருந்து விட்டார். சுமதிக்குக்கூட இது வியப்பாக இருந்தது.

தன்னையும் மீறித் தன் உள்ளத்தில் சீதாமணியின் மீது ஏற்பட்டுவிட்ட அந்த வாஞ்சையைப் படிப்படியாகக் குறைத்துக் கொள்ள இப்படி ஒரு வழி வகுத்தாரா, ஐயா? சீதாமணி மற்றப் பிள்ளைகளைப் போல் சுதந்திரமாகச் சில நாள் வாழ வேண்டும் என்று கருதினாரா? அல்லது அனாதை நிலையத்து வாழ்க்கையிலிருந்து விடுபட்டு சுயேச்சை மிகுந்த சென்னை நகரத்துக் கல்லூரி வாழ்விலே சீதாமணி நன்றாகப் பயிற்சியடைய வேண்டும் என்று விரும்பினாரா? இல்லையென்றால், சீதாமணியின் வாழ்க்கை வரலாற்றின் உண்மைகளை எல்லாம் வேறுயாரையும் விடத் தாம் நன்றாக அறிந்திருந்த காரணத்தால் அவளது எதிர் காலத்திற்கு ஏதோ ஒரு திட்டம் இட்டு இப்படி அவளுக்கு ஒரு புதிய சூழ்நிலையை உருவாக்கிக் கொடுத்தாரா?

இதையெல்லாம் பற்றி யாருக்கும் எதுவும் சொல்ல முடியவில்லை. அன்னை சுமதியேகூட இந்தக் கேள்விகளை எல்லாம் தன்னைத்தானே கேட்டுக் கொண்டதுண்டு. ஆனால், அவளுக்கும் ஐயாவின் நோக்கம் பிடிபடவில்லை. ஒருநாள் [illegible]

"அம்மா எங்கள் எல்லோரையும் விட ஐயாவை நன்றாகப் புரிந்து கொண்டவர் நீங்கள். அவரது மனப்போக்கு உங்களுக்குத்தான் புரியும்! தயவுசெய்து சொல்லுங்கள். சீதாமணியின் வாழ்க்கையை எப்படி உருவாக்குவது என்று ஐயா திட்டமிட்டு இருக்கிறார்? இத்தனை வாஞ்சைக்கும் மத்தியில் அவளை விட்டுப் பிரிந்திருக்க அவரால் எப்படி முடிகிறது? என்னால் முடியவில்லை. அவரால் முடிகிறது என்பதையே என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை!"

இந்த வார்த்தைகளுக்கு அன்னபூரணி அம்மாள் உடனே மறுமொழி சொல்லவில்லை. நீண்ட நேரம் அமைதியாக கலவரத்தையும் கண்ணீரையும் பார்த்துவிட்டு, அன்னபூரணி அம்மாள் சொல்லுவாள்.

"சுமதி! சீதாமணியின் பிறப்பு ஒரு சோகம், அவளுடைய பெற்றோரின் வாழ்க்கை ஒரு இரகசியம்! அவளது எதிர்காலம் ஒரு புதிர்! இவ்வளவுதான் என்னால் சொல்ல முடிகிறது. ஆனால், ஒன்று மிக மிக உறுதியாகத் தெரிகிறது. நம் அனைவருக்கும் சீதாமணியிடம் எத்தனை அன்பு உண்டோ, அத்தனை அன்பு ஐயாவுக்கும் அவளிடம் உண்டு. உன் பாசத்துக்கு அவரது பாசம் சற்றும் குறைந்ததில்லை. இப்படிச் சொல்வதற்காக என்னை வித்தியாசமாக நினைத்துக் கொள்ளாதே! சில நேரங்களில் சீதாமணி என்ற சொல்லைக் கேட்டதும் அவருடைய கண்கள் கலங்குவதை நான் கண்டிக்கிறேன். பல நாட்களில் அவர் ஒரு 'போட்டோ ஆல்ப'த்தை எடுத்து வைத்துக் கொண்டு தன்னந்தனியாக இருந்து ஏடுகளைப் புரட்டுவதைப் பார்த்திருக்கிறேன். இன்னொரு சந்தேகங்கூட எனக்கு உண்டு. நமக்கெல்லாம் தெரியாமல் அவர் அடிக்கடி சீதாமணியைச் சென்று பார்த்து வருகிறார் என்று நினைக்கிறேன். ஏனென்றால், இப்பொழுதெல்லாம் அவர் அடிக்கடி சென்னைக்குப் போகிறார். வேலைக்காரர்களே சென்று முடித்துவிடக்கூடிய ஒரு சிறு காரியத்திற்குக் கூடத் தாமே புறப்பட்டுச் சென்னை போகிறார். அங்கு போவதற்கு ஏதாவது அவசியம் ஏற்படாதா என்றுகூடக் கஷ்டப்பட்டு முயல்கிறார். இது எனக்கு நன்றாகத் தெரியும்."

அந்த வார்த்தைகளைக் கேட்டு சுமதி அத்தனை குழப்பத்திலும் மனம் பூரித்தாள். அவள் சொன்னாள்:

"அம்மா! இந்த மருத்துவ விடுதியில் நான் வந்து சேர்ந்த [illegible]து எத்தனையோ பெண்களுக்குப் பாடு பார்த்திருக் [illegible]க்குப் பலவிதத் [illegible]

கள் செய்திருக்கிறேன். அப்பொழுதெல்லாம், கடமை முடிந்ததும் அதைப் பற்றிய நினைவு மறந்து போய்விடும். ஆனால், சீதாமணியின் அன்னையை மயங்கிய நிலையிலே கண்ட அந்த வினாடி என் உள்ளத்தில் எழுந்த உணர்ச்சி வெறும் கடமை உணர்ச்சி மட்டும் இல்லை. ஏதோ ஒரு விளக்க முடியாத சொந்த உணர்ச்சி அந்த நிமிடமே எனக்கு ஏற்பட்டுவிட்டது. அந்தக் குழந்தையை வளர்த்து ஆளாக்கும் ஓர் இன்பம் என்னையும் அறியாமல் அந்தக் கணமே என்னை ஆட்கொண்டு விட்டது என்று நினைக்கிறேன். அந்த நேரத்திலிருந்து இதுவரை ஒன்றிலும் பற்றில்லாத எனக்கு அளவற்ற பாச பந்தங்கள் உண்டாகிவிட்டன. இப்பொழுது அவளை விட்டுப் பிரிந்திருக்கவே முடியாதபடி வேதனைப் படுகிறேன்."

சுமதியின் இந்தச் சொற்களை ஆழ்ந்து கேட்ட அன்னபூரணி சொன்னாள்:

"சுமதி! தாய்ப்பாசம் என்பது ஓர் ஆழ்ந்த தத்துவம். மணமாகாத உன்னைப் போன்ற ஒரு கன்னிப் பெண்ணுக்கு இந்த வகையான தாய்ப்பாசம் ஏற்பட்டு விட்டால், அதற்கு இந்த உலகில் ஈடு இணையே கிடையாது.

மணமாவதற்காகக் காத்திருக்கும் ஒரு கன்னிப் பெண்ணின் உள்ளத்தில் பாசம் என்பது கப்பும் கவருமாகக் கொடி வீசிப் படர்வதற்காக ஓங்கி நிற்கிற பூஞ்செடியைப் போன்றது. அத்தனை பாசக் கொடிகளும் வேறு எந்த உயிரையும் நாடாமல் ஒரு குழந்தையையே மையமாகக் கொண்டு படர்ந்து பின்னுமானால், அதன் ஆற்றலையும் எல்லையையும் என்னவென்று சொல்லுவது?

"இதெல்லாம் காரணமாகத்தான் நம்மவர்கள் சேவை செய்யும் பெண்களை வாழ்வில் உத்தமக் கன்னிகைகளாக விளங்க வேண்டுமென்று தர்மம் விதித்தார்கள். புத்தரின் அடியார்களைப் பற்றி நம் நாட்டில் வழங்கி வருகிற கதைகள் எல்லாம் உனக்குத் தெரியுமே! மணிமேகலை போன்ற தியாகக் கன்னிகள் ஏந்தி நின்ற அட்சய பாத்திரத்தில், எடுக்க எடுக்க வற்றாது சுரக்கக் கூடிய அன்பு என்ற அமுதத்தின் தத்துவம் இதுதான் அம்மா!

"ஐயாவிடம் கேட்டால் இந்த உன்னதமான மனத் தத்துவத்திற்கும் தியாகத்திற்கும் தமிழ்நாட்டுப் பெண்மணிகள் பலரை உதாரணம் சொல்லுவார்.

"காலம் கடந்த கன்னித் தத்துவமான அவ்...

பெண்மைப் பாத்திரத்துக்குள்ளும் இப்படிப்பட்ட ஒரு மாபெரும் சேவைதான் பொதிந்துள்ளது.

"என்னைக் கேட்டால் அப்படிப்பட்ட ஒரு மகத்தான வரிசையிலே உன்னையும் சேர்க்க வேண்டும் என்று சொல்லுவேன்."

அன்னபூரணியின் வார்த்தைகளைக் கேட்டுக் கொண்டே வந்த சுமதி, அந்தக் கடைசி வாக்கியம் வந்ததும் சிலிர்த்துக் கொண்டு மறுப்புச் சொன்னாள்:

"தயவுசெய்து எனக்கு ஆறுதல் சொல்லுவதற்காக இப்படிக் கூறுகிறீர்கள். அவர்கள் எங்கே, நான் எங்கே? எந்த வகையிலும் நான்..."

அன்னபூரணி இடைமறித்தாள்: "அப்படி ஒரு நிலைக்கு இன்று தகுதியில்லாவிட்டாலும், அதை இலட்சியமாகக் கொண்டு பணி புரிவதற்குத்தான் உன்னை இந்தத் தியாக வாழ்விலே ஈடுபடுத்தி வைத்திருக்கிறார், ஐயா. இது என் கருத்து மட்டுமில்லை. அந்த மாய மனிதரின் கருத்தும் இதுதான்!"

அன்னபூரணி இப்படிச் சொன்னாளோ, இல்லையோ வெடுக்கென்று எழுந்தாள் சுமதி. "எந்த மாய மனிதன்?"

புன்முறுவல் செய்துகொண்டே அன்னபூரணி சொன்னாள்: "ஐயாவைச் சொல்லவில்லை. அவரை அடிக்கடி பார்க்க வருகிறாரே அந்த மர்ம மனிதரைத்தான் சொல்லுகிறேன். அவர் தான் உன்னை மணிமேகலையோடு ஒப்பிட்டுச் சொன்னார் என்று கேள்விப்பட்டேன்."

"என்ன! அந்த மனிதர் இங்கு அடிக்கடி வருகிறாரா?" என்று அடக்க முடியாத ஆவேலோடு கேட்டாள் சுமதி.

அன்னபூரணி இந்தக் கேள்விக்கு மிகவும் நிதானமாக மறுமொழி சொன்னாள். "அந்த மாயமனிதர் அடிக்கடி இந்த ஆண்டவன் நிலையத்துக்கும் சென்னை மாநகரத்துக்குமாகப் போய் வந்து கொண்டிருக்கிறார். அவர் போவது, வருவது யாருக்கும் தெரியாது!"

"அப்படியானால் உங்களுக்கு இந்த மர்ம மனிதரைப் பற்றி எப்படித் தெரியும்? அவர் சென்னைக்குப் போகிறார் என்றால், மணியையும் பார்க்கிறாரா? அம்மா! இந்த இடத்திலேதான் என் உள்ளம் குழம்புகிறது. ஏதோ ஒரு விதமான கவலை உண்டாகிறது. தயவுசெய்து எனக்கு ஆறுதல் கொடுங்கள். என்

னிடம் எதையும் மறைக்காமல் சொல்லுங்கள். ஒரு தாயின் பாசத்தோடு உரிமையோடு கேட்கிறேன், சொல்லுங்கள்!"

சுமதி இந்த வார்த்தைகளைச் சொல்லும்பொழுது அவள் கைவிரல்கள் பதறின.

அன்னபூரணி அம்மாள் அவளை உட்காரும்படி சொன்னாள். சொல்லிவிட்டுப் புன்முறுவல் செய்து கொண்டே கூறினாள்:

"சுமதி, நீ பதறாமல் இருந்தால் உன்னை இன்றைக்கே அந்த மாய மனிதரிடம் அழைத்துக் கொண்டு வேண்டுமானாலும் செல்கிறேன். ஆனால், ஒரே ஒரு வாக்குறுதி மட்டும் எனக்குத் தரவேண்டும். அதாவது இந்த விவரங்களை எல்லாம் யாரிடமும் நீ வெளியிடுவதில்லை என்று திடமாகக் கூற வேண்டும்."

# 10 மியாவ்! மியாவ்!!

ஸ்ரீ வசுந்தரமும் சீதாமணியும் சென்னை மாநகரத்தின் நவ நாகரிகப் பாதையிலே ஒருமித்து நடந்து செல்ல ஆரம்பித்தார்கள் என்று மாணவர் உலகம் இரகசியமாகப் பேசிக் கொண்டது.

சாந்தோம் கடற்கரையில் மாலை நேரங்களில் இவர்கள் இருவரும் புல் படிந்த ஒய்யாரப் பாதையிலே ஒன்றாக நடந்து சென்றதைப் பார்த்த சில மாணவர்கள், தங்கள் வளம் நிறைந்த கற்பனைகளை எல்லாம் பயன்படுத்தி இவ்விருவரைப்பற்றிப் பேசுவதிலே செலவிட்டார்கள். கட்டுப்பாடும் கண்டிப்பும் அளவுக்கு மீறிய ஆளுகையும் சேர்ந்து சிறை வாழ்க்கை போன்ற சட்ட திட்டங்களுக்கு உட்பட்ட முறையில் வளர்கிற பெண்களுக்கு, திடீரென்று பூரணசுயேச்சை ஏற்பட்டால் அது எப்படி இருக்கும் என்பது நுட்பமான ஒரு மனத்தத்துவம். இளங்கன்று பயமறியாது என்பார்கள். தொழுவத்திலே கட்டிப் போட்டிருந்த கன்றுக்குட்டியைத் தும்பவிழ்த்து விட்டதும் அது தெருவெல்லாம் துள்ளிக்கொண்டு கலைந்து ஓடுவதைப் பார்த்திருக்கிறோம் அல்லவா? அப்படியிருந்தது சீதாமணியின் சென்னை வாழ்க்கை என்று சில ஆசிரியர்கள் பேசிக் கொண்டார்கள்.

திரைப்படக் காட்சிகள், சர்க்கஸ், விளையாட்டுக்கள், பாம்பே ஷோ என்கிற நவநாகரிக உல்லாசக் காட்சி வரிசை, போட்டிப் பந்தாட்ட விளையாட்டுக்கள்—இப்படிப் பல பொது



சிவசுந்தரமும், சிதாமணியும் சாந்தோம் கடற்கரையில் அடிக்கடி சந்தித்துப் பேசினார்கள்.

இடங்களிலும் சீதாமணியும் சிவசுந்தரமும் நடமாடி அளவுக்குச் சற்று அதிகமாகவே வம்புப் பேச்சுக்கு இடங்கொடுத்து விட்டார்கள். அதன் விபரீதத்தை இருவரும் எண்ணிப் பார்க்கவில்லை.

இப்படி இருக்கும்பொழுதுதான் அனைத்து சென்னைக் கல்லூரிப் பேச்சுப் போட்டி நடைபெறுவதற்கான ஏற்பாடுகள் மாணவர் உலகில் மும்முரமாக இருந்தன.

"ஏட்டுக் கல்வி முறை நன்மையா தீமையா?" என்பது பற்றிய விவாதம்.

சீதாமணி எழுந்து நின்று பேசிக் கொண்டிருக்கிறாள்:

"ஏட்டையும் பெண்கள்
தொடுவது தீமை என்று
எண்ணியிருந்தவர்
மாய்ந்து விட்டார்

வீட்டுக்குள் ளேபெண்ணைப்
பூட்டிவைப் போமென்ற
விந்தை மனிதர்
தலைகவிழ்ந்தார்

மாட்டை அடித்து
வசக்கித் தொழுவினில்
மாட்டும் வழக்கத்தைக்
கொண்டுவந்தே

வீட்டினில் எம்மிடம்
காட்டவந்தார் அதை
வெட்டிவிட் டோமென்று
கும்மியடி!"

என்ற பாரதியாரின் பாடலை வீராவேசத்தோடு பாடிக் கொண்டே சீதாமணி தனது பேச்சைத் தொடங்கினாள். அப்படி அவள் தொடங்கியதுமே எங்கோ பின் வரிசையில் இருந்து "மியாவ் மியாவ்" என்று ஓசை கேட்டது. மாற்றுக் குரல் வித்தையிலே நன்றாகத் தேர்ந்திருந்த ஒரு மாணவப் பெருமகனார் பின் வரிசைப் பெஞ்சிலிருந்து பூனையாகக் கூப்பிட்டார்!

சீதாமணி தனது பேச்சை மேலும் தொடர்ந்தாள். அவள் குரலில் முன்னைவிட வீரம் [illegible]

"பட்டங்கள் ஆள்வதும்,
சட்டங்கள் செய்வதும்
பாரினில் பெண்கள்
நடத்தவந்தோம்!

எட்டும் அறிவினில்
ஆணுக்கு இங்கேபெண்
இளைப்பில்லை காணென்று
கும்மியடி!"

இவ்வாறு சீதாமணி சொல்லி நிறுத்தினாளோ, இல்லையோ, பின் பெஞ்சிலிருந்து ஆரம்பித்த 'கும்மியடிப்பு' விட்டுவிட்டு "டப்" "டப்"பென்று தாளம் தட்ட ஆரம்பித்தது! சீதாமணி திகைத்தாள். ஒரு சொற்பொழிவின் நடுவிலே உணர்ச்சி மிகுந்த ஒரு கட்டத்தில் பாராட்டுக்கு அடையாளமாகக் கைதட்டுவார்களே, அப்படியில்லை, அது! பேசுகிறவனை அல்லது பேசுகிறவளை, உட்கார்த்துவதற்கு என்றே வீரம் மிகுந்த ஆடவர் உலகம் ஒரு வழி வகுத்திருக்கிறது அல்லவா, அந்த மாதிரியான கையடிப்பாக—கைதட்டல் அல்ல—இருந்தது, அது! சீதாமணி சுற்றும் முற்றும் பார்த்தாள்.

'உஸ்' என்று ஓர் இரைச்சல் கிளம்பிற்று. அதைத் தொடர்ந்து பூனைகள் "மியாவ், மியாவ்" என்றன. எலிகள் 'கீச், கீச்' என்றன. நரிகள் 'ஊளை'யிட்டன! இவற்றுக்கு மத்தியில் எங்கிருந்தோ சடை நாய்க்குட்டி 'ளொல் ளொல்' என்றது!

கருணாகரன் என்ற மாணவன் எழுந்து நின்று, "சகோதரியார் அவர்கள் தயவுசெய்து அமரலாம்" என்றான். உடனே மாணவர்கள் எல்லோரும் 'டெஸ்க்' கில் கைகளைத் தட்டி ஆரவாரித்து அதை ஆமோதித்தார்கள்.

கூட்டத்திற்குத் தலைமை வகித்தது ஒரு பெண்மணி! கல்லூரி ஆசிரியை! அவர் என்ன செய்வது என்று புரியாமல் குழம்பினார். முகம் சிவந்தது.

சீதாமணி ஒரு வினாடி தயங்கி நின்றவள் மறுகணம் கண்ணகியின் ஆவேசத்தோடு சீறினாள்.

"அன்பர்களே! இப்பொழுதுதான் நீங்கள் எனக்கு மகத்தான நற்சாட்சி தருகிறீர்கள். பேசுகின்ற என்னைப் பேசாதே என்று சொல்லி என் பேச்சை இந்த மாபெரும் கூட்டத்தினர் விட்டுவிடக்கூடாது என்று தடுக்க எண்ணுகிறீர்களே, அதுவே

பேசினுல், என்னை நீங்கள் பேசவிட்டால், என் பேச்சு முழுவதையும் கேட்டு விட்டால், நிச்சயம் அனைவரும் என் கட்சிக்கு மாறி விடுவார்கள் 'என்று உங்களில் சிலர் அஞ்சுகிறீர்கள். எனவேதான் என்னைப் பேசாதே என்று தடுக்கிறீர்கள், அந்தச் சிலர்! இதைவிட என் கட்சியின் நியாயத்திற்கு வேறு என்ற சான்று வேண்டும்?

"உலக சரித்திரத்தில் மகா புருஷர்களின் பேச்சுக்களைத் தடை செய்தது உலகம். அவர்கள் பேசினுல் தங்களின் கண் மூடிக் கொள்கைகள் எல்லாம் மண் மூடிப் போகும் என்று பயந்த சில மக்கள், அவர்களைப் 'பேசாதே' என்று தடுத்தார்கள். அந்த மகத்தான பெருமையை எனக்கு நீங்கள் தருகிறீர்கள். நான் தொடர்ந்து பேசினுல் என் கட்சி வென்றுவிடும் என்று அஞ்சுகிறீர்கள். உங்கள் அச்சத்துக்குத் தலை வணங்குகிறேன். உங்கள் பயத்தைக் கண்டு அதற்கு நன்றி செலுத்துகிறேன். இந்தக் கோழைகளை வெல்வது ஆண்மையாக இருக்கலாம்; ஆனல், அது நிச்சயம் பெண்மையின் ஆற்றலுக்கு இழுக்கு என்று கருதி அமர்கிறேன்! உங்கள் அச்சம் வாழ்க! பெண்மை வெல்க!"

இவ்வாறு சொல்லி மேடையில் இருந்து இறங்கினுள், சீதாமணி. ஒரு கட்சி ஊளையிட்டது. மற்ருெரு கட்சி கைதட்டி ஆரவாரித்தது. நாற்காலிகளும், சாய்வு இருக்கைகளும் "டம டம" என்று அதிர்ந்தன.

அப்போது வீராவேசத்தோடு மேடைமீது பாய்ந்து ஏறினுன். சிவசுந்தரம்.

"அறிவு சான்ற தலைவருக்கும், மாணவத் தோழர் தோழியருக்கும் வணக்கம்" என்று கைகூப்பினுன்.

'கப்சிப்' என்று ஓர் அமைதி ஏற்பட்டது. ஆனல், அந்த அமைதியினூடு ஒரு பூனை "மியாவ்" என்றது!

"கூட்டுக் கல்வியை ஆதரிப்பதா அல்லது, எதிர்ப்பதா என்ற கேள்வியை ஆராய்வதற்கு முன்னர், இதுபற்றி ஆராய்வதற்கே நாம் தகுதியில்லை என்பதைச் சற்று முன் நிரூபித்துவிட்டோம் என்ற உண்மையை முதற்கண் கூற ஆசைப்படுகிறேன். நமக்குள் ஒரு கொள்கைபற்றி ஏதோ சில பல வேற்றுமைகள் இருக்கலாம். ஆனல், பேச எழுந்த ஒரு பெண்ணை— ஒரு சகோதரியை— 'பேசாதே!' என்று கூக்குரல் கிளப்புவது நம் அறியாமையைக் காட்டவில்லை

நரிகள் ஊளேயிட்டன! நூறு பூனேகள் ஒன்று சேர்ந்து ஓசை எழுப்பின. காகிதத்தில் செய்த ஆகாயவிமானங்கள் 'விர் விர்' என்று மேடையை நோக்கிப் பாய்ந்தன!

கருணுகரன் எழுந்து நின்று "வெட்கம்! வெட்கம்" என்று கத்தினுன். அதைத் தொடர்ந்து "ஒழுங்கு, ஒழுங்கு" என்று கதறினுர்கள், சிலர்.

"கூட்டத்தை இப்படி அவமதித்ததற்காகச் சகோதரர் மன்னிப்புக் கேட்பாராக!" என்று ஓலமிட்டான், கருணுகரன். கூடவே நூறு குரல்கள் சேர்ந்து "மன்னிப்பு! மன்னிப்பு" என்று கூப்பாடு போட்டன!

"மன்னிப்பா! யார் யாரை மன்னிப்பது? வெட்கம் வெட்கம்!" என்றுன், சிவசுந்தரம், கருணுகரனேப் பார்த்து!

"உட்கார் கீழே" என்று கைகளே நீட்டிக்கொண்டே கதறினுன், கருணுகரன், உடனே கருணுகரனேச் சுற்றியிருந்த மாணவர்கள் அனேவரும், "உட்காரு கீழே" என்று கூச்சலிட்டார்கள்.

"முடியாது. எதற்காக உட்கார வேண்டும்? இந்தப் பனங்காட்டு நரி உங்கள் சலசலப்புக்கு அஞ்சாது" என்றுன். சிவசுந்தரம்.

உடனே பல நூறு நரிகள் ஏக காலத்தில் ஊளேயிட்டன. பல மாணவர்கள் எழுந்து, "நரி, நரி" என்றுர்கள். கருணுகரன் எழுந்து "பனங்காட்டு நரி" என்று கூச்சலிட்டான். ராமமூர்த்தி என்ற மாணவன் எழுந்து "பனங்காடு என்பது சாந்தோம் கடற்கரையில் உள்ள புல்வெளிப் பாதையா என்பதைச் சகோதரர் விளக்குவாரா? அல்லது, அவருக்கு முன் பேசிய புல்வெளிச் சகோதரியாவது விளக்குவாரா?" என்ற கேள்வியைப் போட்டுவிட்டு உட்கார்ந்தான். கருணுகரன் எழுந்து, "காதல் உலகில் பனங்காடு என்பதும் கடற்கரை என்பதும் ஒரு வகைத் திணேமயக்கம்" என்று சொல்லி டெஸ்க்கில் ஓங்கி ஒரு குத்துக் குத்தினுன். அடுத்த விநடி அந்த மண்டபம் முழுதும் "ஊ...ஆ...ஏ" என்று கூக்குரல்கள் கிளம்பின.

மாகாணக் கல்லூரித் தலேமைப் பேராசிரியர் 'டக் டக்' என்ற பூட்ஸ் ஒலியோடு உள்ளே நுழைந்தார்.

அவ்வளவுதான்!

மாணவர்கள் எல்லோரும் தத்தம் இடங்களில் வாய்மூடி ஊமையாகி, "சிஷ்யா, இதுதான் பூலோகமா?" என்று

நற்சாட்சிப் பத்திரம் வழங்க வேண்டிய முக்கியமான கையல்லவா தலைமையாசிரியரின் கை! அது வந்துதான் கூட்டத்தில் அமைதியை நிலைநாட்ட வேண்டி வந்தது!

“இந்த விவாத அரங்கை இத்துடன் கலைக்கிறேன். எல்லாரும் அமைதியாக வெளியேறலாம்” என்று அறிவித்தார், தலைமை ஆசிரியர். அப்படி அறிவித்ததும் சரசரவென்று கூட்டம் கலைந்தது, என்றாலும், வெளியே போனதும் கருணாகரன் சுற்றும் முற்றும் பார்த்துவிட்டுத் தன் சகாக்களை நோக்கிக் குறும்புக் குரலில் பாட ஆரம்பித்தான்

“மியாவ் மியாவ் சார்!
மீசை உள்ள பூனை சார்!!
நாலு காலு சார்!
நடுவிலே ஒரு வாலு சார்!”

# 11 சிவப்புக் கார்!

விவாத அரங்கில் குழப்பங்கள் ஏற்பட்டு ஒரே கந்தல் கோலமாக முடிந்ததே என்று வேறு யாரும் கவலைப்படவில்லை. சீதாமணி கூடக் கவலைப்படவில்லை. ஆனால், சிவசுந்தரம் சொல்லொணாத வேதனைக்கு உள்ளானான்.

மறுநாள் வழக்கத்தை விடச் சற்று முன்னதாகவே கல்லூரிக்கு எதிரே இருவரும்—சீதாமணியும் சிவசுந்தரமும் சந்தித்தார்கள். சிவசுந்தரத்தின் முகத்தில் ஆற்றொணாதவேதனை படர்ந்திருந்தது. சீதாமணி கேட்டாள்:

“ஏன் இவ்வளவு தூரம் கவலைப்படுகிறீர்கள்? இப்பொழுது என்ன நடந்து விட்டது?”

சிவசுந்தரம் சொன்னான்:

“சீதாமணி! எனக்காக நான் கவலைப்படவில்லை. என் காரணமாக உனக்கும் விரோதிகள் கூட்டம் இந்தக் கல்லூரி வட்டாரத்தில் ஏற்பட்டு விட்டதே என்றுதான் வருந்துகிறேன். கருணாகரன் ஒரு போக்கிரி. அவன்தான் நம்முடைய எதிர்க்கட்சியின் தலைவன். ஒரு பழம் பெரும் பூனை அவன். இந்தக் குழப்பத்திற்கெல்லாம் மூலகாரணம் அவன்தான்!”

சிவசுந்தரம் இப்படிச் சொல்லும்போது முகத்தில் ஆத்திரம் படர்ந்தது. சீதாமணி கேட்டாள்:

"கருணாகரனுக்கு ஏன் நம்மிடம் விரோதம்? நாம் எந்த வகையில் அவனுக்கு விரோதிகள்?"

"மணி, உனக்கு இன்னும் இந்த உலகத்தைப் பற்றி ஒன்றுமே தெரியாது. பிறந்ததிலிருந்து தாய்ப்பறவையின் இறக்கைக்குள்ளேயே இருந்து வளர்ந்துவிட்டாய்."

"தாய்ப் பறவையா?"

"ஆமாம்; உன் அம்மா சுமதி அம்மாவைப் பற்றி மட்டும் சொல்லவில்லை. உங்கள் ஆண்டவன். நிலையத்தையே சொல்கிறேன், இறக்கை என்று! வெளி உலகோடு சம்பந்தமே இல்லாத அந்தச் சிறு உலகுக்குள்ளே தாயின் அரவணைப்பில் வளர்ந்தவள், நீ. உனக்கு இந்த உலகத்தின் கயமைகள் தெரியாது. சில சமயங்களில் இந்த உலகின் கண் முன்பு நாம் இருவரும் அன்பாக வளைய வருவதே தவறு என்றுகூட நான் நினைக்கிறேன்."

"என்ன, என்ன? என்ன சொன்னீர்கள்?"

சிவசுந்தரம் அவளுடைய பதற்றத்தைப் புரிந்து கொண்டு பேசலானான்.

"சீதாமணி, கலங்காதே, இனி இந்த உலகில் யாராலும் எவராலும் மாற்ற முடியாதபடி ஏதோ ஒரு பெரும் பாசம் உன்னிடம் எனக்கு ஏற்பட்டுவிட்டது. அதைப் பற்றி இப்பொழுது சொல்லவில்லை, நான். இந்தப் பொல்லாத உலகின் பயங்கரமான கண்ணுக்கு முன்னால் நாம் நமது அன்பை வெளிப்படையாகக் காட்டிக் கொண்டது ஒருவேளை தவறாக முடிந்ததோ என்று ஒருகணம் நினைத்தேன், அவ்வளவுதான். ஏனென்றால், உன் நல்வாழ்விலும் நற்பெயரிலும் எல்லையற்ற ஆர்வம் உடைய ஒரு பெரியவர் நம்மிடையே வாழ்கிறார். அந்த எண்ணந்தான் நம்மை நல்வழிப் படுத்துகிறது. உன்னிடத்திலுள்ள பாசந்தான் என்னை இவ்வாறு பேசச் செய்கிறது" என்றான், சிவசுந்தரம்.

"நீங்கள் இவ்வளவு கோழை என்று நான் நினைக்கவில்லையே. வியப்பாக இருக்கிறதே!" என்று சொல்லிக் கொண்டே, சிவசுந்தரத்தின் கண்களைக் கூர்ந்து பார்த்தாள் சீதாமணி. அமைதியான நீர்ப்பரப்பில் நிழல் விடுகிற பூரண சந்திரன் போன்று அந்தக் கண்களிலே அவளுடைய முகத்தையே அவள் கண்டாள்! ஆனால், அந்த நீர்ப் பரப்பில் இப்பொழுது அலை மேல் அலையாகச் சஞ்சலம் ஆடிக் கொண்டிருந்தது. அந்த ஆட்

டத்தின் நடுவிலுங்கூட நிலவு நீந்திக் கொண்டே மிதந்தது.

சிவசுந்தரம் சொன்னான்: "மணி, 'காற்றில் ஏறி அவ்விண்ணையும் சாடுவோம் காதல் பெண்கள் கடைக்கண் பணியிலே" என்று பாடினான், பாரதி. என்வரையில் ஒன்றுமட்டும் சொல்ல ஆசைப்படுகிறேன். என்றாவது ஒருநாள் இந்தப் பொல்லாத உலகத்தின் கண்முன்னால் நீயும் நானும் அச்சமின்றிக் கை கோர்த்து நடந்து செல்வோம். அது உறுதி. ஆனால், அதற்குள் எத்தனையோ சோதனைகளை நாம் கடந்தாக வேண்டும் என்பதும் எனக்குத் தெரியும். அதற்காக நான் கலங்கவில்லை. உன் நற்பெயருக்கு மாசு ஏற்படாதவாறு உன்னை வழி நடத்த வேண்டிய பொறுப்பு எனக்கு இருக்கிறது என்பதை உணர்கிறேன். அதற்குக் 'கோழைத்தனம்' என்று பட்டங் கட்டிவிடாதே!"

சற்று நேரம் அமைதி நிலவியது. அந்த அமைதியினூடே சீதாமணி சிவசுந்தரத்தின் விழிகளையே பார்த்துக் கொண்டு நின்றாள். அவன் அவளுடைய பரிசுத்தமான முகத்தில் பாலாடை போன்று படர்ந்து நின்ற கவர்ச்சியான பேதைமை என்ற வண்ணத்தின் எழிலில் வசமாகி நின்றான்.

"என்ன பார்க்கிறீர்கள்?" என்று கேட்டாள், சீதாமணி.

"ஒன்றுமில்லை. ஆணுக்குப் பெண் சரிநிகர் சமானம் என்றெல்லாம் பேசுகிறோம். என்றாலும், ஆணுக்கு சமமாக எத்தனைதான் படித்திருந்த போதிலும், மடமை என்பதும் பேதைமை என்பதும் பெண்களுக்கே உரிய செல்வங்கள். அவை எங்களுக்கு இல்லை. அவற்றைக் குறைவாகச் சொல்லவில்லை; பெண்ணைப் பெண்ணாக்குகிற பண்புகள் அவைதானே! உண்மையில் இயற்கையன்னை முதன் முதலாக ஒரு பெண்ணுக்குப் பிறவியிலேயே அணிவித்து அனுப்புகிற சீதன அணிகலன்கள் அவை! அவற்றை இந்தக் கள்ளப் பேருலகில் இருந்து கண்ணும் கருத்துமாகக் காப்பாற்ற வேண்டியது ஆடவர்களாகிய எங்கள் பொறுப்புத்தானே?" என்றான், இளைஞன் சிவசுந்தரம்.

சீதாமணி புன்முறுவல் செய்தாள். "ஏதேதோ கவிதையாகப் பேசுகிறீர்கள். கேட்பதற்கு ரசமாக இருக்கிறது. ஆனால் அளவுக்கு மீறி அந்தக் கருணாகரனுக்குப் பயப்படுகிறீர்கள், என்று தோன்றுகிறது. அப்படி என்ன அவன்...?"

"சீதாமணி இந்தச் சென்னை வட்டாரத்தில் ராங்கிப் பேட்டை ஜமீந்தார் என்றால் எல்லோருக்குமே நடுக்கந்தான். இதுவரை அவர் நூறு கொலைகள் செய்திருப்பதாகச் சொல்

கிறார்கள்! இல்லை, நூற்றுக்கும் மேலிருக்கும் என்று சிலர் சொல்லுகிறார்கள்! இன்னும் சிலரோ அவற்றை எண்ணி முடியாது என்று கூறுகிறார்கள். அந்த ஆணைப்பட்ட ராங்கிப் பேட்டையின் இளவரசுதான் இந்தக் கருணாகரன். 'இம்' மென்றால் இருநூறும் 'அம்' என்றால் ஆயிரமும் பேசும் அவனது பணம்! நரியாக ஊளையிடும்! பூனையாகக் கூப்பிடும், ஓநாயாக ஓலமிடும்! அவ்வளவும் அந்தப் பணத்தின் குரல்கள்! அன்று தான் விவாத அரங்கிலே பார்த்தாயே!" என்றான், சிவசுந்தரம்.

"அதெல்லாம் சரி, அத்தனை குரல்களையும் அடக்கக்கூடிய 'டக், டக்' என்ற பூட்ஸ் ஒலி ஒன்றும் இருக்கத்தானே செய்கிறது? அதையும் நீங்கள் பார்த்தீர்கள் அல்லவா அன்று?"

சீதாமணி கவலையின்றிப் பேசினாள். சிவசுந்தரம் வேறு ஒன்றும் சொல்லவில்லை. ஒரே வாக்கியத்தில் அனைத்தையும் அடக்கி விட்டான்.

"மணி, 'அஞ்சுவது அஞ்சாமை பேதைமை' என்று திருக்குறள் சொல்கிறது. அந்தப் பேதைமைக்கு இடம் கொடுக்கக் கூடாது. உன் உள்ளம் பயம் அறியாதது. அந்தப் பசலை உள்ளத்தின் நலத்தைப் பாதுகாக்க வேண்டியது என் கடமை."

சிவசுந்தரம் இப்படிச் சொல்லிக் கொண்டிருக்கும்போதே, கடற்கரைச் சாலையிலே ஒரு சிவப்புக் கார்—முகடு திறக்கப் பட்ட உல்லாச வண்டி—வேகமாக வந்து சரேல் என்று நின்றது. என்ன ஆச்சரியம்! அதை ஓட்டிக் கொண்டு வந்தவன், கருணாகரன்! அவனுக்கு அருகில் உட்கார்ந்திருந்தது யார்? அவனுக்குப் பின்னால் இருந்த மூன்றுபேர் சிவசுந்தரத்திற்கும் சீதாமணிக்கும் நன்றாக இனந்தெரிந்த பின்பெஞ்ச் மாணவர்கள்—மீசை ராமமூர்த்தி, வைஸ்ராய் வைத்தி, கிருதா கேசவன்! ஆனால், முன்னால் இருந்தது யார்? சிவசுந்தரத்திற்குப் புரியவில்லை, அந்த நடுத்தர வயதுள்ள மனிதரை!

சீதாமணி மட்டும் நெருப்பை மிதித்தவள்போல் துள்ளினாள். சந்தேகமில்லை. அது அவர்தான்!

"மாமா!" என்று கூப்பிட வேண்டும் போல் தோன்றியது சீதாமணிக்கு. நெஞ்சிலிருந்து புறப்பட்ட சொல் தொண்டை வரை வந்தும் விட்டது. ஆனால், அதற்குள் 'கிர்' என்று ஓசை எழுப்பிய வண்ணம் அந்தச் சிவப்புக் கார் சிட்டாய்ப் பறந்தது!

# 12 ஐயாவின் கருணை

ஆண்டவன் நிலையத்தில் ஐயாவின் செவிகளில் புதிய புதிய செய்திகள் வந்து ஒலிபரப்பாகின.

ஒருநாள் சென்னை மிருகக்காட்சி சாலையில் சீதாமணியும் சிவசுந்தரமும் நின்று நின்று பார்த்து அனுபவித்துக்கொண்டே சென்றதாக யாரோ வந்து சொன்னார்கள். ஐயா ஏறுக்குமாறுகப் பதில் சொல்லி அனுப்பினார். "மனிதர்களைப் பார்த்த பிறகு மிருகக்காட்சி சாலையில் பார்ப்பதற்கு என்ன இருக்கிறது என்ற உண்மை, பாவம், சீதாமணிக்குத் தெரியாது. குழந்தைகளே!" என்று சொல்லிவிட்டார்.

இன்னொருநாள் சர்க்கஸ் மைதானத்தில் சீதாமணியும் சிவசுந்தரமும் அருகருகே இருந்து வித்தைகள் பார்த்துக் கொண்டிருந்தார்கள் என்று ஒரு பள்ளியாசிரியர் வந்து ஐயாவிடம் ஆவலாதி சொன்னார்.

"வாத்தியாரின் கைப் பிரம்பு செய்ய முடியாததை சர்க்கஸ் மாஸ்டரின் சவுக்கு எப்படிச் செய்கிறது என்பதைப் பார்த்திருப்பான். இதில் தவறு என்ன இருக்கிறது?" என்று சொன்னார், ஐயா.

மற்றொருநாள் அன்னபூரணி அம்மாளே வந்து ஐயாவிடம் சொன்னாள்:

"ஐயா, உங்களைப் புரிந்துகொள்வது எல்லா வகையிலும் கஷ்டமாகத்தான் இருக்கிறது. ஒரு பெண் குழந்தைக்கு இந்த வயதில் இந்தப் பருவத்தில் இத்தனை 'சுதந்திரம்' கொடுக்கலாமா? சென்னையிலிருந்து வருகிற பெரிய வீட்டுப் பெண்கள் எல்லாம் ஏதேதோ ஆவலாதி சொல்கிறார்கள். நேற்று மாலை சென்னைப் பொருட்காட்சி மைதானத்தில் இயந்திர ஊஞ்சலில் சிவசுந்தரமும் சீதாமணியும் ஆனந்தமாக விளையாடிக் கொண்டு இருந்தார்களாம்.

"இதெல்லாம் கேட்பதற்கு நன்றாகவே இல்லை, ஐயா, நானும் எத்தனையோ கஷ்டப்பட்டு சுமதியின் காதில் இந்தச் செய்திகள் எல்லாம் படாதவாறு சமாளித்துக் கொண்டுதான் வருகிறேன். ஆனாலும் எத்தனை நாளைக்கு இது முடியும்? பாவம், சுமதிக்குத் தெரிந்தால் அப்படியே நிலைகுலைந்து

போவாள். அவள் மனதுதான் உங்களுக்குத் தெரியுமே! எதற்காக மணியைத் தன்னந்தனியாக விடுதியில் வசிக்கும்படி ஏற்பாடு செய்தீர்கள் என்று கலங்கிக் கொண்டிருக்கிருள், அவள். உண்மையில் எனக்குக்கூட அது புரியவில்லை. வேறு யார் வந்து இதையெல்லாம் உங்களிடம் சொல்வார்கள்? அப்படியே சொன்னாலும் எறுக்குமாருகப் பதில் சொல்லி அனுப்பி விடுகிறீர்கள். இதெல்லாம் எனக்கு வருத்தமாக இருக்கிறது, ஐயா, நான் சொன்னல் தப்பாக எடுத்துக் கொள்ள மாட்டீர்கள் என்பதனால் இத்தனை விவரமாகச் சொல்லுகிறேன். தயவுசெய்து இதைக் கவனியுங்கள்."

அன்னபூரணி அம்மாளின் இந்த வார்த்தைகளைக் கேட்டதும் ஐயா புன்முறுவல் செய்தார். எள்ளளவும் கவலைப்பட்டவராகவே தெரியவில்லை. அவர் சொன்னார்:

"அன்னபூரணி! நீ சொன்ன செய்திகள் எல்லாம் எனக்கும் தெரியும். அதே சமயம், நீ சொல்லாத செய்திகளுங்கூட எனக்குத் தெரியும். அதனால்தான் நான் கவலைப்படாமல் இருக்கிறேன்!"

"ஐயா, நீங்களாகவே வெளியிட்டு சொல்லக் கருதினாலொழிய எந்த ஒரு விஷயமும் உங்களிடம் இருந்து தெரிந்து கொள்வது என்பது முடியாத காரியம்! அது எனக்கு நன்றாகத் தெரியும். ஆனால், ஒன்றே ஒன்று மட்டும் கேட்கிறேன். சிவசுந்தரம் என்கிற அந்தப் பையன் யார்? பெண் குழந்தைகளுக்குத்தான் பொறுப்பில்லை என்றால் இந்தப் பிரகஸ்பதிக்கு ஏன் மூளையில்லை! இத்தனை பொறுப்பற்ற விதத்தில் நடந்து கொள்கிறானே!" என்று அன்னபூரணி கேட்டாள்.

அமைதியோடு கண்களை மூடிக்கொண்ட ஐயா சொன்னார்:

"அன்னபூரணி, நீ சந்தேகப்படுவது போல் அசட்டுப் பையன் இல்லை, சிவசுந்தரம். அவன் ஒரு பெருந்தன்மையான உள்ளம் படைத்த நல்ல வாலிபன். அவனுடைய தந்தை சென்னைக்கு அருகில் உள்ள வடபழனியில் ஒரு ஆலை முதலாளி. உழைப்பினால் உயர்ந்த உத்தமர்! பாவம் அவரது நிலைதான் இன்று வருந்தவேண்டிய நிலை. சீதாமணியையும் சிவசுந்தரத்தையும் உன்னையும் என்னையும்விட உண்மையிலேயே கஷ்டத்தில் மாட்டிக் கொண்டு இருப்பவர் அவர்தான். சீதாமணியும் சிவசுந்தரமும் சேர்ந்து அவரது அமைதிக்குத்தான் பெருங் கேடு உண்டாக்கி விட்டார்கள். என்ன செய்வது? இந்தச் சிக்கலை எப்

படித் தீர்ப்பது என்றுதான் நான் யோசித்துக் கொண்டு இருக்கிறேன்.

"நீ கவலைப்படாமல் தைரியமாக இரு. சுமதிக்கு இந்த விஷயம் எல்லாம் தெரியவேண்டாம். நாளைக் காலையில் நான் சென்னை போவதாக இருக்கிறேன். அதுவும் இரகசியமாகவே இருக்கட்டும். இந்த அறிக்கையை மட்டும் உன் அறையிலே போய் இருந்து தனியாகப் படித்துப் பார்."

இவ்வாறு சொல்லி, ஐயா தமது சட்டைப் பைக்குள்ளிருந்து ஒரு சிறிய காகிதத்தை, அச்சடித்த சிறு காகிதத்தை எடுத்து அன்னபூரணியின் கையிலே கொடுத்தார்.

அதை வாங்கும் பொழுதே தலைப்பு மட்டும் கொட்டை எழுத்துக்களில் கண்ணை உறுத்தியது.

**"வடபழனி ஆலைத் தொழிளாளர் வேலை நிறுத்தம்"** என்ற வார்த்தைகள் குண்டு குண்டாக நின்றன!

அன்னபூரணி அந்தக் காகிதத்தை மடித்து எடுத்து வைத்துக் கொண்டு, ஐயாவின் அறையிலிருந்து தன் அறையை நோக்கி நடந்தாள்.

அப்போது அன்னபூரணி அம்மாளுக்கும் பெருந் திகைப்பு ஏற்படக்கூடிய விதத்தில் ஆண்டவன் நிலையத்து முகப்பு வாசலுக்குள் ஒரு சிவப்புக் கார் 'விர்' ரென்று நுழைந்தது.

வேகமாக வந்த அந்த வண்டி வாசலில் நுழைந்ததும், இடதுபக்கமாகத் திரும்பி ஒரு மருதமரத்தடியில் நின்றது.

முகடு திறக்கப்பட்ட அந்தச் சிவப்பு வண்டிக்குள் இருந்த மனிதர்களை அன்னபூரணி நன்ருக ஆராய்வதற்குள்ளாக முன் பக்கத்துக் கதவு திறக்கப்பட்டு, அதில் இருந்து மாய மனிதன் பரபரப்புடன் இறங்கினன்.

காரை ஓட்டிவந்த உல்லாச வாலிபன் கதவை மீண்டும் சாத்திக் கொண்டான். வண்டி 'உஸ்' என்று இரைந்து கொண்டே ஒரு சிறிய புகைச் சீறலோடு 'குபுக்' கென்று புறப்பட்டுச் சாடி ஓடியது.

காரிலிருந்து கிளம்பிய சிறிய புகைச் சீற்றத்திற்கு நடுவே மாயமனிதன்—சீதாமணியின் 'மாமா'—காரில் இருந்து இறங்கியவர், மரங்களினூடு மறைந்து யார் கண்ணிலும் பட விரும்பாமல் ஒதுங்கி நடந்து, ஐயாவின் அறைக்கு எதிரே வளைந்து சென்று, தாழ்வாரத்தில் ஏறினர்.

அன்னபூரணி அம்மாள் தயக்கத்தோடு பார்த்தாள். வேகமாக வந்து மறைந்த அந்தச் சிவப்புக் காரிலே உட்கார்ந்து காரை ஓட்டிக் கொண்டு வந்த வாலிபனின் முகமும், மற்றவர்களுடைய முகமும் அன்னபூரணிக்கு ஒருவிதமான அச்சத்தையே உண்டாக்கின. அப்படிப்பட்ட ஒரு காரிலிருந்து இந்த 'மாய மனிதர்' இறங்க வேண்டிய காரணம் என்ன என்று எண்ணினாள், அன்னபூரணி!

# 13 சிக்கிய கடிதம்

சிவசுந்தரமும் சீதாமணியும் சாந்தோம் கடற்கரையில் உல்லாசமாக நடந்து சென்று கொண்டே இந்த உலகின் மனிதப் பண்புகளை விமர்சனம் செய்தார்கள். சிவசுந்தரம் கவலையோடு பேசினான். சீதாமணியோ பசலையோடு பேசினாள்.

அன்று சீதாமணி தனது விடுதி அறைக்குத் திரும்பும்போது இரவு மணி எட்டு.

விடுதியறையின் கதவைத் திறந்து கொண்டு உள்ளே நுழைந்த சீதாமணி, திடுக்கிட்டாள். பூட்டப்பட்டிருந்த கதவுகளின் இடுவல் வழியாக யாரோ ஒரு கடிதத்தை உள்ளே போட முயன்றிருந்தார்கள். அந்த உறை சரியாக அறைக்குள்ளே விழாமல் கதவின் இடுவலில் சிக்கிக் கொண்டிருந்தது, சீதாமணி கதவைத் திறந்ததும் 'தொப்' என்று அந்தக் காகித உறை கீழே விழுந்தது.

அறையின் மின்சார விளக்கைப் போட்டதும் சீதாமணி அந்த உறையை எடுத்து விலாசத்தைப் பார்த்தாள். தபாலில் வந்த கடிதமில்லை, அது! யாரோ உள்ளூர் நேயர் எழுதிக் கொண்டு வந்து போட்டுச் சென்ற கடிதந்தான் அது என்று தெரிந்தது. விலாசத்தில் 'கடல் கன்னி சீதாமணிக்கு' என்று எழுதியிருந்தது!

பதறிய விரல்களால் சீதாமணி அந்த உறையைப் பிரித்துக் கடிதத்தை வெளியே எடுத்தாள். அது கருணாகரனின் கடிதம்!

சீதாமணி கடிதத்தை முதல் முறை படித்தபோது திகைத்தாள். இரண்டாம் முறை படித்தபோது சிரித்தாள். மூன்றும் முறை அவள், அந்தக் கடிதத்தைப் படிக்க நினைத்தபோது, 'வார்டன்' அந்தப் பக்கமாக நடந்து வருவது தெரிந்தது.



கருணாகரன் எழுதிய காதல் கடிதத்தைப் படித்த சிதாமணி திகைத்தாள்.

உடனே அந்த உறையை மடித்து மேஜைக்குள்ளே வைத்து விட்டு, ஒரே சிந்தனையில் ஆழ்ந்தாள், சீதாமணி.

ராங்கிப்பேட்டை ஜமீன்தாரின் மகன் கருணாகரனுக்கு இப்படி ஒரு கடிதம் எழுத எப்படித் துணிச்சல் வந்தது என்று திகைக்கவில்லை சீதாமணி. ஆனால், இத்தனை அடுக்கு மொழிகளும் காவியப் பேச்சும் அவன் எங்கிருந்து எழுதப் படித்தான் என்று வியப்படைந்தாள். படிக்கப் படிக்கச் சிரிப்பு வந்தது!

'வார்ட்டன்' அங்கிருந்து சென்ற பிறகு சீதாமணி ஆழ்ந்து யோசிக்க ஆரம்பித்தாள். இப்படிப்பட்ட ஒரு கடிதத்தை அவனால் எப்படி எழுத முடிந்தது என்று புரிந்து கொண்டாள், அவள். திரைப்படங்களில் வருகிற வசனங்களில் இருந்து அங்கங்கே பெயர்த்து எடுத்து வரிசைப்படுத்தி ஒரு கடிதத்தை அவன் தயாரித்து விட்டான் என்பது வெட்ட வெளிச்சமாகத் தெரிந்தது. பின்னர், அந்தக் கடிதத்திற்குக் காரணமாக அமைந்த உணர்ச்சியும் சூழ்நிலையும் படிப்படியாகச் சீதாமணிக்குப் புலனாக ஆரம்பித்தன.

கருணாகரன் இப்படி ஒரு கடிதம் எழுதுவதற்கு சிவசுந்தரத்திடம் அவனுக்கு இருந்த பொறாமை மட்டுந்தான் காரணமா? அவனுக்கு சிவசுந்தரத்திடம் உள்ள பொறாமை இவ்வளவு தூரம் உணர்ச்சி வசப்பட்டு இப்படி ஒரு கடிதத்தை எழுதத் தூண்டுமா என்று பலமாக யோசிக்க ஆரம்பித்தாள், சீதாமணி.

கருணாகரன் எழுதிய அந்தக் கடிதத்தைக் கிழித்துப் போட எண்ணவில்லை, சீதாமணி. அதை அப்படியே பத்திரமாகத் தன்னிடம் வைத்துக் கொண்டிருக்கவும் அவள் விரும்பவில்லை. கடிதத்துக்குக் காரணமாக இருந்த சூழ்நிலை எதுவானாலும் தனக்கு இப்படி ஒரு கடிதத்தை எழுதக்கூடிய அளவுக்குக் கருணாகரன் எண்ணினானே, தன்னைப்பற்றி அவன் என்னதான் நினைத்துக் கொண்டிருக்கிறான் என்ற சீற்றம் அவளுக்கு உண்டாயிற்று.

அந்தக் கடிதத்தை எடுத்துக் கொண்டுபோய் வார்டனிடம் கொடுத்துவிடலாமா என்று ஒரு வினாடி யோசித்தாள். பிறகு அவளே அந்த முடிவை மாற்றிக் கொண்டாள். எந்தக் கருணாகரன் அன்று விவாதமேடையில் இத்தனை ஆர்ப்பாட்டங்களும் செய்தானோ, அதே கருணாகரன் மேடைக்கு வெளியே இப்படி ஒரு திருவிளையாடல் புரிய முனைவது என்றால், அவனுக்கு சிவசுந்தரத்தைக் கொண்டே ஒரு சரியான பாடம் கற்பிக்க வேண்டியது அவசியம் என்று எண்ணினாள், சீதாமணி. அந்த எண்

ணத்தை உறுதிப்படுத்திக் கொண்டு அன்று இரவெல்லாம், தூக்கமின்றிக் கழித்தாள், அவள்.

மறுநாள் மாலை கடற்கரையிலே சீதாமணியும் சிவசுந்தரமும் வழக்கம் போல் சந்தித்தபோது வழக்கமான வேடிக்கைப் பேச்சு இல்லை. இருவர் உள்ளத்திலும் பெருங்கவலை புகுந்து கொண்டது. இந்தக் கடிதத்திற்கு விபரீத முக்கியம் கொடுக்க வேண்டும், இந்தக் கடிதத்துக்குப் பின்னால் ஒரு பெரிய கயமை இருந்தது என்று சீதாமணி முதலில் எண்ணிப் பார்க்கவில்லை. சிவசுந்தரம் அந்தக் கடிதத்தைப் பார்த்துப் பொங்கிச் சீறிய பிறகுதான் சீதாமணிக்கு அந்தக் கடிதத்தின் பொல்லாமை புரிந்தது.

அந்தக் கடிதத்தில் சிவசுந்தரத்தை மிகமிக ஆவேசம் கொள்ளும்படி செய்த வரிகள் இரண்டு. ஒன்று வர்ணனை அழைப்பு மொழிகள்! அப்போது சென்னை நகரிலே திரையிடப் பட்டுக் கொண்டிருந்த ஒரு தமிழ்ப் படத்தில் நெஞ்சை அள்ளும் இளங்கோ அடிகளின் வார்த்தைகளை அப்படியே எடுத்துக் கதா நாயகன் பேச்சிலே அள்ளி விட்டிருந்தார்கள்! கதாநாயகியைப் பார்த்துக் கதாநாயகன் மூச்சைப் பிடித்து அடக்கிக் கொண்டு சேர்ந்தாற்போல் ஒரு நீண்ட வர்ணனையைப் பொழிந்து தள்ளி விட்டுத்தான் பிறகு அடுத்தபடியாக மூச்சு வாங்குகிறான்! அந்த வசனத்தைக் கருணாகரன் அப்படியே கடிதத்தின் கடைசி வரிகளிலே கொட்டி விட்டான்.

“பொன்னே மணியே! புனை பூங்கோதாய்! வலம்புரி முத்தே, கரும்பே, தேனே! அரும்பெறல்பாவாய்! ஆருயிர் மருந்தே! மலையிடைப் பிறவாமணியே. அலையிடைப் பிறவா அமிழ்தே! யாழிடைப் பிறவா இசையே! சீதாமணியேனும்

செல்வக் கனவே! 'ஆம்' என்று ஒருரை பகராய் நீயே!"

இந்த வாக்கியங்களைப் படித்து முடிந்ததும் சிவசுந்தரத்தின் கண்களில் தீப்பொறி பறந்தது! அவன் சொன்னான்:

"சீதாமணி! இந்தக் கடிதத்தை இப்படியே தலைமை ஆசிரியரிடம் சேர்த்துவிட வேண்டியதுதான். வேறு யோசனையே வேண்டாம். எந்தப் 'பூட்ஸ்' அன்று விவாதக் கலவரத்தை நிறுத்தியதோ, அதே 'பூட்ஸ்' இந்தக்கிறுக்கு மண்டையை மிதிக்க வேண்டும். ஆனால்...ஆனால்...ராங்கிப்பேட்டை ஜமீன் தாருக்கு இந்தச் சென்னை மாநகரம் முழுதுமே அஞ்சிச் சாகிறதே, அதற்கு என்ன செய்ய?"

இவ்வாறு குழப்பத்தோடு பேசினான், சிவசுந்தரம். சீதாமணிக்கு அப்பொழுதுதான் கடிதத்தின் வேகம் புரிந்தது!

மறுநாள் காலை நிகழ்ச்சிகள் மிகத் துரிதமாக நடந்தன. சீதாமணி சென்னை மாகாணக் கல்லூரித் தலைமைப் பேராசிரியரின் அறையிலே நுழைந்தது, கடிதத்தை அவரிடம் கொடுத்தது, உடனே அவர் அவளுக்கு ஆறுதல் சொல்லி அனுப்பியது—எல்லாம் வேகமாகவும் இரகசியமாகவும் நடந்தன!

கருணாகரன் வரவழைக்கப்பட்டான். கடிதம் எழுதியது அவன்தானா என்று கேட்டார், தலைமை ஆசிரியர். "ஆமாம்" என்று சொல்லிய கருணாகரன், அதோடு நிறுத்தியிருந்தால் தலைமை ஆசிரியர் ஓரளவு பொறுமை காட்டியிருப்பார்!] ஆனால், கருணாகரன் 'கடல் கன்னியின் கரைகாணாக் காதல்'' என்ற திரைப்படத்திலிருந்து வசனங்களை ஒப்பிக்க ஆரம்பித்து விட்டான். முக்கியமாக 'உளுத்துப்போன சமூகம்' 'சம்பவங்களின் சூழ்ச்சி' "விதியின் சதி" "ஈருடல் ஓருயிர்" "இலட்சி[illegible]" "[illegible] நெஞ்சம்" என்ற

வார்த்தைகள் சரமாரியாகக் கருணாகரனிடமிருந்து புறப்பட்ட தும், "ஸ்டாப்" என்று சொல்லி 'ப்ரேக்' போட்டார், தலைமை ஆசிரியர். மறுவிநாடி ஜமீன்தாருக்குச் சொல்லியனுப்பினார்.

ராங்கிப்பேட்டை ஜமீன்தாரைப் பற்றிப் பலர் பல விதமாகச் சொன்னதென்னவோ உண்மை. அவர் சம்பந்தப்பட்ட வரை அவரே தம்மைப்பற்றித் தாம் குறைப்பட்டுக் கொள்ளு வார். ஆனால், தம்முடைய புதல்வனைப் பொறுத்தவரை மிகுந்த கண்டிப்போடு இருப்பார் என்று தலைமை ஆசிரியருங்கூட எதிர் பார்க்கவில்லை. தமது முரட்டு ஆங்கிலத்தில் வினைச் சொல் பெயர்ச்சொல் உரிச்சொல் என்ற ஏற்றத் தாழ்வுகளை எல்லாம் தட்டி நொறுக்கிக் கொண்டு, ஜமீன்தார் தலைமை ஆசிரியரிடம் பேசினார். அந்தக் கடுமையான பேச்சுக்கு ஊடாகப் பெற்ற பாசம் மென்மையாக இழைந்தது! அதைக் கண்டு தலைமை ஆசிரியரே ஆச்சரியப்பட்டார்.

"நான் ஒரு சந்நியாசி இல்லை, பிரின்சிபால் சார்! இந்த உலகத்தில் எல்லா மேடு பள்ளங்களையும் பார்த்தவன்தான் நான். ஆனால் 'சுய கவுரவம்' என்று ஒன்று இருக்கிறது" என்றார் ஜமீன்தார்.

தலைமை ஆசிரியர் அதிகமாக ஒன்றும் சொல்ல வேண்டிய அவசியம் இருக்கவில்லை. ஜமீன்தாரே மிகவும் கண்டிப்போடு மகனை நொந்து கொண்டார். எந்தத் தந்தையும் தான் செய்த தவறுகளைத் தம் மகனும் செய்வதை விரும்பமாட்டார் என்று ஊடே ஊடே ஜமீன்தார் தமது பேச்சில் குறிப்பிட்டது தலைமை ஆசிரியருக்கு வியப்பை அளித்தது. அதே சமயம் திருப்தியையும் தந்தது. ஜமீன்தார் மகனின் தவற்றை நன்றாக உணர்ந்துவிட்டார் என்று!

கருணாகரனின் எதிர்கால நன்மை [illegible]

தாமே பொறுப்பு என்று உறுதி சொன்னதோடு, மகனையும் மன்னிப்புக் கேட்கும்படி கூறி, அந்தக் காதல் அத்தியாயத்தை அமைதியாக முடித்துவிட்டு, வெளியே வந்தார்.

# 14 தொழிலாளர் தலைவன்!

கருணாகரன் சிதாமணிக்கு ஒரு கடிதம் எழுதினான் என்றும், அந்தக் கடிதம் தலைமை ஆசிரியரின் பார்வைக்கு வந்தது என்றும், அது காரணமாக ஜமீன்தாரே வரவழைக்கப்பட்டார் என்றும் கல்லூரி மாணவர்கள் பேசிக் கொண்டார்கள். அப்படி ஒன்றும் நடக்கவில்லை என்று கருணாகரனின் சகாக்கள் மறுத்தார்கள்! கருணாகரன் ஒரு மன்னிப்புக் கடிதமே எழுதித் தலைமை ஆசிரியரிடம் கொடுத்தான் என்று சிவசுந்தரத்தின் நண்பர்கள் ஓங்கியடித்துப் பேசினார்கள்! இந்தப் பேச்சுக்கள் எல்லாம் கருணாகரன் காதிலும் சிவசுந்தரத்தின் காதிலும் உடனுக்குடன் வந்து சேர்ந்தன.

இரகசியமாக நடைபெற்ற நிகழ்ச்சி மாணவர்கள் உலகில் வெகு விரைவில் பரவி ஒரு பெரும் வசையாக வளர்ந்து விட்டது! அது காரணமாகக் கருணாகரன் உள்ளத்தில் ஒரு பெருத்த அவமான உணர்ச்சி குடிகொண்டது. வெளியே காட்டிக் கொள்ளாமல் மறைக்க மறைக்க அந்த உணர்ச்சியானது, மடியில் நெருப்பைக் கட்டிக் கொண்டது போல உள்ளத்துக்குள் கனன்றது!

கருணாகரனிடமே சில நண்பர்கள் வந்து இதுபற்றிப் பேசினார்கள். சிதாமணி நல்லவள் என்றும் சிவசுந்தரம்தான் இத்தனை விபரீதத்துக்கும் காரணம் என்றும் கருணாகரனிடம் சொன்னார்

யத்தில் ஏற்பட்டிருந்த ஒரு சபலம், இப்படி எல்லாம் எண்ணும் படி தூண்டியது. சிதாமணி நல்லவள், இப்படியெல்லாம் தலைமை ஆசிரியரிடம் போய் மூட்டி விடமாட்டாள், அந்தச் சிவசுந்தரந்தான் அவளைக் கெடுத்துக் குட்டிச்சுவராக்கிவிட்டான் என்று கருணாகரன் திடமாக எண்ணினான்.

கருணாகரனுக்கு சிவசுந்தரத்தைக் கண்டால் அப்படியே அவனைத் தூக்கி வங்காள குடாக்கடலில் எறிந்து விடவேண்டும் என்றிருந்தது.

இப்படிப் பகைமை உணர்ச்சி அதிகரித்து வந்த போதிலும், அதைக் காட்டுவதற்கு இயலாதபடி தலைமை ஆசிரியரிடம் கொடுத்த நன்னடத்தை வாக்குறுதி தடையாக நின்றது!

கல்லூரி வட்டத்துக்குள் தனது பகைமையை காட்டுவதற்கு சந்தர்ப்பம் இல்லையே என்று மனத்திற்குள் புழுங்கினான், கருணாகரன். இப்படி மனம் வேதனைப்பட வேதனைப்பட வெறுப்பு உணர்ச்சியும் கோபமும் பன் மடங்காக வளர்ந்து வந்தன!,

இப்படி இருக்கும் போதுதான், கோடம்பாக்கம் வட பழநி ஆலையில் தொழிலாளர் பிணக்குப் புகைந்து கொண்டு இருந்தது. அந்தத் தொழிலாளர்களில் மிகவும் முக்கியமான சிலர் ராங்கிப் பேட்டை ஜமீன் வட்டத்தைச் சேர்ந்தவர்கள். அவர்களிலே முக்கியமான தலைவன் ரங்கசாமி. ராங்கிப் பேட்டை ஜமீன்தாரிடமே ஒரு காலத்தில் வேலை பார்த்தவன். கருணாகரனுக்கு நன்கு பழக்கமானவன்.

கருணாகரன் நினைத்தான், இந்த ரங்கசாமியை வைத்துக் கொண்டே வஞ்சம் தீர்த்துக் கொள்ளலாம் என்று!

வடபழனி ஆலையைச் சேர்ந்த ரங்கசாமி மோட்டார் ஓட்டும் பயிற்சியில் நன்கு தேர்ந்தவன். பெரிய

பிள்ளைகளுக்கு மோட்டார் ஓட்டக் கற்றுக் கொடுப்பது அவனுக்கு உற்சாகமான ஒரு பொழுது போக்கு. கருணைகரனின் சிவப்புக்காரை முதன் முதலில் சென்னை மெரீனாவில் வெள்ளோட்டம் விட்டது, ரங்கசாமிதான்! வேகமாக ஓட்டினாலும் எந்த இடத்திலும் 'பிரேக்' போட்டு நிறுத்திக் கொள்ளக் கூடிய நிதானம் அவனுக்கு உண்டு. இந்த நிதானம் காரணமாக, வேகமாக அவன் செல்லும்போது காரில் இருப்பவர்களும் அவனது வேகத்தைத் தடுப்பதில்லை. எத்தனை வேகமாகப் போனாலும் விபத்து நேரா வண்ணம் தடுத்து விடக்கூடிய நிதானம் உண்டு என்பதினால், அவனை வேகமாக ஓட்டும்படி காரில் உள்ளவர்களே தூண்டுவார்கள். அதிலும் அந்தச் சிவப்புக்காரில் ஏறிவிட்டால் உற்சாகத்திற்கு அளவே இல்லை. கருணைகரன் இந்த வேகமும் நிதானமும் நிறைந்த திறமையைத் தனக்கு சொல்லித் தரும்படி அடிக்கடி ரங்கசாமியைக் கேட்பதுண்டு. ரங்கசாமியும் பல சந்தர்ப்பங்களில் 'ஸ்டியரிங்' கைக் கருணைகரனிடம் கொடுத்து விட்டு, தான் அருகில் உட்கார்ந்து சொல்லிக் கொடுப்பான். சிவப்புக் கார் வாங்கிய பிறகு கருணைகரன் அடிக்கடி ரங்கசாமியை அந்தக் காரிலே அழைத்துச் செல்வது வழக்கமாகி விட்டது. ரங்கசாமியும் அடிக்கடி அந்தக் காரில் சென்னையிலிருந்து திருக்கழுக்குன்றம் போகும் சாலை வழியாகச் செல்வதில் விசேஷ அக்கறை செலுத்தினான்.

கருணைகரன் ரங்கசாமியை அழைத்துக்கொண்டு திருக்கழுக்குன்றம் சாலையில் செல்லும் போதெல்லாம் ரங்கசாமி சாலையின் திருப்பத்தில் சற்றுத் தொலைவிலே தெரிகிற ஆண்டவன் நிலையத்தைக் கூர்ந்து பார்த்துக் கொண்டே செல்வான். இரண்டொரு சந்தர்ப்பங்களில் அந்தச் சிவப்புக் காரை ஆண்டவன் நிலையத்துக்குள்ளேயே செலுத்தியது உண்டு. ஒருநாள் ரங்கசாமி காரில் இருந்து ஆண்டவன் நிலையத்தில் இறங்கிக்கொண்டு

கருணாகரனிடம் விடைபெற்றுச் சென்றதும் நமக்குத் தெரியும்!)

ஆண்டவன் நிலேயத்துக்கும் ரங்கசாமிக்கும் வேறு ஒரு தொடர்பு இருக்கக்கூடும் என்று கருணாகரன் எதிர்பார்க்க வில்லே. ஆனல் ஒருநாள் கருணாகரன் சிவசுந்தரத்தைப் பற்றி ரங்கசாமியிடம் பேசியபோது சீதாமணியின் பேச்சு வந்தது. உடனே தீயை மிதித்தவன்போல் ரங்கசாமி கேட்டான், "எந்தச் சீதாமணி?" என்று! கருணாகரனுக்கு இந்தக் கேள்வி வியப்பாக இருந்தது. "அப்படியானல் ரங்கசாமி, உனக்கு எத்தனை சீதாமணிகளேத் தெரியும்?" என்று கேட்டான், கருணாகரன். உடனே ரங்கசாமி சமாளித்துக் கொண்டான்.

"சீதாமணி என்றல் யார் என்று தெரிந்து கொள்வதற்காக அப்படிக் கேட்டேன்" என்றன், ரங்கசாமி.

"நீ அன்று சென்றயே ஆண்டவன் நிலேயம். அந்த நிலேயத்துக் கன்னிதான்" என்று சொன்னன், கருணாகரன்.

"அவளுக்கும் சிவசுந்தரத்துக்கும் என்ன உறவு?" என்று கேட்டான், ரங்கசாமி.

இந்தக் கேள்விக்கு விடை சொல்லும்போதுதான் கருணாகரன் ரங்கசாமியிடம் தன் உணர்ச்சிகளே எல்லாம் கொட்டினன்.

ரங்கசாமி கருணாகரனின் பேச்சை அமைதியாகக் கேட்டுக் கொண்டு இருந்தான். இரண்டோர் இடங்களில் ஏதோ பதில் சொல்ல வேண்டும் என்று வார்த்தை வந்தது. ஆனல், முயற்சி செய்து அடக்கிக் கொண்டான்.

கருணாகரன் சிவசுந்தரத்திடம் எத்தனே ஆவேசமாக இருக்கிறன் என்பது ரங்கசாமிக்கு நன்றகத் தெரிந்தது. ரங்கசாமி ஓரளவு நடப்புகளேப் புரிந்து கொண்டான்.

சிவசுந்தரம் வடபழனி ஆலே அதிபரின் ஒரே மகன். அந்த ஆலைக்கும் அதைச் சேர்ந்த சொத்துக்களுக்கும் எதிர்கால உடைமையாளன். என்றாலும், அந்த ஆலையின் நிர்வாகத்திலோ அமைப்பு முறையிலோ எந்தவிதமான அக்கறையும் இல்லாத ஒரு மனப்போக்கு, அவனுக்கு. தன்னுடைய தகப்பனாரின் ஆலையில் தொழிலாளர்களின் அதிருப்தி அதிகரித்து வருகிறது என்று கேள்விப்பட்ட பிறகுதான், சிவசுந்தரம் அந்த ஆலையைப் பற்றியே சிந்திக்கலானான். சிலர் அவனிடம் வந்து ஆலைத் தொழிலாளர்களின் முக்கிய தலைவனாக இருக்கும் ரங்கசாமியைப் பற்றிக் கூடச் சொன்னார்கள். ஆனால், அந்த ரங்கசாமி யார் என்றோ, அவனது திட்டங்கள் என்னவென்றோ சிவசுந்தரம் கவலைப்படவில்லை! அன்று ஒரு நாள் கடற்கரைச் சாலையில் சிவப்புக் கார் செல்லும்போது அதில் கருணாகரனுக்கு அருகில் புதிய ஆசாமியைப் பார்த்ததும் அந்த விநாடியிலிருந்து அவனைப் பற்றி ஆழ்ந்து சிந்திக்கலானான், சிவசுந்தரம்!,

# 15 வட பழனி ஆலை

ஆண்டவன் நிலையத்தில் சரசுவதி பூஜை திருவிழா விமரிசையாக நடைபெற்றுக் கொண்டிருந்தது. அந்த விழாவுக்கென்று சென்னையிலிருந்து புறப்பட்டு வந்திருந்தாள், சீதாமணி.

ஆண்டுதோறும் ஆண்டவன் நிலையத்தில் கோகுலாஷ்டமியைப் போல் மிகவும் சிறப்பாகக் கொண்டாடப்படும் இன்னொரு பண்டிகை, சரசுவதி பூஜை. புரட்டாசி மாதம் பிறந்து விட்டதென்றால் ஆண்டவன் நிலையத்துக் குழந்தைகளின் உற்சாகத்திற்குக் கங்கு கரை கிடையாது. நவராத்திரி ஆரம்பித்து

விட்டால் குழந்தைகளுக்கு, முக்கியமாகப் பெண் குழந்தைகளுக்கு களிப்பு கரைபுரண்டு ஓடும். பலவிதமான ஆடை அலங்காரங்களுடன் சிறுமிகள் ஆண்டவன் நிலையத்துக்குள் உலாவி வருவது கண்கொள்ளாக் காட்சியாக இருக்கும். கண்ணுக்கினிய விசித்திரக் காட்சியாகக் கொலுவைத்திருப்பார்கள். அந்தக் கொலுவிலேயுள்ள வர்ணப் பொம்மைகள் உயிர் பெற்று வந்ததைப் போல இருக்கும், ஆண்டவன் நிலையத்துக் குழந்தைகள் அணி அணியாக நிலையத்துக்குள் வளைய வருவது! நாட்டின் பல திசைகளில் இருந்தும் பல ஊர்களில் இருந்தும் பலபல வர்ணங்களிலே வந்துள்ள அந்தப் பொம்மைகளுக்கும், நிலையத்தின் சிறுவர் சிறுமியர்களுக்கும் அப்படி ஓர் ஒற்றுமை இருந்தது! இதைக் கண்டு அன்னபூரணி அம்மாளும் ஐயாவும் மிகவும் அனுபவிப்பது உண்டு. அதிலும் கண்ணன் பொம்மையும், அவனைச் சுற்றிக் கொலுவிலே அமர்ந்திருக்கும் கோபிகைகளும் ஆண்டவன் நிலையத்துக்கு என்றே தனிச் சிறப்போடு அமைந்த ஓர் ஆனந்தமான வர்ணாலங்காரக் கொலுக் காட்சி! அந்தக் காட்சியை ஆண்டுதோறும் தவறாமல் மிகுந்த விமரிசையுடன் நடத்திப் பார்ப்பதில் ஐயாவுக்கு எல்லையற்ற மகிழ்ச்சி. அந்த ஏற்பாட்டில் சீதாமணியின் பொறுப்பு மிக அதிகம்.

சீதாமணி சென்னைக்கு வந்த பிறகும் நவராத்திரிக்கு அவளை அழைத்து வருகிற பழக்கம் நிற்கவில்லை. சரசுவதி பூஜையன்று ஐயாவின் அறையிலே ஏடு அடுக்கி பூஜை செய்யும் முக்கியமான நிகழ்ச்சியிலே சீதாமணிதான் துதிப் பாடல் பாடவேண்டும். மோகன ராகத்தில் அவள் மிகுந்த பக்தியோடு கவிமணி தேசிக விநாயகம் பிள்ளையின் கலைமகள் துதியைப் பாடுவாள்.

நாடிப் புலங்கள் உழுவார்
கரமும் நயவுரைகள்
தேடிக் கொழிக்கும் கவிவாணர்
நாவும் செழுங்கருணை

ஒப்பு பெருநம் அறிவாளர்

நெஞ்சும் உவந்து நடம்

ஆடிக் களிக்கும் மயிலே

உன்பாதம் அடைக்கலமே!

என்ற பாடலைச் சீதாமணி பாடினால்தான் ஐயாவின் மனதில் களை கட்டும்!

இந்த ஆண்டும் சீதாமணி கட்டாயம் வந்துவிட வேண்டும் என்று ஐயாவிடமிருந்து இரண்டு நாட்கள் முன்னதாகவே சீதாமணிக்கு அறிவிப்பு வந்துவிட்டது! சீதாமணியும் ஆண்டவன் நிலையத்துக்குச் செல்வதற்காக ஆயத்தமானாள். ஆனால், அவளது மனதில் கொஞ்சமும் நிம்மதி இல்லை!

நவராத்திரிக்கு இரண்டுநாள் முன்பு கடற்கரையிலே சிவசுந்தரம் சொன்ன ஒரு செய்தி சீதாமணியின் உள்ளத்தை வேதனைக் கடலில் ஆழ்த்தியது. சிவசுந்தரம் சொன்னான்:

"சீதாமணி, இதுவரை எனக்குக் குடும்பக் கவலை என்னவென்றே தெரியாமல் இருந்தது. என் தகப்பனார் அப்படி என்னை இதுவரை வளர்த்தார். ஆனால், இப்பொழுது திடீரென்று எல்லாக் கவலைகளும் ஒன்று சேர்ந்து என் அறிவைத் தாக்குகின்றன. அதனால் மனம் நிலையில்லாமல் தத்தளிக்கிறது."

சீதாமணிக்கு இந்த வார்த்தைகள் குழப்பத்தை உண்டாக்கின. சிவசுந்தரம் விவரங்களைச் சொல்லலானான்.

வடபழனி ஆலையில் கடந்த சில நாட்களாகவே தொழிலாளர்களின் அதிருப்தி அதிகரித்து வந்தது. சிவசுந்தரம் சம்பந்தப்பட்டவரை என்றைக்குமே அவன் தொழிலாளர்களிடம் அன்

பும் அபிமானமும் கொண்டவன். சமுதாயத்தில் வேற்றுமை யுணர்ச்சி வளர்ந்து வருவதை அவன் நன்ருகக் கவனித்து வந்திருக்கிருன். டால்ஸ்டாய் போன்ற பேராசிரியர்களின் நூல்களைப் படித்து, அந்தப் படிப்பு காரணமாகத் தனக்கென்று சில இலட்சியங்களை வகுத்துக் கொண்டவன், அவன். என்ருலும் சமூகத்தின் ஏற்றத் தாழ்வுகளை எப்படி நீக்குவது, வித்தியாசங்களை எப்படிச் சரிக்கட்டுவது என்பதுபற்றி அவன் தீவிரமாக ஆலோசித்து எந்த முடிவுக்கும் வந்ததில்லை. ஏழைகளைப் பணக்காரர்கள் ஆக்குவது என்பதொன்று, பணக்காரர்களை ஏழைகள் ஆக்குவது என்பதொன்று—இந்த இரண்டு காரியங்களும் ஒன்றையொன்று சார்ந்து நிற்பவை. இவற்றை எப்படிச் சமன் செய்வது என்பது குறித்து அவன் இதுவரை எண்ணிப் பார்த்ததில்லை. இப்பொழுது அந்த விஷயங்களையெல்லாம் பற்றி ஆராய வேண்டிய ஓர் அவசியம் தனக்கு ஏற்பட்டு விட்டதாக அவன் நினைத்தான். ஏனென்ருல், ஒரு வாரத்துக்கு முன்பு சிவசுந்தரத்தின் தகப்பனுர் அவனைத் தனியாக அழைத்துப் போய் சில முக்கிய செய்திகளை அவனுக்குக் கூறினுர்.

"சுந்தரம்! இதுவரை உன்னை எவ்விதமான கவலையும் இல்லாமல் வளர்த்துவிட்டேன். இதுவரை அது சரி. ஆனுல், இனி நீ அப்படி இருக்க முடியாது. நமது ஆலை இன்று சென்னையிலேயே ஒரு முக்கிய தொழிற்சாலையாக விளங்குகிறது. இதில் ஏற்படுகிற எந்த நிகழ்ச்சியும் எந்த மாறுதலும் இந்த ஒரு தொழிற்சாலையோடு நின்றுவிடாது. சென்னையில் இந்தப் பிரச்சினை ஒரு முக்கிய புரட்சியாக ஓங்குவதற்கு உரிய சூழ்நிலை உருவாகி வருகிறது. ஆகையினுல் இனி இந்த ஆலையின் எதிர்காலத் தலைவன் என்ற முறையில் உன் பொறுப்பு மிகப் பெரிது. அந்தப் பொறுப்பை நீ சாமர்த்தியமாக வகிக்க வேண்டும். அதனுல் நான் சொல்வதை

நன்முக ஆலோசித்து ஆராய்ந்து பார்க்க வேண்டிய கடமை உனக்கு இருக்கிறது.

"சுந்தரம்! நீ இன்னும் சிறுவன் இல்லை. உன் அதிருஷ்டம் நீ கவலையில்லாமல் இளமையைக் கழித்துவிட்டாய். ஆனுல், என் வாழ்க்கை அப்படி இருக்கவில்லை! நான் என் சிறு வயதிலே எத்தனையோ வறுமைத் தொல்லைகளுக்கு உள்ளாகி இருந்தேன். என் தகப்பனுர் உன் தகப்பனுரைப் போல் ஓர் ஆலை முதலாளி இல்லை. உண்மையைச் சொல்லப் போனுல், என் தகப்பனுர் ஒரு முதலாளியே இல்லை. அவர் ஒரு தொழிலாளி. ஒரு பாட்டாளி!

"ஆம்; உடலை உழைத்து வேலை செய்து அன்முடக் கூலியைப் பெறும் ஓர் ஆலைத் தொழிலாளியின் மகனுகப் பிறந்தேன். என் நல்ல காலம், என் தகப்பனுர் ஒரு நாணயமான நல்ல தொழிலாளியாக இருந்தார். அத்தோடு தன் முதலாளியின் நம்பிக்கைக்கும் விசேஷ அன்புக்கும் பாத்திரமான ஒரு முக்கிய தொழிலாளியாக விளங்கினுர். இது காரணமாக அந்த முதலாளியின் காலத்திலேயே என் தகப்பனுருக்கு, நீண்ட நாட்கள் நாணயமாக உழைத்ததின் பயனுக, அந்த உழைப்புக்கு ஒரு பரிசாக ஒரு சிறிய—மிகச் சிறிய ஆலையை முதலாளியே தொடங்கிக் கொடுத்தார். அந்த ஆலைதான் இன்று இவ்வளவு பெரிதாக வளர்ந்து, எத்தனையோ தொழிலாளிகளையும் வளர்த்திருக்கிறது. ஆனுல், அதே தொழிற்சாலையில்தான் இன்று இந்த மனக்கசப்பும் தொழிலாளர் அதிருப்தியும் தோன்றியிருக்கின்றன! என்ன விந்தை!. ஒரு தொழிலாளி தொடங்கிய ஆலையில் இன்று தொழிலாளிகளே அதிருப்தி அடையக்கூடிய அளவுக்குச் சூழ்நிலை உருவாகிவிட்டது. என்வரையில் முதலாளி தொழிலாளி என்ற வேற்றுமைக்கே இடமிருக்கக்கூடாது என்றுதான் மனப்பூர்வமாக ஆசைப்படுகிறேன். என்னைக் கேட்டால் என் ஆலை

யில் வேலை செய்கிற அத்தனை தொழிலாளிகளுக்கும் இந்த ஆலையைச் சொந்தமாக்கி எழுதிக் கொடுத்துவிடத் தயாராக இருக்கிறேன். ஆனால், இந்தப் பிரிவினையும் கூட்டுறவும் நமது ஒரு தொழிற்சாலையோடு தீர்ந்து விடுகிற விஷயம் இல்லை. இது இந்த நகரத்தின் எல்லாத் தொழில் நிலையங்களையும் இணைத்துக் கொண்டுள்ள ஒரு பொது விஷயம். இன்னும் சொல்லப் போனால், இது நமது நாடு முழுவதையுமே பிணைத்து நிற்கும் ஒரு பெரும் தேசியப் பிரச்சினை! செல்வத்தைப் பகிர்ந்து கொடுக்கலாம். ஆனால், வறுமையைப் பகிர்ந்து கொடுப்பது என்பது எப்படி என்ற பெரும் சிக்கலுக்கு விடை காணுவது எளிய காரியமில்லை. வருங்காலத்தில் நமது நாட்டில் இப்படிப் பட்ட பெரிய புதிர்கள் எழும். அவற்றைச் சமாளிப்பதற்கும் சிக்கலைத் தீர்ப்பதற்கும் நமது நாட்டின் பண்புடைய தொன்மையான இயல்புகளோடு கூடிய உறவு முறைகளை ஆராய்ந்து தெளிய வேண்டும். அதற்கெல்லாம் இது சமயமில்லை. ஆனால், அதுவரை நமது வடபழனி ஆலைத் தொழிலாளிகள் பொறுத் திருப்பார்களா? கிளர்ச்சி என்பது காட்டு நெருப்பைப் போல், ஒரு மூங்கிலிலே பற்றிவிட்டால் உடனே வனம் முழுதும் பரவி விடும்! அதனால்தான் கடந்த சில வாரங்களாக இன்னது செய்வதென்று புரியாமல் குழம்பிக் கொண்டிருக்கிறேன்!"

இவ்வாறு சொன்னார் சிவசுந்தரத்தின் தந்தை.

சிவசுந்தரம் கேட்டான்:

"அப்பா, பொதுப் பிரச்சினைகள் எல்லாம் ஒருபுறம் இருக்கட்டும். அவற்றைத் தலைவர்களுக்கு விட்டு விடுவோம். நமது ஆலை சம்பந்தப்பட்டவரை முக்கியமான தொழிலாளிகளைக் கூப்பிட்டு அவர்களோடு பேசினால் என்ன? நம்மைப்போல் அவர்களும் சூழ்நிலையின் வசமானவர்கள்தானே!"

"சுந்தரம், நீ சொல்வது உண்மைதான். ஆனால், அவர்களுக்கும் நமக்கும் இடையே ஒரு பெரிய வேலியல்லவா கட்டப்பட்டு இருக்கிறது? நாம் அவர்களை சந்தித்துப் பேசக் கூடிய சூழ்நிலையே ஏற்படாதவாறு அல்லவா கிளர்ச்சி வலுத்து விட்டது!"

"அது சரி, அப்பா, என்ன இருந்தாலும் இந்தத் தொழிலாளர்களின் மத்தியில் நம் நம்பிக்கைக்கும் அன்புக்கும் உரிய சில முக்கிய தலைவர்களாவது இருக்கத்தானே செய்வார்கள்?, நீண்ட காலமாக நம் ஆலையில் வேலை செய்து வந்துள்ள பழைமையான தொழிலாளிகளோடு பேசிப் பாருங்களேன்!"

"நம் ஆலைத் தொழிலாளர் அனைவரிலும் மிகவும் பழைமையான ஒரு தொழிலாளி இருக்கிறான். அவனது சொந்த வாழ்வில் அவனைப்பற்றி ஏதேதோ சொல்வார்கள். ஆனால், ஆலை சம்பந்தப்பட்டவரை அவனைப்போல் நம்பிக்கையான ஒருவன் வேறு கிடையாது. அப்படிப்பட்ட, ஒரு நல்ல திறமைசாலியான தொழிலாளிதான், ரங்கசாமி. ஆனால் அவன்தான் இன்று நம்முடைய முதலாவது விரோதி! நம் ஆலையிலேயே கடந்த பத்து நாட்களாக மிகுந்த கலவரங்கள் உண்டாகும்படி செய்பவன், இந்த ரங்கசாமிதான் என்று கேள்வி!"

"எந்த ரங்கசாமியைச் சொல்கிறீர்கள்?"

"உனக்கு எத்தனை ரங்கசாமிகளைத் தெரியும்? நம் ஆலைக்குள்ளேயே உனக்குக் கிழக்கு மேற்கு தெரியாதே, நீ பெயர்களை விசாரிக்க ஆரம்பித்து விட்டாயே!"

"இல்லை, அப்பா, எனக்கு ரங்கசாமி என்று ஒருவனைப் பற்றித் தெரியும்! அவன் கார் ஓட்டுவதில்கூட வல்லவன் என்றும், பெரிய மனிதர் பிள்ளைகளுக்குக் கார் ஓட்டக் கற்றுக்

கொடுப்பது அவனது பொழுதுபோக்கு என்றும். எங்கள் கல் லூரியில் பேசிக் கொள்வார்கள். அந்த ரங்கசாமிதான் ஆலைத் தொழிலாளி ரங்கசாமியா என்று எனக்கு ஒரு..."

"அவனேதான். அதில் என்ன சந்தேகம்?...இப்பொழுது எல்லாம் அவனை அடிக்கடி ராங்கிப்பேட்டை ஜமீன்தாரின் சிவப் புக் காரிலே பார்க்கலாமாம்! நம் ஆலைக்குள்ளேகூட இரண் டொரு முறை அந்தக் கார் வந்ததாம். இப்பொழுதெல்லாம் யார், யாரை அதட்டிக் கேட்க முடிகிறது? பார்த்தும் பேசாமல் இருந்துவிட வேண்டியதுதான்!"

"அப்பா! ராங்கிப்பேட்டை ஜமீன்தாருக்குக் கருணாகரன் என்று ஒரு பையன்; என்னோடு கல்லூரியில் படிக்கிறான். இந்த ரங்கசாமி அவனோடு சேர்ந்து விட்டானா? அடடா!"

இப்படிச் சொல்லிக் கொண்டே கைகளை உதறினான் சிவசுந் தரம்!

"ஏன், அந்தக் கருணாகரன் அவ்வளவு நல்லவன் இல் லையா?"

"நல்லவனா! கெட்ட குணங்கள் என்று இந்த உலகில் என் னென்ன உண்டோ, அத்தனையும் அந்தக் கருணாகரனிடம் உண்டு. கல்லூரியில் நமக்கு வைரி அவன்தான்!"

சிவசுந்தரத்தின் தகப்பனார் திகைத்தார்.

"யார் உன் வைரி? ராங்கிப்பேட்டை ஜமீன்தாரின் பிள் ளையா? என்ன விந்தை! ஒரு காலத்தில் அந்தக் குடும்பத்திற்கும் நமக்கும் இருந்து வந்த தொடர்பை இன்று நினைத்தாலும் நினைவு உருக்கமாக இருக்கிறது! அதெல்லாம் கனவுதானா? அப்படிப்பட்ட ஜமீன்தார் குடும்பத்திலேயே நமக்கு ஒரு வைரி

ஏற்பட்டு, அவனோடு ஆலைத் தொழிலாளி ரங்கசாமியும் சேர்ந்துகொண்டு, இப்பொழுது நம் ஆலையிலேயே வைரிகளின் கூட்டத்தை வளர்க்க ஆரம்பித்து விட்டார்களா? நினைத்துப் பார்த்தாலே தலை சுற்றுகிறதே!"

சிவசுந்தரம் மறுமொழி பேசவில்லை. அமைதியாக இருந்தான்; பிறகு சொன்னான்:

"அப்பா, நீங்கள் அதிகமாக ஒன்றும் கவலைப்படதீர்கள். இந்த ரங்கசாமியைப்பற்றி மட்டும் எனக்கு விவரமாகச் சொல்லுங்கள். இனி நான் இதுவரை இருந்ததுபோல் இருக்கமாட்டேன். வடபழனி ஆலையின் பொறுப்புக்களை இதுவரை தன்னந் தனியாக நீங்கள் தாங்கிக்கொண்டு வந்துவிட்டீர்கள். இனி அத்தனை தொல்லை உங்களுக்குத் தரமாட்டேன். இந்த வினாடியில் இருந்து வடபழனி ஆலையின் நிர்வாகத்திலே என் பங்கு பெரும் பங்காக இருக்கும், இது உறுதி!"

தகப்பனார் கண்களை மூடிக்கொண்டு ஒரு வினாடி சிந்தனை செய்தார். பிறகு, "சிவசுந்தரம்! ரங்கசாமியின் வாழ்க்கை யாருக்கும் சரியாகத் தெரியாத ஓர் இரகசியம். எனக்கு ஓரளவு தெரியும். ஆனால், கடந்த சில ஆண்டுகளாக அவனது நடமாட்டங்களில் சில மாறுதல்களைக் காண்கிறேன். அதுதான் எனக்குப் புரியவில்லை. முக்கியமாக அவன் திருக்கழுக்குன்றத்திற்கு அருகில் உள்ள அனாதை விடுதிக்கு அடிக்கடி போய்வருகிறான். அங்கு இவன் போவதும் வருவதும் ஏனோ இரகசியமாகவே வைத்துக் கொண்டிருக்கிறான். அதன் காரணம் சரியாகப் புரிகிறதில்லை" என்றார்.

"அனாதை விடுதியா? நீங்கள் குறிப்பிடுவது ஆண்டவன் நிலையத்தையா? அந்த ஆண்டவன் நிலையத்திற்கா ரங்கசாமி

அடிக்கடி போய் வருகிறான்?” என்று சுந்தரம் பரபரப்பாகக் கேட்டான்.

“இப்பொழுதுதான் என்றில்லை; கடந்த சில ஆண்டுகளாகவே ரங்கசாமி அந்த ஆண்டவன் நிலையத்துக்குச் சென்று வந்தான் என்றும் கேள்விப்படுகிறேன். முன்பெல்லாம் இவன் போகும்போது ஏதாவது பொம்மைகள் அல்லது விளையாட்டுச் சாமான்கள் வாங்கிக்கொண்டு போவான் என்று அவனோடு வேலை செய்கிற சில தொழிலாளிகள் பேசுவதைக் கேட்டிருக்கிறேன். ஆனால், என்ன காரணமோ தெரியவில்லை. இப்பொழுதெல்லாம் நவராத்திரிக்குக்கூடப் பொம்மை வாங்கிக் கொண்டு போவதில்லை. ஆனால், ஒன்று. கடந்த சில நாட்களாக ஆண்டவன் நிலையத்தில் இருந்து இவனுக்கு யாரோ செய்திகள் அனுப்பி வருகிறார்கள் என்று தெரிகிறது! இதெல்லாம் தொழிலாளர்கள் தங்களுக்குள் ‘கசமுச’ என்று பேசிக் கொள்வதில் இருந்து நானகத் தெரிந்து கொண்ட செய்திகள். நம்மை அறியாமல் அவன் ஏதாவது இரகசியமான சூழ்ச்சிகள் செய்கிறானா என்று தெரிந்து கொள்வதற்காக சில வேவுகாரர்களை வைத்திருக்கிறேன். அவர்கள் சொல்கிற தகவல்கள், பல! இப்பொழுது அவன் அடிக்கடி சிவப்புக் காரில் எங்கோ செல்கிறான் என்று சொல்கிறார்கள். நீ கூறிய விவரங்களில் இருந்து கருணாகரனும் இந்தச் சூழ்ச்சிகளில் சம்பந்தப்பட்டு இருப்பான் என்று நினைக்கிறேன். இப்பொழுது எனக்கு முக்கியமாகத் தெரிய வேண்டிய செய்தி என்னவென்றால், ஆண்டவன் நிலையத்துக்கும் ரங்கசாமிக்கும் உள்ள தொடர்பு என்ன என்பதுதான். ஒரு காலத்தில் அந்தப் பொம்மைகளை ரங்கசாமி யாருக்காக வாங்கிக் கொண்டு போனான் என்பதும் தெரிந்து விட்டால், ஒரு பெரிய இரகசியம் அம்பலமாகிவிடும்! அதை வைத்துக்கொண்டு ரங்கசாமியை மடக்கி விடலாம். முடிந்தால் அதை விசாரித்து அறிய முடியுமா என்று பார்!” என்றார், தந்தை.

இந்தச் செய்திகளை எல்லாம் ஒன்றுகூட விடாமல் அப்படியே நடந்தது நடந்தது போல் முழுவதும் சீதாமணியிடம் சொன்னான், சிவசுந்தரம். அவளோ நவராத்திரிக்காக ஆண்டவன் நிலையத்துக்குப் புறப்பட்டுக் கொண்டு இருந்த சமயம், அது!

சீதாமணிக்கு உடம்பெல்லாம் சுட்டது. அதிலும் அந்தப் பொம்மைகளையும் விளையாட்டுச் சாமான்களையும் யாருக்காக ரங்கசாமி வாங்கிப் போனான் என்பது தெரிந்து விட்டால், ஒரு பெரிய இரகசியம் அம்பலமாகிவிடும் என்றும், அதை வைத்துக் கொண்டே ரங்கசாமியை மடக்கிவிடலாம் என்றும் சிவசுந்தரம் சொன்ன வார்த்தைகள் சீதாமணியைக் குழப்பின!

அன்று இரவெல்லாம் சீதாமணிக்கு ஏதேதோ குழப்பமான பல எண்ணங்கள். அவள் தூங்கவே இல்லை. மறுநாள் விடிந்ததும் சிவந்த கண்களும் வெளுத்த முகமாக அவள் ஆண்டவன் நிலையத்தை நோக்கிப் புறப்பட்டாள். அங்கே அவளுக்காக இன்னொரு பெரிய அதிசயம் காத்திருந்தது என்பதை அவள் எண்ணிப் பார்க்கவில்லை!

உண்மையில் அப்படி அவள் எதிர்பார்த்திருந்தால் சிவசுந்தரத்தையும் தன்னோடு வரும்படியாகச் சொல்லி அழைத்துச் சென்றிருப்பாள்! அப்படிச் சென்றிருந்தால் சம்பவங்கள் வேறு விதமாக ஓடி இருக்கும். ஆனால், அவளது வாழ்வின் எதிர்காலம் மகத்தான பல இலட்சியங்களுக்கு நிலைக்களனாக விளங்க வேண்டும் என்று இருந்தது. அதனால் அவள் தனியாகவே சென்றாள் போலும்!

சீதாமணி தனியாகவே நவராத்திரி விழாவில் கலந்து கொண்டாள். தனியாகவே கலைமகள் துதி பாடினாள்! ஆனால், அப்படி அவள் பாடிக்கொண்டிருக்கும் பொழுது ஐயாவின்

அறையில் எங்கோ ஒரு மறைவிலே சீதாமணியின் இதயத்தின் எதிரொலியைப் போல் இன்னோர் இதயம் பாடியது.

"ஆடிக் களிக்கும் மயிலே, உன்பாதம் அடைக்கலமே!" என்று தனக்குள்ளேயே பாடிக் கொண்டது, அந்த இதயம்!

## 16 மோகம் என்பது இதுதானோ?

நவராத்திரி விழாவுக்கு ஆண்டவன் நிலையத்துக்கு சென்ற சீதாமணி, தன்னோடு சிவசுந்தரத்தை அழைத்துப் போகாமல் தனியாகவே சென்றாள் அல்லவா? இதனால் நேர்ந்த விளைவுகளை சீதாமணி நீண்ட நாட்களுக்குப் பிறகுதான் அறிந்து வருந்தினாள். அவளோடு சிவசுந்தரமும் சென்றிருந்தால் நிகழ்ச்சிகள் வேறுவிதமாக நடந்திருக்கும். ஆனால், அவள் அதைக் கண்டாளா?

உண்மையில், ரங்கசாமிக்கும் அது வியப்பாகத்தான் இருந்தது. அவன் எதிர்பார்த்தான், நவராத்திரி விழாவுக்கு சீதாமணியோடு சிவசுந்தரமும் வருவான் என்று! அவ்வாறு எதிர்பார்த்துத்தான் அவனும் நவராத்திரி விழாவுக்கு ஆண்டவன் நிலையத்திற்குச் சென்றிருந்தான்

ஆம்! ரங்கசாமி நவராத்திரி விழாவுக்கு ஆண்டவன் நிலையத்துக்கு யாருக்கும் தெரியாமல் இரகசியமாகச் சென்றான். எப்படியும் ஐயாவின் எதிரிலேயே சீதாமணியையும் சிவசுந்தரத்தையும் கண்டு பேசிச் சிக்கல்களைத் தீர்த்து விடவேண்டும் என்று ஆசைப்பட்டான். ஐயாவுக்குங்கூட ஓரளவு இந்த எண்ணம் புரிந்தது. ஆனால், சிவசுந்தரம் ஆண்டவன் நிலையத்துக்கு வராது

போனது நிகழ்ச்சிகளை வேறு விதமாக இயக்கியது. எனவே தான் ரங்கசாமி ஐயாவின் அறையில் மறைவிலே இருந்துவிட்டு மறைவாகவே சென்றுவிட்டான். "உன் பாதம் அடைக்கலம்" என்று சீதாமணி கலைமகள் வணக்கம் பாடியபோது, அவனுடைய இதயமும் சேர்ந்து சீதாமணியைத் தெய்வத்தின் அடைக் கலமாக ஒப்படைத்து எதிரொலி செய்தது.

சீதாமணி நவராத்திரி விழா முடிந்ததும் சென்னைக்குப் புறப்பட்டு வந்து விட்டாள். அவள் மனம் ஆண்டவன் நிலையத் தில் பாவிக் கொண்டு நிற்கவில்லை. இது அவளுக்கே தெரிந்தது. முன்பெல்லாம் ஆண்டவன் நிலையத்துக்குள் வந்து விட்டால், இந்த அகில உலகமும் மறந்துவிடும். ஐயாவும் அன்னபூரணி அம்மாளும் சுமதி அன்னையும் வாழ்கிற உலகமே சீதாமணிக்கு இன்பபுரியாக விளங்குவது உண்டு. ஆனால், இப்பொழுதோ அந்த மூவரோடு நான்காவது இதயம் ஒன்று வேண்டியதிருந் தது. சொல்லப் போனால், அந்த நான்காவது இதயம் எந்த உலகில் ஒலிக்கவில்லையோ அந்த உலகம் அவளுக்கு ஒரே சூனியமாகப் பட்டது! யார் பேசுவதும் அவள் காதில் கேட்ப தில்லை. எந்த அன்பு மொழிகளும் அவளுடைய செவிக்கு இனிக்க வில்லை. ஐயாவின் பரிவு மொழிகள், அன்னபூரணி அம்மாளின் அன்புரைகள். சுமதி அன்னையின் பாச நேசங்கள் அனைத்தும் முன் போலத்தான் இருந்தன. ஆனாலும் அவற்றிலுள்ள இனிப்பு, தித் திப்பு, உகப்பு இப்பொழுது எங்கே? காய்ச்சல்காரனுக்கு நாவில் சுவை தட்டுவதில்லை அல்லவா? எத்தனை இனிப்பும் அவன் வாய்க்கு கசக்கத்தானே செய்யும்? அது உணவின் குற் றமா? நாக்கின் குற்றம்; காய்ச்சலின் குற்றம். அதுபோல் சீதா மணி நினைத்தாள், தன் உள்ளத்தில் ஒரு வகையான ஜுரம், ஒரு புது மாதிரியான காய்ச்சல் கண்டிருக்கிறது என்று!

காய்ச்சலா?

சீதாமணி நினைத்துப் பார்த்தாள்: 'ஜுரம் என்றால் உடம்பை என்ன பாடுபடுத்தும்! உணவு செல்லாது, உறக்கம் கொள்ளாது, மணம் விரும்பாது, மலர் பிடிக்காது, குணம் உறுதியிராது, எதிலும் குழப்பம் வந்துவிடும் என்றெல்லாம் காதலைப் பற்றிக் கவிஞர்கள் பாடி இருப்பது ஜுர நோய்க்கும் பொருந்தத்தான் செய்யும்! ஆனால் நேசம் என்பது வெறுங் காய்ச்சல்தானா? நோய்தானா? எண்ணும் பொழுதெல்லாம் இன்பம் தருகிற நோய். நினைக்கும்பொழுதெல்லாம் நெஞ்சம் நெகிழ்கிற நோய். உரை உரை உள்ளம் பரவசமடைகிறதே! இதைக் காய்ச்சல் என்றா சொல்வது? ஜுரத்தோடு ஜுரமாகவா இதை வைத்துப் பேசுவது?'

இப்படியெல்லாம் ஆராய்ச்சி செய்ய ஆரம்பித்து, சிவசுந்தரத்தைப் பற்றிய ஆராய்ச்சியாக இருப்பதால் அதிலேயே ஓர் இன்பத்தை அனுபவித்து, அந்த ஆராய்ச்சி இன்பத்தில் திளைத்துக் கொண்டே சென்னை திரும்பினாள், சீதாமணி.

ஐயாவுக்கு அவள் உள்ளம் புரிந்தது. உண்மையோ ஓரளவு தெரிந்ததுதான். அன்னபூரணி அம்மாளுக்கோ ஒன்றும் புரியவில்லை. தான் சீதாமணியைப்பற்றிக் கேள்விப்பட்ட செய்திகள் உண்மையாக இருப்பதால்தான் சீதாமணிக்கு ஆண்டவன் நிலையத்தில் இருப்புக் கொள்ளவில்லை என்று அவள் ஐயப்பட்டாள். ஆனாலும், சரியாக விவரங்கள் புரியவில்லை! சுமதி அன்னைக்கோ இது ஒன்றுமே விபரீதமாகத் தோன்றவில்லை. பரிட்சை நெருங்கி வருவதால் சீதாமணி அவ்வளவு அவசரமாகத் திரும்பிவிட்டாள் என்றே நினைத்தாள். ஆனால் ஒன்று: அடிக்கொருதரம் சீதாமணி தன் பேச்சில் சிவசுந்தரம் என்ற நல்லதொரு நண்பனைப் பற்றியும் அவனது பெருந்தன்மை—நல்லொழுக்கம் முதலியவை பற்றியும் குறிப்பிட்டுப் பேசியதை சுமதி உன்னிப்பாகக் கவனித்தாள். ஆனால் அதில் தவறு ஏதும் அவள் காணவில்லை.

சீதாமணி தனது நடவடிக்கைகளில் மாறுதல் இருப்பதாக ஆண்டவன் நிலையத்தில் யாரும் கண்டுவிடக்கூடாது என்பதற்காக மிகமிகக் கருத்தோடுதான் நடந்து கொண்டாள். என்றாலும், நெருங்கிய உள்ளங்களில் இருந்து உண்மையை மறைப்பது எளிய காரியமா? தன்னையும் மீறி சீதாமணி தனது மாறுதலை ஆண்டவன் நிலையத்தின் தந்தையிடமும் அன்னையர்களிடமும் வெளிப்படுத்தி விட்டதை ஓரளவு தனக்குள்ளேயே உணர்ந்து கொண்டாள். என்றாலும், அதற்காக அவள் அதிகமாக வருந்தவில்லை. சென்னை வாழ்க்கை அவளுக்கு வழங்கியிருந்த புதிய மனத்திடம் அவளுக்கு ஒரு வகையான ஊக்கத்தைக் கொடுத்தது. 'என்றைக்காவது ஒரு நாள் உண்மை இவர்களுக்குத் தெரிந்துதானே ஆகவேண்டும்' என்று மனத்தைத் திடப்படுத்திக் கொண்டாள்.

# 17 சுழலும் படிகள்!

வடபழனி ஆலைத் தொழிலாளர் இயக்கம் நாளுக்கு நாள் வலுவடைந்து வந்தது. சங்கத்தின் கூட்டங்கள், தொழிலாளர் செயற்குழுத் தீர்மானங்கள், சுற்றறிக்கைகள், வேலை நிறுத்த முன்னறிவிப்புக்கள், கோரிக்கைப் பட்டியல்கள் முதலிய பூர்வாங்க ஏற்பாடுகள் அனைத்தும் முறைப்படி நடந்தன. சிவசுந்தரம் இவை அனைத்தையும் கண்டு மனங் கலங்கினான்.

ஒரு நாள் சிவசுந்தரமும் அவன் தந்தையும் அவர்கள் வீட்டு மாடியில் இருந்து ஆலையின் நிலைமையைத் தீவிரமாக ஆலோசித்துக் கொண்டிருந்தபொழுது வெளியே அறைகூவல் கேட்டது. தொழிலாளர் பலர் ஒன்று சேர்ந்து அணிவகுத்து

ஊர்வலமாக வந்து கொண்டு இருந்தார்கள். அவர்களின் கோரிக்கைகள் பலவும் துண்டுத் துணிகளிலே எழுதப்பட்டுக் கோல் தாங்கி நின்று அறைகூவின. தந்தையும் மகனும் மாடியிலிருந்து அந்த ஊர்வலத்தை நோக்கினுர்கள். இவர்கள் தலை தெரிந்ததும் தொழிலாளர்களின் அறைகூவல் அதிகரித்தது.

"நாம் உள்ளே போய்விடுவோம். இங்கு நின்ருல் ஓசை இன்னும் அதிகமாகும்; சச்சரவுக்கு இடம் ஏற்படும்!" என்று மகனிடம் சொன்னுர், சிவசுந்தரத்தின் தந்தை.

இதன் பிறகு சிவசுந்தரம் பல முறைகள் தந்தையிடம் தொழிலாளர்களின் குறைகளைப் பற்றியும் அவற்றைக் களை வதற்கு வேண்டிய வழிவகைகளைப் பற்றியும் பேச முனைந்தான். அப்பொழுதெல்லாம் அவன் தந்தை, "இன்னும் சில மாதம் பொறுத்திரு! உன் பரிட்சை முடியட்டும்!" என்று சொல்லு வார். அப்படியும் சிவசுந்தரம் விடமாட்டான். "நமது ஆலை விஷயத்தில் எனக்கு அக்கறை இல்லையென்று நீங்கள் எவ் வளவோ குறைப்பட்டு இருக்கிறீர்களே! நான் ஒன்றையும் கவனிப்பதில்லை என்று குறை சொன்னது போக இப்போது 'இந்தக் கவலை வேண்டாம்' என்று சொல்ல ஆரம்பித்து விட் டீர்களே" என்று கேட்பான்.

"உனக்கு அக்கறை ஏற்பட்டு விட்டது குறித்து எனக்குத் திருப்திதான். இப்பொழுது உன் கவனமெல்லாம் பரிட்சையில் தான் இருக்க வேண்டும். படிப்பைக் கெடுத்து விடாதே."

இவ்வாறு சொல்லி, சிவசுந்தரத்தின் தந்தை மகனின் கவலையைக் குறைக்க முற்படுவார்.

சிவசுந்தரம் ஆரம்பத்தில் தந்தையின் இந்தப் போக்கைக் கண்டு திகைப்படைந்தான். ஆனுல், நாளாக நாளாக அவனுக்

ரத் தந்தையின் நோக்கம் புரிந்தது. தொழிலாளர் உலகத்தில் பொதுவான பிரச்சினைகள் பல இருந்தாலும் இந்த வடபழனி ஆலை சம்பந்தப்பட்டவரை இந்த இயக்கங்களுக்கெல்லாம் வேறு பல காரணங்களும் இருந்தன என்பதைப்பற்றி சிவசுந் தரத்தின் தந்தை மிகவும் கவலைப்பட்டார். இந்த இயக்கங்களின் பின்னணியில் ரங்கசாமியும், அவனைத் தூண்டி விட்டுப் பல சூழ்ச்சிகளுக்குத் தீவிரமான திட்டங்கள் போட்டு வரும் கருணா கரனும் தந்தையின் மனதை மிகவும் குழப்பி வந்தார்கள். தன் னுடைய தொழிலாளர்களின் தொல்லைகளை நல்ல முறையில் தீர்த்து வைக்க வேண்டும் என்று தாம் விரும்புவதை விடத் தம் முடைய மகன்எவ்வளவு மனப்பூர்வமாக விரும்புகிறான் என்பது அவருக்கு நன்றாகத் தெரியும். இந்நிலையில் அவனுடைய கல்லூரி ரதிரி புகுந்து சூழ்நிலையை அதிகச் சிக்கலாக்கி வருகிறானே ான்று அவர் மனம் வருந்தினார். தம்முடைய அருமை மகனுக் நக் கருணாகரன் மூலமாக ஏதாவது கேடு நேர்ந்துவிடக் டாதே என்று அவருடைய இதயம் அஞ்சியது. எனவேதான் டபழனி ஆலை விஷயத்தில் சிவசுந்தரம் அளவுக்கு மீறிக் கவலைப்படுவதை அவர் தடுக்க எண்ணினார். ஆனால், நடந்தது என்னவோ வேறுவிதமாக இருந்தது.

சிவசுந்தரம் கல்லூரிக்குச் சென்று நிம்மதியாகக் கல்வி யிலே மனதைச் செலுத்த முடியாதபடி அவனுக்கு இடையூறு கள் தோன்ற ஆரம்பித்தன. அடிக்கடி பயமுறுத்தல் கடிதங்கள் வந்தன. அவனையும் சீதாமணியையும் தொடர்பு படுத்திப் பல வாசகங்கள் எழுதப்பட்டு இருக்கும். அந்த வாசகங்களுக்கு இடையில், சில அர்த்தமற்ற எச்சரிக்கைகள் பயங்கரமாக நிற் கும். சிவசுந்தரத்திற்கு இதெல்லாம் கருணாகரனின் வேலை என்று நன்றாகத் தெரிந்தது. ஆனாலும், அவன் எதுவும் செய்ய முடியா மல் இருந்தான்.

மாலை நேரங்களில் கடற்கரையில் சிதாமணியைக் காணும் போதெல்லாம் சிவசுந்தரம் தனக்கு வந்த பயமுறுத்தல் கடிதங்களைப் பற்றியே பேசினன். இனிய பேச்சுக்கள் நிகழ்ந்த அதே கடற்கரை இப்பொழுது கவலைக்கும் அச்சத்திற்கும் போராட்டத்திற்குமான நிலைக்களனுக மாறியது. அந்த இருவரின் உள்ளத்திலும் இனிய பேச்சுக்களைவிட இந்த விதமான பரஸ்பர அனுதாபமும் கவலையும் உறவை இன்னும் அதிகமாக வளர்த்தன. அன்பு என்ற தத்துவம் அன்பைக் கொண்டு மட்டுமா வளர்கிறது? பிறரின் வெறுப்பைக் கொண்டும் வளர்கிறது என்ற ஒரு மனதத்துவ உண்மையை சிதாமணியும் சிவசுந்தரமும் நன்குக உணர்ந்தார்கள்.

இப்படி இருக்கும்பொழுதுதான், ஒரு நாள் கல்லூரி மாணவர் விருந்தொன்று நடந்தது. அந்த விருந்தின் போது கருணுகரன் பலர் காதிலும் விழும்படியாக சிவசுந்தரத்தைப்பற்றி அவதூருன வார்த்தைகள் சொன்னுன். சிவசுந்தரத்திற்கு உள்ளத்தில் சினம் பொங்கி எழுந்தது. விருந்தின் மத்தியில் மேஜைகளுக்கு ஊடே நடந்து சென்று கருணுகரனை ஓங்கி அடித்துவிடலாம் என்றுகூடத் தோன்றியது. ஆனுல், கல்லூரியின் இனிய விருந்துக்கு மத்தியில் ஒரு ரசாபாசமான நிகழ்ச்சிக்குத் தன்னுல் இடம் ஏற்பட்டுவிடக்கூடாது என்று கருதிப் பொறுமையாக இருந்துவிட்டான். அன்றிரவு எல்லாம் அவனுக்கு உறக்கம் இல்லை. மனம் குழம்பிக் கொண்டே இருந்தது. மறுநாள் காலை முதலாவது காரியமாக சற்றும் தயக்கமின்றி ராங்கிப்பேட்டை ஜமீன்தாரின் வீட்டுக்கே சென்று விட்டான்!

சிவசுந்தரம் தன்னைப் பார்க்க வந்தது கருணுகரனுக்கு வியப்பை அளித்தது. அவனைக் கண்டதும் சாதாரண மரியாதை வார்த்தைகள் கூடச் சொல்லி வரவேற்கவில்லை அவன்! தனது வீட்டுக்கு வந்திருக்கிருன் என்பதைக்கூடக் கவனியாமல் இங்கி

'த்க் குறைவாக நடந்து கொண்டான். சிவசுந்தரம் அதொன்றை யும் பொருட்படுத்தவில்லே. தான் சொல்ல வந்த விஷயத்தை நேரடியாக, அழுத்தமாகவே கூறினன்.

"கருணகரன்! சீதாமணிக்கும் எனக்கும் உள்ள நட்பு எங் கள் சொந்த விஷயம். அதில் நீ தலேயிடுவது முறையில்லே."

"நீயும் சீதாமணியும் நடந்து கொள்கிற விதம் முறை யானது என்ருல், நான் அதில் தலேயிடுவதும் முறையானது தான்."

இப்படிச் சொல்லிவிட்டு, கருணகரன் ஒரு கயமைச் சிரிப் புச் சிரித்தான்.

"எங்கள் நட்பின் முறையைப்பற்றிப் பேசுவதற்கு உனக்கு என்ன உரிமை? அதைச் சொல்ல வேண்டியவர்கள் எங்களுடைய பெற்ருேர்கள்."

"பெற்ருேர்களா! உன் அருமைக் காதலிக்குப் பெற்ருேர் களும் இருக்கிருர்களா? அது அவளுக்கே தெரியாத விஷயம் ஆயிற்றே! நீ எப்படிக் கண்டுபிடித்து விட்டாய்? பேஷ் பேஷ்...பலே!"

இவ்வாறு சொல்லிக் கைகளேத் தட்டினன், கருணகரன். சிவசுந்தரத்துக்குக் கோபம் வந்தது.

"கருணகரன்! சீதாமணியைப் பற்றி இதற்கு மேல் ஏதா வது பேசினுயோ, நான் என்ன செய்வேன் என்று எனக்கே தெரி யாது. எந்தவித பழிபாவத்துக்கும் அஞ்சமாட்டேன். நிதா னத்தைப் பலவீனம் என்றும் மரியாதையை அறியாமை என்றும் நினைக்கிற இந்த உலகத்தில் உன்னிடமெல்லாம் நடந்து கொள்ள வேண்டிய விதம் இதுவல்ல. ஆனுலும்..."

இப்படி அவன் வார்த்தைகளைச் சொல்லிக் கொண்டிருக்கும் பொழுதே, கருணாகரன் கண்களில் தீப்பொறி பறந்தது. சிவசுந்தரத்தை அப்படியே மேலே பாய்ந்து வெளியே தள்ளி விடலாமா என்று ஆவேசம் வந்தது. அந்தத் தருணத்தில் அறைக் கதவை யாரோ "டொக்" "டொக்" என்று விரல்களால் தட்டினார்கள். உடனே கருணாகரன் சுருக்கமாகப் பேச்சை முடித்தான்.

"சிவசுந்தரம்! நமக்குள் அதிகமாகப் பேச்சுவார்த்தை வேண்டாம். வார்த்தைகளினால் பேசுகிற பழக்கம் எப்பொழுதுமே எனக்குக் குறைவு. என் பேச்செல்லாம் காரியத்திலே தான். தயவுசெய்து வந்த வழியைப் பார்த்து நீங்கள் போகலாம், திருவாளர் கடற்கரைக் காதலர் அவர்களே!"

சிவசுந்தரத்திற்கு இந்த கேலி வார்த்தைகள் அளவு கடந்த ஆத்திரத்தை உண்டாக்கின. ஆனாலும் தயங்கினான். தனது இயல்புக்கும் கருணாகரனின் தன்மைக்கும் உள்ள வித்தியாசம் அப்பொழுதுதான் அவனுக்கு மிக நன்றாகப் புரிந்தது. ஆத்திரமும் வருத்தமும் கலந்த முகத்தோடு மறுபக்கம் திரும்பிக் கதவைத் திறந்து வெளியே வந்தான். என்ன ஆச்சரியம்! ரங்கசாமி கருணாகரனின் அறைக்குள்ளே பூனை போல் பதுங்கி நுழைந்தான். சிவசுந்தரம் அவனைக் கூர்ந்து பார்த்துங்கூட, ரங்கசாமி மறு பக்கமாக முகத்தைத் திருப்பிக் கொண்டு வேகமாகப் போய்விட்டான்.

கருணாகரனின் அறையிலிருந்து கீழே வருவதற்கு ஒரு சுருள்படி வைத்திருந்தார்கள். உயரமான அந்தச் சுழலிலே சுற்றிச் சுற்றி இறங்கிய போது சிவசுந்தரத்தின் தலை "கிர்"ரென்று சுழன்று கொண்டிருந்தது. அந்தச் சுழற்சியில் ரங்கசாமியின் முகமும் கருணாகரனின் முகமும் மாறி மாறி வந்தன. அப்படியே தலை கிறங்கிக் கீழே விழுந்துவிடாதபடி சுழற்படியின் நடுத்

தூண் போல் சீதாமணியின் முகம் அவன் கண்முன் தோன்றிச் சுழற்சியிலிருந்து அவன் உள்ளத்தை நிலை பெறச் செய்தது. எதிர்காலத்தை அவன் கண் முன்னே காட்டிக் கடமையை நினை வூட்டியது, அந்த அன்பு முகம்!

சிவசுந்தரத்திற்கும் கருணாகரனுக்கும் பகைமை முற்றி வருகிறது என்று கல்லூரி மாணவர்கள் மட்டுமல்ல; ஆசிரியர் கள் கூடப் பேசிக் கொண்டார்கள்.

கருணாகரனின் திட்டங்கள் வெளிப்படையாக நடந்து வரு மானால், பிறருக்கு அந்தப் பகைமையின் வன்மை புரியும். ஆனால், கருணாகரன் இரகசியக் குழுக்கள் அமைத்து ஏதேதோ சூழ்ச்சி வேலைகள் செய்கிறான் என்று எல்லாரும் பேசிக் கொண்டார்கள். அந்தச் சூழ்ச்சிகள் எத்தன்மையென யாருக்கும் தெரியாது.

'திடீர் திடீர்' என்று வடபழனி ஆலையில் இயந்திரங்கள் நின்று விடும். ஆக்கவேலை மிக மிகக் குறைந்து, சில நாட்களில் தொழிலாளர்களின் படிப்பணம் விநியோகம் செய்வதற்குக் கூட வெளியே கடன் வாங்க வேண்டிய நிலைமை ஏற்பட்டுவிடும்! ஆலையின் துணிமணிகளை மொத்தமாக வாங்கும் வியாபாரிகள் இடையே ஆலை முதலாளி முன்னதாகவே கடன் வாங்கி ஆலையை நடத்தக்கூடிய நிலை ஏற்படுமானால், அந்த ஆலையின் செல்வாக்கு எவ்வளவு தூரம் பாதிக்கப்படும் என்பதைச் சொல் லவும் வேண்டுமா?

சிவசுந்தரத்தின் தந்தை கனகசபாபதி, எத்தனை கஷ்டம் வந்த போதிலும் தமது ஆலையின் நல்ல பெயர் கெட்டுவிடக் கூடாது என்ற ஒரே நோக்கத்தோடு காதும் காதும் வைத்தாற் போல் கடன் வாங்கி நிலைமையைச் சமாளிக்க முயன்றார்.

ஆனல், அதிக நாள் அந்த முயற்சி பலிக்கவில்லே. கொள்முதல் செய்யும் வியாபாரிகள் முனக ஆரம்பித்தார்கள். கனகசபாபதி எவ்வளவோ தயவாக அவர்களேக் கேட்டுக் கொண்டு, வெளித் தோற்றத்திற்கு தமது கஷ்டங்களேக் காட்டிக் கொள்ளாமல் மனத்துக்குள்ளே துயரத்தில் வாடி வதங்கி வந்தார். அவரது ஆரோக்கியம் குன்ற ஆரம்பித்தது.

'திடீர் திடீர்' என்று சிவசுந்தரத்திற்கும் சில மொட்டைக் கடிதங்கள் வரும். அவற்றில் அந்த ஆலேயின் எதிர்காலத்தைப் பற்றி ஏதோ அச்சுறுத்தும் செய்திகள் அடங்கியிருக்கும். தந்தையின் மனக் கவலேயையும் உடல் நிலேயையும் கண்டு மிகவும் வேதனேப்படுகிற சிவசுந்தரம், அந்த மொட்டைக் கடிதங்களேத் தந்தையிடம் காட்டாமல் கிழித்துப் போட்டுவிடுவான். சீதாமணியிடம் மட்டும் இவற்றைப் பற்றி அவன் பேசுவது உண்டு. இந்தத் துயரங்களுக்கெல்லாம் காரணம் ரங்கசாமி என்ற தொழிலாளர் தலேவன்தான் என்று அவன் மனம் வெதும்பிச் செல்லும் போதெல்லாம் சீதாமணிக்கு இதயத்தில் சம்மட்டி கொண்டு அடித்தாற்போலிருக்கும். ஆனலும், அவளுக்கு வேறு என்ன சொல்ல முடியும்? அவளுக்குமே ரங்கசாமியைப் பற்றி வேறு என்ன செய்திகள் தெரியும்? தனது வாழ்க்கையில் அளவு கடந்த அக்கறை கொண்டுள்ள ஒரு "மாமன்" என்ற அந்த விசித்திர மனிதரைப் பற்றி சீதாமணி வேறு என்ன அறிவாள்?

சிவசுநதரம் கவலேப்படும் பொழுதெல்லாம் சீதாமணி தனக்குத் தோன்றிய ஆறுதல் மொழிகளேக் கிளிப்பிள்ளேயைப் போல் கூறுவாள். புத்தகங்களில் படித்த வார்த்தைகள் அவை; சிவசுந்தரத்தின் துயரத்தை ஆற்றுவதற்காக என்றே மிகவும் சிரமப்பட்டுக் கற்றுக்கொண்ட தேறுதல் மொழிகள், அவை.

உண்மையில் அவளுக்குமே உள்ளத்தின் அந்தரங்கத்துக்குள் அளவிட முடியாத துக்கம். சொல்லப் போனால், அவளது துக்கம் இரட்டிப்பாக இருந்தது. தனது வாழ்வின் எதிர்காலத்துக்கு நன்மை செய்யப் போவதாகக் கூறும் ஒரு விசித்திர மனிதனால் தனக்கு நாயகனாக வரப்போகிறவன் வாழ்வில் இன்னல்கள் நேர்கின்றனவே என்று எண்ணும்போது, அவளால் அத்துன்பத்தைத் தாங்க முடியவில்லை. இதை வெளியிட்டுச் சொல்லவும் முடியாமல் மனதினுள் அடக்கித் தாங்கவும் முடியாமல் இடர்ப்பட்டாள்.

இப்படி இருக்கும்பொழுது, ஒருநாள், சிவசுந்தரத்தின் தந்தைக்குத் தொழிலாளர்கள் அனைவரும் சேர்ந்து கையொப்பமிட்டு அனுப்பிய ஒரு கடிதம் வந்தது. அந்தக் கடிதத்தில் தொழிலாளர்கள் தங்கள் கோரிக்கைகளைத் தெரிவித்திருந்ததோடு. இன்னும் இரண்டு வார காலத்துக்குள் அந்தக் கோரிக்கைகள் நிறைவேற்றப்படா விட்டால், அத்தனை தொழிலாளர்களும் வேலை நிறுத்தம் செய்துவிடுவதாய் அதில் கண்டிருந்தது.

இந்தக் கடிதம் கிடைத்த நாளில் இருந்து கனகசபாபதி ஜுரமாகப் படுத்துவிட்டார். சிவசுந்தரத்தின் கவலைக்கு அளவோ மாற்றோ இல்லாத நிலை ஏற்பட்டது. தந்தையின் நண்பர்கள் சிலரைக் கூப்பிட்டு, அன்றிரவு நீண்ட நேரம் ஆலோசனை செய்தான், சிவசுந்தரம்.

இத்தகைய சிக்கலான நிலையில் ஆலையைத் தொடர்ந்து நடத்துவது என்பது இயலாத காரியம் என்றும், இவ்வளவு நஷ்டத்தில் இப்படிப்பட்ட ஓர் ஆலையை நடத்துவது அவசியமில்லை என்றும் நண்பர்கள் கூறினார்கள். சிவசுந்தரத்துக்கும்

அந்த எண்ணம் சரியென்று பட்டது. ஆனால் திடீரென்று ஆலையை மூடுவதனால் தொழிலாளர்கள் சினம் அதிகரிப்பதோடு புதிய குழப்பங்களும் ஏற்படலாம் என்று சில சட்ட நிபுணர் கருதினார்கள். என்றாலும், ஆலையை மூடுவதைத் தவிர மேற் கொண்டு செய்வதற்கு வேறு எந்த உபாயமும் கிடையாது என்று அனைவருமே கருதினார்கள். சிவசுந்தரம் தனது வயதுக் கும் மீறிய இந்த மகத்தான முடிவுக்கு எப்படி வருவது என்று மேலும் மேலும் தயங்கினான். அவனுடைய தந்தையோ ஆலையை மூடுவது என்ற வார்த்தையைக் கேட்டதில் இருந்து மூளைக் கோளாறு வந்தவர்போல் ஏதேதோ பிதற்ற ஆரம் பித்து விட்டார்.

வடபழனி ஆலைக்கு வெளியே குழப்பம் தீவிரமாகப் புகைய ஆரம்பித்தது. தொழிலாளர்கள் அனுப்பிய கடிதத்தி னால் எதிர்பார்த்ததற்கு மாறான ஒரு விளைவு ஏற்பட்டு விட்டது என்று பலர் பேசிக் கொண்டார்கள். அவர்கள் மூடுவதற்கு முன் நாமே மூடிவிடலாமா என்றார்கள், சிலர். ஆனால், குறிப்பிட்ட சிலர் மட்டும் இந்த நிலையைக் கண்டு வியப்படைந்ததாகவே தெரியவில்லை. இந்த மாதிரி ஒரு சூழ்நிலை ஏற்பட வேண்டும் என்று ஆசைப்பட்டவர்கள் போலக்கூட நடந்து கொண்டார் கள். அவர்கள் வேறு யாருமில்லை. கருணாகரனின் இரக்சியக் குழுவைச் சேர்ந்த சூழ்ச்சித் தலைவர்களே!

சிவசுந்தரத்தின் தந்தைக்கு உடல்நிலை நாளுக்கு நாள் மோசமாகி வருகிறது என்ற செய்தி தொழிலாளர்கள் இடையே தீப்போல் பரவியது. அவர் பிழைக்கமாட்டார் என்றும், ஜன்னி கண்டுவிட்டது என்றும் இரகசியமாகப் பேசிக் கொண்டார்கள். இந்தப் பேச்சை ஒட்டியே புதிய புதிய திட்டங்கள் உருவாகி



சீதாமணியிடம், ஒரு சிறுவன் ஓடி வந்து ஒரு கடிதத்தைக் கொடுத்தான்.

வந்தன—ராங்கிப்பேட்டை ஜமீன்தார் வீட்டு மாடியிலே, கருணாகரனுடைய அறையிலே! சிவப்புக் கார் ஓய்வு ஒழிச்சலின்றி ஊரெல்லாம் சுற்றிக் கொண்டிருந்தது. ரங்கசாமி இரவும் பகலும் கருணாகரனுடன் இருந்து ஏதேதோ பலமான யோசனைகளை உருவாக்கி வந்தான்.

இந்தச் சிக்கலான சூழ்நிலையில் ஒருநாள் சிதாமணி கல்லூரியிலிருந்து விடுதிக்குத் திரும்பிக் கொண்டிருந்த சமயம், யாரோ இனம் தெரியாத ஒரு சிறுவன் வந்து அவளுடைய கையில் ஒரு கடிதத்தைக் கொடுத்துவிட்டு ஓடினான். வேகமாகத் தன் அறைக்கு நடந்து வந்து சிதாமணி அந்தக் கடிதத்தைப் பார்த்தாள். அதில் எழுதியிருந்தது.

"என் அன்புக்குச் சொந்தமான கண்மணி சிதாமணிக்கு,

ஆசீர்வாதம்.

நாளைக் காலை 10 மணிக்கு உன் கல்லூரித் தோட்டத்தில் உன்னை அவசரமாகச் சந்தித்து சில விவரங்கள் சொல்ல ஆசைப்படுகிறேன். நான் உன்னை சந்திக்கும் வரை இந்தக் கடிதத்தைப்பற்றி வேறு யாரிடமும், சிவசுந்தரத்திடம்கூட ஒன்றுமே சொல்லாதே. உன்னிடத்திலும் உன் எதிர் கால வாழ்விலும் மாசற்ற அக்கறையும் அன்பும் கொண்டு இந்தக் கடிதத்தை எழுதுகிறேன். உனக்கு என் கடமையை நான் நிறைவேற்றுவதற்கு இறைவன் இப்பொழுதுதான் வாய்ப்பு வழங்கியிருக்கிறான். அதை மகிழ்ச்சியோடு செய்வேன். என்னை நம்பு.

இப்படிக்கு,

உன்னுடைய பிரியமுள்ள,

மாமா'.

இந்தக் கடிதத்தைப் படித்த விநாடியில் இருந்து சுதா மணிக்கு தலை சுற்றியது. சிவசுந்தரத்தை முதல் முதல் சந்தித்த தில் இருந்து அவள் எவ் விஷயத்தையும் இதுநாள்வரை அவனி டம் மறைத்ததில்லை. இப்பொழுது புதிதாக அப்படி ஒரு காரி யம் செய்ய வேண்டுமா?

தவிரவும், இந்தக் கடிதத்தை நம்பலாமா? இதன் விளைவு கள் என்னவாகும்? தன்னுடைய மாமன் என்று சொல்லிக் கொள்கிற அந்த மனிதன் தனக்குச் செய்ய வேண்டிய கடமை என்ன இருக்கிறது? அப்படி இந்த உலகத்தில் தனது வாழ்வில் உண்மையிலேயே அவருக்கு அக்கறை இருக்குமேயானால், வட பழனி ஆலயில் இத்தனை விபரீதங்கள் நிகழும்படி பார்த்துக் கொண்டிருப்பாரா? இவரே முனைந்து நின்று இத்தனை சூழ்ச்சி கள் செய்வாரா? இதில் ஏதோ மோசம் இருக்கிறது—இவ் வாறு நினைப்பாள் ஒரு கணம்.

ஆனால், மறுகணம் அவளையும் மீறி ஒரு பாசம், விவரிக்க முடியாத ஓர் அன்புணர்ச்சி விவரம் தெரியாத அந்த மாமனி டம், அவளது உள்ளத்தில் இருந்து பொங்கி எழும். அந்த உணர்ச்சியின் வெள்ளத்தில் அவளுடைய கண்கள் நிரம்பிக் கண்ணீர் கொட்டும். விம்முவாள், மீண்டும் குழம்புவாள்.

நீண்ட நேரம் கழித்து ஒரு தெளிவு பிறக்கும். எண்ணு வாள்: ‘இப்பொழுது இந்தக் கடிதத்தினால் என்ன நேர்ந்து விட்டது? இப்படி ஒரு கடிதம் வந்திருக்கா விட்டாலுமே தான் செய்யப் போவது என்ன? ஒன்றுமில்லையே! வடபழனி ஆலயின் குழப்பத்தை தீர்ப்பதில் தான் செய்யக்கூடியது என்ன உண்டு? ஏதும் இல்லை.’

ஒருவேளை இந்தக் கடிதத்தின் விளைவாக உதவி செய்ய

ஒரு தருணம் தனக்கு வாய்க்கப் போகிறதோ என்று உள்ளத்தின் ஆசை ஒரு புதிய எண்ணத்தை உண்டாக்கியது. 'எதற்கும் விடியட்டும் பார்ப்போமே' என்று மனத்தைத் திடப்படுத்திக் கொண்டாள், சீதாமணி!

இப்படி மனதைத் திடப்படுத்திக் கொண்டு அன்று மாலையின் குறை நேரத்தைத் தனது அறையில் கழித்து விடலாமா என்று ஒரு விநாடி எண்ணினாள், அவள். அந்நேரம் வெளியே காலடி ஓசை கேட்டது. "மணி" என்ற குரல் அடுத்து வந்தது. சிவசுந்தரம் மிக்க உரிமையோடு அந்த அறைக்குள்ளே நுழைந்தான். திகைத்துப் போய் எழுந்து நின்ற சீதாமணி, திகைப்பிலிருந்து மீள்வதற்குள் சிவசுந்தரம் காலை நிலத்திலே பாவாமல் ஒரே பதற்றத்தோடு அவளைப் "புறப்படு புறப்படு" என்று அவசரப்படுத்தினான்.

"உடனே புறப்படு, மணி. அப்பா உன்னை அவசரமாகப் பார்க்க வேண்டும் என்கிறார்."

# 18 ரங்கசாமி!

மறுநாள் காலை பத்து மணிக்கு ரங்கசாமியைக் கட்டாயம் சந்தித்துவிட வேண்டியதுதான் என்ற தீர்மானத்தோடு சீதாமணி தன் அறையில் உட்கார்ந்ததும், அந்த நேரத்தில் சிவசுந்தரம் அங்கு ஓடோடியும் வந்து அவளை அழைத்ததும், சீதாமணி வாழ்வில் மிகமிக முக்கியமான நிகழ்ச்சிகள். இந்த நிகழ்ச்சிகளைக் குறித்துப் பிற்காலத்தில் சீதாமணி பல தடவை எண்ணியதுண்டு. நவ நிதியம் பாங்கின் நிர்வாக அதிபர் என்ற முறையில் சிவசுந்தரம் வாழ்வில் ஒரு பாதையைத் தனக்கென்று வகுத்துக்

கொண்டு முன்னேறத் தொடங்கியதும், அவனுடைய மனைவி என்ற முறையில் சீதாமணி தனது வாழ்வின் எதிர்காலத்தை சமூகப் பணிக்கு என்று அர்ப்பணம் செய்ததும் எல்லாமே இந்த நிகழ்ச்சிகளின் விளைவு என்று சீதாமணி பல முறை எண்ணியிருக்கிருள்.

சிவசுந்தரம் கல்லூரி விடுதிக்கு வந்து சீதாமணியை மிக்க அவசரமாகத் தனது வீட்டுக்கு அழைத்தான் அல்லவா? அத்தனைக்கும் அவசியமும், அவசரமும் இருந்தன.

சிவசுந்தரத்தின் தந்தை மரணப் படுக்கையில் இருந்தார். அவரது இதயக் கோளாறு எந்த மருந்தினலும் சீர் ஆகாமல். கவலையும் குழப்பமும் கொடுத்த வேதனைக்கு இரையாகி, எந்த வினடியும் அந்த இதயம் நின்றுவிடும் என்ற நிலையில் விநாடிக்கு விநாடி அவர் தளர்ந்து கொண்டிருந்தார். சிவசுந்தரத்தின் சிறுவயதிலேயே அவனை அவரிடம் ஒப்படைத்து விட்டு இந்த உலகிலிருந்து மறைந்தாள், அவர் மனைவி. அந்த நிமிடத்திலிருந்து தம் மகனுக்கு எதிர்காலம் எப்படி அமைய வேண்டும் என்று அவர் என்னென்ன கனவுகள் கண்டாரோ, அந்தக் கனவுகள் எல்லாம் இப்பொழுது எங்கோ சென்று மறைந்து விட்டன. தவிர்க்க முடியாத நிகழ்ச்சிகளும் எதிர்பாராத புதிர்களும் புகுந்து அவனது வாழ்க்கையைச் சின்ன பின்னப் படுத்திவிடாதபடி கூடியவரை ஒரு திட்டத்தை நிர்ணயித்துக் கொடுத்துவிட வேண்டும் என்று மட்டுமே அவர் விரும்பினர். பலவீனமடைந்து நிமிடந்தோறும் தளர்ந்து கொண்டு வந்த அந்தத் தந்தையின் உள்ளத்தில் இந்த ஆசை மட்டும் விநாடிக்கு விநாடி பலப்பட்டு வந்தது! சீதாமணியை உடனே சென்று அழைத்து வரும்படி மகனுக்குச் சொல்லியனுப்பிய பிறகுதான் அவளிடம் என்னென்ன பேச வேண்டும் என்பதைச் சிந்திக்கலானர், தந்தை.

சிவசுந்தரத்தின் தந்தைக்கு இருந்த உடல் நிலையில் விரிவான சிந்தனைகளுக்கு அவரது அறிவு இடந்தரவில்லை. மற்ற எல்லா நினைப்புகளையும்விட அவரது உள்ளத்தை அழுத்திக் கொண்டிருந்த ஒரே ஓர் ஆவேசம் ரங்கசாமியைப் பற்றியது தான். எதைச் சீதாமணியிடம் சொன்னாலும் சொல்லாவிட்டாலும் அந்த ஒன்றை மட்டும் கட்டாயம் சொல்லிவிடுவது என்று மனதுக்குள் தீர்மானித்துக் கொண்டார், அவர்!

ரங்கசாமி! அவனைப் பற்றிய எண்ணம் வந்ததும் தந்தையின் இதயம் கொதித்தது. எத்தனை பெரிய துரோகி அவன்! அவனுக்கு என்னென்ன உதவிகள் எல்லாம் தாமே செய்திருக்கிறார்? அந்த வடபழனி ஆலையில் அவன் வெறும் சாதாரணத் தொழிலாளியாகவா நடமாடினன்? எத்தனை சலுகைகள்! எத்தனை வசதிகள், அவனுக்கு! எதிர்காலத்தில் அந்த ஆலை சீராக வளர்ந்து அதன் அதிபர்களில் ரங்கசாமியும் ஓர் அதிபராக விளங்குவான் என்றெல்லாம் கனவு கண்ட தமக்கு எத்தனை பெரிய துரோகத்தை அவன் செய்துவிட்டான்? தம்முடைய வாழ்வின் முடிவுக்கே அவன்தான் காரணம். அதோடு போயிற்று? தமக்குப் பின்னல் தம்முடைய ஒரே மகனின் வாழ்க்கையையும் அல்லவா ரங்கசாமி சிதற அடித்துவிட்டான். அவன் மட்டும் இவ்விதம் நடந்து கொள்ளாமல் இருந்தால்...?

முதியவரின் நோய்ப்பட்ட இதயம் ஏதேதோ உணர்ச்சிக் குமிழிகள் பொங்கிய வண்ணம் கொதித்துக் கொண்டிருந்தது.

## 19 இதயக் கனல்!

சிவசுந்தரம் சீதாமணியை அழைத்துக் கொண்டு தனது வீட்டினுள் நுழைந்தபோது வீடெல்லாம் ஒரே குழப்பமாக இருந்தது. தந்தையின் இதயக் கோளாறு திடீரென்று அதி

கரித்து மூச்சுத் திணறிக் கொண்டிருந்ததால் டாக்டர் வந்திருந்தார்.

சிவசுந்தரமும் சீதாமணியும் அறையுள் நுழைந்ததும் கண்களைத் திறந்து பார்த்தார், தந்தை. கலங்கிய கண்களிலிருந்து 'பொல பொல' வென்று கண்ணீர் வழிந்தது. சீதாமணியையே தொடர்ந்து பார்த்துவிட்டு, தம் மகன் பக்கம் பார்வையைத் திருப்பினர், தந்தை. சிவசுந்தரத்தினுல் துயரத்தை அடக்க முடியவில்லை. டாக்டர் அவனைத் தனியாக அழைத்துப் போய் இரகசியமாகச் சொன்னுர்:

"இனி ஒன்றும் செய்வதற்கில்லை. இப்படிச் சொல்வதற்காக மன்னிக்க வேண்டும். கடைசி மூச்சுவரை எங்களால் ஆன வைத்திய உதவிகளைச் செய்வோம்: ஆனுல் இனி உங்கள் தந்தையைக் காப்பாற்றுவதற்கு வைத்தியக் கலையில் ஒரு வழியும் இல்லை."

டாக்டர் இப்படிச் சொன்னதும் சிவசுந்தரம் ஒரு குழந்தையைப் போல் தேம்பினுன்.

"நீங்கள் இனிமேல் அழுது பயனில்லை. மனதை திடப்படுத்திக் கொண்டு உங்கள் தந்தையின் அருகில் சற்று உட்காருங்கள். உடம்பு சம்பந்தப்பட்டவரை அதில் இனி உயிர் இல்லை. ஆனுல், உள்ளத்தில் ஏதோ ஒன்று இருந்து கொண்டு புறப்பட்டு நிற்கும் உயிரைப் பிடித்துக் கொண்டிருக்கிறது. அது உடலுக்கு அப்பாற்பட்ட உள்ளத்தின் ஆற்றல். நீங்கள் படுக்கையில் போய் அவர் பக்கத்தில் உட்காருங்கள்; கண்ணீரைத் துடைத்துக் கொள்ளுங்கள்." என்று டாக்டர் சொன்னுர்.

இப்படிச் சொல்லிவிட்டு டாக்டர் சற்றுத் தூரத்தில் இருந்த ஒரு நாற்காலியில் போய் உட்கார்ந்தார். சிவசுந்தரமும் சீதாமணியும் தந்தையின் அருகிலே சென்றுர்கள்.

"சீதாமணி!" என்று தீனமாகக் கூப்பிட்டார், சிவசுந்தரத்தின் தந்தை. பெருமூச்சு வந்தது. அதைத் தொடர்ந்து குரல் கம்மியது. "அப்பா!" என்றான் சிவசுந்தரம். அந்தக் குரலின் ஒலி ஏதோ ஓர் ஆற்றலைப் பெரியவரின் செவியினூடே பாய்ச்சியிருக்க வேண்டும். அவருடைய கலங்கிய விழிகளில் ஏதோ ஓர் ஒளி பளிச்சிட்டது. "சுந்தரம், மணி! நீங்கள் இருவரும் இப்படி வாருங்கள்" என்றார். அந்த உயிருக்கும் உடம்புக்கும் இடையே உள்ள ஒரு சிறிய இடைவெளியில் உள்ளத்தின் பாசம் என்ன மாயத்தைச் செய்ததோ தெரியவில்லை! தள்ளாடிக் கொண்டிருந்த அவர் கையில் ஒரு சக்தி உதித்தது. சிவசுந்தரத்தின் கையைப் பிடித்து சீதாமணியின் கையிலே வைத்தார்.

"அம்மா! உன்னை இவன் கையில் ஒப்படைக்கிறேன் என்று சொல்வது பிசகு. தாயும் தந்தையுமாக இருந்து வளர்த்த இந்த மகனை உன் கையில் ஒப்படைக்கிறேன். ஆலையை அவன் இனி மறந்து விடலாம். ஆனால்..."

முதியவருடைய உடம்பு பதறியது. சொல்ல நினைத்த எண்ணங்களைச் சொல்ல முடியாமல் தவித்தது, அவரது குரல். உடம்புக்கும் குரலுக்கும் இருந்த இணைப்பு சுழல ஆரம்பித்தது. "அம்மா" என்றார். கண்கள் நெற்றியை நோக்கிச் செருக ஆரம்பித்தன. "அப்பா" என்று கூப்பிட்டு மறுகினான், சிவசுந்தரம். அந்தக் குரலின் ஒலி தந்தையின் செவியிலே புகுந்து அவருடைய செருகிய விழிகள் மீண்டும் எதிர்நோக்கின.

"அம்மா! ஆயிரம் சொல்ல வேண்டும். ஆனால் சொல்ல விடவில்லை, சொல்ல முடியவில்லை. ஆனால்...ஆனால்...உனக்குச் சொல்ல வேண்டிய அவசியமும் இல்லை. ரங்கசாமி என்ற துரோகி...துரோகி..."

பெரியவரின் குரல் கனத்தது. விழிகளில் ஒரு வேகம்

"குபுக்' என்று பொறி கொட்டியது. மூன்று முறை "துரோகி" என்ருர்.

"அம்மா! அந்தத் துரோகியை இன்று சிறை பிடிப்பதற்காக எங்கெல்லாமோ தேடுகிருர்கள். அவன் அகப்படவில்லே. என்று அவன் பிடிபட்டுச் சிறைத்தண்டனே பெற்றுத் தன் குற்றத்தை உணர்கிருனே, அன்றுதான் இந்த உயிர் அமைதி பெறும். அதுவரை...அதுவரை..."

தந்தை இப்படிச் சொல்லிக் கொண்டிருக்கும்பொழுதே சிவசுந்தரம் அப்பாவின் அருகில் வந்து தேம்பிய வண்ணம் சொல்லத் தொடங்கினன்.

"அப்பா! இந்த ரங்கசாமியைப் பிடித்துச் சிறையில் அடைப்பதுவே என் முதலாவது கடமை. இது உறுதி!"

இப்படி அவன் சொன்னபோது அவனது குரலில் எத்தனேயோ தீர்மானம் இருக்கத்தான் செய்தது. என்ருலும் முதியவருடைய முகத்தில் அமைதி பிறக்கவில்லே. அவர் சீதாமணி யைப் பார்த்தார். சீதாமணியின் கண்களில் இருந்து கண்ணீர் வடிந்த வண்ணம் இருந்தது. அவளது உள்ளத்தின் உணர்ச்சிகளே யாரிடம் எப்படி அவள் பேச முடியும்? இத்தனே குழப்பங்களுக்கும் துயரங்களுக்கும் காரணமாக விளங்கியவர் வேறு யாருமில்லே. அவளுடைய மாமா என்று எண்ணியபோது அவள் உள்ளத்தில் ஏற்பட்ட வேதனே சொல்லுக்கு அடங்காமல் பெருகியது.

சிவசுந்தரத்தின் தந்தை ஆவேசம் வந்தவரைப் போலப் படுக்கையிலிருந்து எழுந்தார். அவருடைய முகத்தில் தீ பறந்தது. சொன்ஞர்:

"குழந்தைகளே! உங்களே ஒப்பந்தப்படுத்திவிட்டேன்.

உண்மை. ஆனால் ஒரு நிபந்தனை. என்றைய தினம் ரங்கசாமி சிறையிலே பிடிபடுகிறானோ, என்றைக்கு அவனது தவறுகளுக்கு அவன் தண்டனை பெறுகிறானோ, அன்றுதான் நீங்கள் கணவனும் மனைவியும்! இது உறுதி...இது கடமை...இது சத்தியம்."

மறு விநாடி பெரியவருடைய உடல் படுக்கையிலே வீழ்ந்தது. அந்த உடம்பில் சிறைப்பட்டிருந்த உயிர் விடுதலை பெற்றது.

# 20 நெருப்பும் நீருற்றும்

ஸ்ரீவசுந்தரத்தின் தந்தை மரணமடைந்த அன்று இரவு, வடபழனி ஆலையில் தீ விபத்து ஏற்பட்டதை ஊரெல்லாம் ஒரே அதிசயமாய்ப் பேசிக் கொண்டார்கள்.

இப்படி ஒரு விபத்து நேர இருப்பது முதியவருக்கு ஏற்கனவே தெரியும் என்றும், ஆனால் காடு முழுவதும் பற்றிக் கொண்டுவிட்ட நெருப்பை அணைக்க முயன்று தம் மகன் அதில் சிக்கிவிடக்கூடாது என்று கருதியே விஷயத்தை இதயத்துக்குள்ளே பூட்டி வைத்து அந்தத் தீக்குத் தம்மை இரையாக்கி விட்டார் என்றும், நண்பர்கள் பேசிக் கொண்டார்கள்.

இன்னொரு விசித்திரமான செய்தியும் தொழிலாளர்கள் இடையே புகைந்து கொண்டிருந்தது. அதாவது, ஆலைக்கு நெருப்பு மூட்டும் யோசனையில் தொழிலாளர்கள் இடையே கருத்து வேற்றுமை ஏற்பட்டதாகவும், இதே வேற்றுமையினால் எரிக்கிற கட்சி, எரிக்காத கட்சி என்று தொழிலாளர்கள் இடையே இரண்டு கட்சிகள் ஏற்பட்டுவிட்டதாகவும் பேசிக் கொண்டார்கள்.

எது ஏதாலுைம் ஆலையைச் சாம்பலாக்கிய நெருப்பு முதிய வரின் உடம்பையும் தகித்துவிட்டது.

சிவசுந்தரம் சீதாமணி இருவரும், சாம்பலாகிக் கிடந்த வடபழனி ஆலையின் அருகிலுள்ள மயானத்தருகே அந்த ஆலை யின் தந்தைக்கு ஈமச் சடங்கு நடத்தினுர்கள். உள்ளமே வெந்து சாம்பலாகிவிட்டது போன்று அவர்களின் இதயமெல் லாம் அனலாக எரிந்தது.

"மணி, இந்த ரங்கசாமி என்ற ஒரு துரோகியினுல் நமது வாழ்க்கைக் கனவுகள் எல்லாம் இப்படிச் சாம்பலாகும் என்று நான் எண்ணிப் பார்த்ததே இல்லை. ஆலையை நான் மறந்துவிட வேண்டும் என்று அப்பா சொன்ன கடைசி வார்த்தைகள் இப் பொழுதுதான் எனக்கும் புரிகின்றன. நிச்சயம் இந்த விபத்தைப் பற்றி அவருக்கு முன் கூட்டியே தெரிந்திருக்க வேண்டும். சந்தே கமே இல்லை." என்று சிவசுந்தரம் சொன்னுன்.

சீதாமணி மறுமொழி ஏதும் பேசாமல் கண்களை மூடிய வாறு யோசனையில் ஆழ்ந்திருந்தாள். நீண்ட நேரத்திற்குப் பிறகு சொன்னுள்:

"சுந்தரம்! நீங்கள் இனி செய்து முடிக்க வேண்டிய கடமை களை உங்களுக்கு ஞாபகப்படுத்துவதுதான் தந்தை எனக்கிட்ட கட்டளை, கடமை, அதை நான் செய்து முடிக்கவேண்டும். கடமையைச் செய்பவர்களின் உள்ளத்தில் கவலையும் பற்றும் பசையும் இருக்கக்கூடாது என்று ஆண்டவன் நிலை யத்து ஐயா அடிக்கடி சொல்வார்கள். இனி அவ்விஷயத்தில் நானும் என் மனதைத் திடப்படுத்திக் கொள்ள வேண்டியது தான்."

சிவசுந்தரம் பளிச்சென்று கேட்டான். "அது சரி. ஆனுல் அந்த ரங்கசாமியைப் பிடிப்பது எப்படி?"

சீதாமணி சிரித்தாள். "அப்படியானால் நான் கேட்கிறேன், நாம் இருவரும் திருமணம் செய்து கொள்வது எப்படி?"

இப்படிக் கேட்டுவிட்டுச் சீதாமணி மறுபடியும் சிரித்தாள். அந்தச் சிரிப்பில் சொல்லொணாத வேதனையொன்று மின்னியது.

வேதனையிலே இரண்டு நாட்கள் கழிந்தன. மனச்சுமையோடு கல்லூரியின் விடுதியில் உட்கார்ந்திருந்தாள், சீதாமணி.

மறுநாள் காலை தன்னை வந்து சந்திப்பதாகக் கடிதம் கொடுத்தனுப்பிய ரங்கசாமி, மறுநாள் நிச்சயம் வந்து தன்னைத் தேடியிருப்பான் என்று சீதாமணிக்குத் தெரியும். ஆனால், முதியவரின் மரணம் அந்தச் சந்திப்புக்கு இடமில்லாமல் செய்துவிட்டதே என்று கவலைப்பட்டாள். ஒருவேளை ரங்கசாமியை அவன் எழுதியனுப்பியபடி சந்தித்திருந்தால், இந்த விபத்தே நேர்ந்திராதோ என்று ஓர் எண்ணம் உண்டாயிற்று. ஆனால், தீவிபத்துத்தான் அன்று இரவே நடந்துவிட்டதே! தான் எப்படி அதைத் தடுத்திருக்க முடியும் என்று மறுவிநாடி யோசித்துப் பார்த்தாள், சீதாமணி. இத்தனை குழப்பங்களுக்கும் மத்தியில் ஆண்டவன் நிலையமும் சுமதி அன்னையும் ஐயாவும்-மனக் கண்ணில் தோன்றுவார்கள். அவளது எதிர்கால வாழ்வை நிர்ணயிக்க வேண்டிய அன்னையும் ஐயாவும் அவர்களே அல்லவா?

ஆனால், நிகழ்ச்சிகள் அந்த இருவருக்கும்கூடச் சந்தர்ப்பம் கொடுக்காமல் அப்படி ஒரு முடிவை வகுத்து விட்டனவே என்று சிந்தித்துப் பார்க்கும்போது, சீதாமணியின் மனதில் ஒருவகையான அச்சம் ஏற்பட்டது. ஆண்டவன் நிலையத்தோடும் ஐயாவோடும் நெருங்கிய தொடர்பை இரகசியமான முறையில் வைத்துக் கொண்டிருந்த ரங்கசாமியை சிறைப்பிடிக்கும் கடமை தனக்கு ஏற்பட்டிருக்கிறது. தனது உள்ளத்திலோ அதே ரங்க

சாமியிடத்தில் இனந்தெரியாத ஒரு பாசம் வேறு இருந்து கொண்டு தொல்லைப் படுத்துகிறது. இதுவும் தவிர அந்த ரங்க சாமிக்கும் தன் முன்னோர்களின் வாழ்வுக்கும் ஏதோ ஒரு சொந்தம் இருப்பதுபோல் ரங்கசாமி தன்னிடம் நடந்து கொள்கிறான். எதை எப்படி நிர்ணயிப்பது? அந்த ரங்கசாமியை சிறைப்பிடித்துத் தண்டனை அளித்து, அதன் பிறகு அந்த அஸ்திவாரத்தின் மேல்தான் தனது இல்லற வாழ்க்கையை நிர்மாணித்துக் கொள்ள வேண்டும்! எது கடமை? எது செய்ய வேண்டிய, செய்யத் தகுந்த காரியம்? தன்னையும் தன் வாழ்வையும் வகுத்து வழங்கிய ஆண்டவன் நிலையத்துக்குத் தான் செய்ய வேண்டிய கடமை, தன்னை ஆளாக்கிய ஐயாவுக்குத் தான் ஆற்றவேண்டிய கைமாறு, தன்னை வளர்த்து சீராக்கிய சுமதி அன்னைக்குத் தான் நல்கவேண்டிய பணி—இவற்றுக்கு மத்தியில் சிவசுந்தரத்தின் மீது தன்னையும் மீறி வளர்ந்துவிட்ட காதல், அவனுடைய தந்தையின் சத்தியம், அந்த மகத்தான வாக்குறுதி—இத்தனையும் ஒன்று சேர்ந்து சீதாமணியின் மனதைக் குழப்பியடித்தன. என்ன செய்யலாம் என்று குமைந்து கொண்டிருந்த தருணத்தில் தபால் காரன் அவளது அறையில் நுழைந்தான்.

ரிஜிஸ்தர் செய்யப்பட்ட பதிவு அஞ்சலில் ஒரு சிறு அட்டைப் பெட்டி வந்தது. கையெழுத்திட்டு அதை வாங்கிக் கொண்டு அறையின் கதவுகளைத் தாழிட்டாள், சீதாமணி.

பார்சலைப் பரபரப்புடன் திறந்தாள், சீதாமணி. விந்தை என்னவென்றால் அதற்குள் இன்னொரு சிறு அட்டைப் பெட்டி மேனி முழுதும் துணியால் சுற்றப் பெற்று அரக்கு முத்திரை யுடன் காட்சி தந்தது! அந்தச் சுருளோடு ஒரு கடிதமும் இருந்தது! கடிதத்தைப் பிரித்த சீதாமணி, ஆவலோடு அதைப் படிக்க ஆரம்பித்தாள்.

"சிதாமணிக்கு,

ஆன்ம அன்போடு கூடிய ஆசிர்வாதம்.

அன்று காலே 10—மணிக்குக் கல்லூரித் தோட்டத்தில் உன்னை சந்தித்துப் பேச நான் வரவில்லே. ஏனென்றுல், நான் எதிர்பாராத விதத்தில் மற்றொரு சம்பவம் நடந்துவிட்டது. அதுதான் மில் முதலாளியின் மரணம்.

அப்படியானுல், மற்ற நிகழ்ச்சி நான் எதிர்பார்த்ததுதாஞ என்று நீ நினைக்கலாம். ஆம், அன்றிரவு வடபழனி ஆலேயில் தீ விபத்து நேரும் என்பது நான் எதிர்பார்த்ததுதான்! அது எனக்கு எப்படித் தெரியும் என்று நீ திகைக்கலாம். உண்மையைச் சொன்னுல், வடபழனி ஆலேக்குத் தீ வைத்ததே நான் தான்.

எதற்காக இப்படி ஒரு காரியத்தை நான் செய்தேன்? அது ஒரு கதை. வெறுப்பும் கசப்பும் இல்லாமல் இந்தக் கடிதத்தை மேலே படி. இதுவே எனது கடைசிக் கடிதம்.

விபத்து நடப்பதற்கு முன் தினம் கருணுகரன் வீட்டில் ஒரு பெரிய இரகசியக் கூட்டம் நடைபெற்றது. இந்தச் சதிகாரக் கூட்டத்தில் முக்கியமான பங்கு என்னதுதான். நல்ல நோக்கத்தோடு வாழ்வில் எப்பொழுதாவது மனிதன் பாபம் செய்கிருன் என்றுல், அப்படிப்பட்ட ஒரு தருணம் எனக்கு ஏற்பட்டது என்று சொல்லவேண்டும்.

சிதாமணி! இந்த இரகசியக் கூட்டத்தைக் கருணுகரன் தன் வீட்டிலேயே கூட்டியதன் முக்கிய நோக்கம் வடபழனி ஆலேயைச் சாம்பலாக்கி விடவேண்டும் என்பதே. ஆனுல், இது விஷயத்தில் தொழிலாளர்கள் இடையே பலமான கருத்து வேற்றுமை இருந்ததால், கருணுகரன் எப்படியும் என்னேயே நம்பு

வான் என்பதை என்னுல் முடிந்தவரை இந்தச் சூழ்ச்சிக்குத் தூபம் போட்டேன்.

தொழிலாளர்களின் குறைகளையே காரணமாகச் சொல்லி சிவசுந்தரத்தின் தந்தைக்கு எதிராக அவர்களைக் கிளர்ச்சி செய்யும்படி இயக்கி வந்தான், கருணகரன். இப்பொழுது தீ வைக்க வேண்டும் என்று யோசனை சொன்னதும் முன்யோசனை இல்லாமல் எல்லாரும் இதை ஆதரிப்பார்கள் என்று அவன் எதிர்பார்த்தான். ஆனல், அவர்கள் அப்படி இல்லை. ஆலை எரிந்து விட்டால் பிழைப்பே போய்விடும் என்ற நிலை பலருக்கும் புரிந்தது. சிலர் மட்டும் கருணகரனின் தனிப்பட்ட ஆதரவை நம்பி இந்த யோசனையை ஆதரித்தார்கள். ஆனல், பேச்சு வலுக்க வலுக்க இந்தச் சிலரும் கூடக் கருணகரனின் உண்மையான நோக்கம் தொழிலாளர்களுடைய நலம் அல்ல என்றும், சிவசுந்தரத்தை ஓட்டாண்டி ஆக்க வேண்டும் என்பதே என்றும் புரிந்து கொண்டார்கள். இரண்டொருவர் இன்னெரு முக்கிய காரணத்துக்காக இந்த யோசனையை எதிர்த்தார்கள்.

இந்த ஆலை இன்னும் தொடர்ந்து நடைபெற வேண்டும் என்று விரும்பிய தொழிலாளர்களில் சிலர், சிவசுந்தரத்தின் தந்தை நோயில் படுத்த தருணம் பார்த்து வேறொரு சூழ்ச்சியில் இறங்கினர்கள். கள்ளத் தோணியில் இரகசியமாகக் கொண்டு வரப்பட்ட சில ஆட்சேபணைப் பொருள்களையெல்லாம் கள்ளத்தனமாக ஆலையின் ஓர் அறையில் அடைத்துப் பூட்டி, முதலாளிமார்களை வம்பு வழக்கில் சிக்கவைத்துப் பழி தீர்த்துக் கொள்ளலாம் என்று வேலை செய்தார்கள். இவர்கள் ஆலைக்குத் தீ வைப்பதைக் காரணம் சொல்லாமல் எதிர்த்தார்கள். கூட்டத்தின் நேரம் நீடிக்கவே தொழிலாளர்கள் சிறு தொகுதியாகத் தனியாக எழுந்து போய்த் தங்களுக்குள் யோசனை செய்ய ஆரம்பித்தார்கள். இதனுல் இந்த முக்கிய ரகசியம் தொழிலாளர்கள்

இடையே பரவி விட்டது! ஆலை எரியாமல் இருந்தால்தான் தங்களின் திட்டம் பலிப்பதோடு அந்த ஆலை நிர்வாகமும் மாறும் என்ற விஷயம் அநேகமாக எல்லாத் தொழிலாளருக்கும் புலனாக ஆரம்பித்தது. இரகசியக் கூட்டம் கருணாகரனின் 'தீக் கொளுத்தி' யோசனையை ஆதரிக்காமல் கலைந்து விட்டது! கருணாகரனுக்குக் கள்ளத்தோணி விஷயம் தெரியாததால், அவன் மிகவும் ஏமாற்ற மடைந்து என்னை மட்டும் தனியாக உட்கார்த்தி ஆலோசனை கேட்டான். நானும் தொழிலாளரின் அந்த ரகசியத்தை அவனிடம் சொல்லவில்லை. அதற்கு முக்கிய காரணம் இருந்தது! ஆரம்பத்தில் சொன்னேன் அல்லவா, நல்ல நோக்கத்தோடு ஒரு பெரிய பாபத்தைச் செய்யத் தீர்மானித்து விட்டேன்!

கருணாகரன் என்னிடம் தனது யோசனையை மீண்டும் சொன்னதோடு, நான் ஒருவன்தான் அவன் சொன்னபடி நடக்கக்கூடியவன் என்று முழுமனத்தோடு நம்புவதாகவும் தெரிவித்தான்.

"ரங்கசாமி! எல்லோரும் என்னைக் கைவிட்டு விட்டார்கள், அயோக்கியர்கள்! நீ ஒருவனாவது என் சொல்லைக் கேள், உனக்கு என்ன வேண்டுமென்று நீ கேட்டாலும் தருகிறேன்."

இப்படி என்னிடம் சொன்னான் கருணாகரன். "இது உறுதிதானா?" என்று மட்டும் கேட்டேன். வேறு ஒன்றும் நான் பேசவில்லை.

"வடபழனி ஆலைக்குத் தீ வைப்பதாகச் சத்தியம் செய்! நீ என்ன கேட்டாலும் தருவதாக நான் சத்தியம் செய்கிறேன்!" என்றான், கருணாகரன்.

"இளைய ஜமீன்தாரே! நான் ஏழை. சத்தியத்தை நிறை

வேற்றி விடுவேன். ஆனால், உங்கள் சத்தியத்தை அப்படி நம்ப லாமா?"

இப்படி நான் கேட்டதும் கருணாகரனுக்கு ஒரு வேகம் வந்தது. அந்த வேகம் வரவேண்டும் என்பதற்காகத்தான் நானும் அப்படிக் கேட்டேன்! கருணாகரன் சொன்னான்:

"ரங்கசாமி! என்னை நிச்சயமாக நம்பு. இந்த ராங்கிப் பேட்டை ஜமீன்தார் குடும்பத்தின் குலதெய்வமாகிய ஆயிரங் கண்ணி அம்மனின் பேரில் ஆணையாகச் சொல்லுகிறேன், நீ என்ன கேட்டாலும் தருவேன், இது சத்தியம்!"

இந்தச் சத்தியத்தை அவன் செய்தானோ இல்லையோ எனக்கு உறுதி பிறந்தது. ஆயிரங்கண்ணி அம்மன் பேரில் அந்த ஜமீன்தார் குடும்பம் சத்தியம் செய்வது என்றால் என்ன என்பது எனக்கு அல்லவா தெரியும்? மறு பேச்சில்லாமல் நான் என் வாக்குறுதியைக் கொடுத்தேன்.

"இளைய ஜமீன்தாரே! இன்றிரவு வடபழனி ஆலை சாம்ப லாகிவிடும். இந்தப் பயங்கரமான காரியத்தைச் செய்வதற்காக நீங்கள் எனக்குக் கொடுக்கும் பரிசு ரூபாய் அணா பைசா அல்ல. வெறும் வாக்குறுதிதான்! இனிமேல் நீங்கள் சீதாமணி—சிவ சுந்தரம் விஷயத்தில் தலையிடக்கூடாது. வடபழனி ஆலையின் தீயிலே உங்கள் விரோதமும் சாம்பலாகிவிட வேண்டும். இது ஆயிரங்கண்ணி ஆணை!"

இப்படி நான் சொன்னதும், கருணாகரன் அப்படியே செய லற்று உட்கார்ந்து விட்டான். சொல்லவும் முடியாமல் விழுங்க வும் முடியாமல் வார்த்தைகளை மென்று கொண்டே "சரி" என் றான், கருணாகரன். ஆயிரங்கண்ணியின் திருவருளால் கருணாகரன் வசமாக வாக்குறுதியில் சிக்கிக் கொண்டது நமக்கு ஒரு வெற்றி என்றே நான் கருதுகிறேன். எரிகிற ஆலையில் கள்ளப் பொருள்

களும் சேர்ந்து எரிந்துவிடுவதோடு, சிவசுந்தரம் அடையும் தொல்லைகளும் அறவே தீர்ந்துவிடும் என்று கருதி, நான் என் கையாலேயே அந்த 'மகத்தான' அக்கினி காரியத்தைச் செய் தேன்.

சீதாமணி! ஆலை சாம்பலாகி விட்டது! கருணாகரன் பகை யும் இனி உங்களுக்கு இல்லை. இனி உங்கள் வாழ்க்கையில் யாரும் குறுக்கிட முடியாது. உங்கள் வாழ்க்கைப் பாதையில் இடையூறாக நின்ற மதில்கள் தகர்க்கப்பட்டு விட்டன. கடைசி மதில் என்று இடிந்து விழுகிறதோ அன்று இந்தக் கடிதத்துடன் இருக்கும் பெட்டியைத் திறந்து பார். அதுவரை இதை உலைக் காதே. அந்த நாள் அதிக தூரத்தில் இல்லை. நான் உனக்கு யார் என்ற உண்மை சொல்லற்ற ஒரு வெறும் கோடாகவே நிற் கட்டும்.

உனக்கும் உன் கணவனுக்கும்

உன்னுடைய—உடைய ஆசீர்வாதம்.

இந்தக் கடிதத்தைப் படித்து முடித்ததும், கல்லூரியின் பூங்காவிலே இருந்த சுழல் ஊற்றிலிருந்து விதம்விதமான வடி வத்தில் சுழன்று விழுகிற தண்ணீரைப்போல், சீதாமணியின் உள்ளத்தில் உணர்ச்சிகள் பொங்கிச் சுழன்று வட்டம் வட்ட மாக மருண்டு சிதறின!

அட்டைப் பெட்டியை எடுத்து மேசைக்குள்ளே வைத்துப் பூட்டி விட்டுக் கதவைத் திறந்து வெளியே பார்த்தாள். பூங்கா வில் பொங்கிச் சுழன்று கொண்டிருந்த அந்த நீரூற்றுக்கு அரு காகச் சிவசுந்தரம் நடந்து வந்து கொண்டிருந்தான்!

# 21 அந்தப் படம்

சிவசுந்தரம் வேகமாக நடந்து வந்து சிதாமணியின் அறைக்குள்ளே நுழைந்தான். நுழைந்ததும் தனது சட்டைப் பைக்குள்ளிருந்து அன்றையத் தினசரிப் பத்திரிகையின் ஒரு பக்கத்தை—பைக்குள்ளே மடித்து வைத்திருந்ததை—எடுத்துச் சீதாமணியின் கையிலே கொடுத்தான். அப்பொழுது சிவசுந்தரத்தின் கை பதறியது.

"மணி! இந்தப் படத்தைப் பார்!" என்றான், சிவசுந்தரம்.

பதற்றத்தோடு சீதாமணி அந்தப் பக்கத்தைப் பார்த்தாள். கட்டம்போட்டு ஒரு புகைப்படத்தை அச்சிட்டிருந்தார்கள். என்ன ஆச்சரியம்! அது ரங்கசாமியின் படம்! படத்துக்குக் கீழே அந்த மனிதனைக் கண்டு பிடித்துக் கொடுப்பவர்களுக்கு, அல்லது அவனைப் பற்றிய தகவல்கள் தெரிவிப்பவர்களுக்கு ஆயிரம் ரூபாய் வெகுமதி அளிக்கப்படும் என்று அறிவிக்கப்பட்டு இருந்தது,

சீதாமணிக்கு உடம்பெல்லாம் பதறியது. அந்த அறிவிப்பு அதோடு நிற்கவில்லை. எத்தனையோ பல திருட்டுகளுக்கு அந்த மனிதன் காரணம் என்றும், வடபழனி ஆலயில் தீ வைத்தது சம்பந்தமாக அவனைப் போலீசார் தேடி வருவதாகவும், அவனைக் கண்டுபிடித்து அதிகாரிகளிடம் ஒப்படைக்கிறவர்கள் தேசத்துக்கே ஒரு பெரிய சேவை செய்தவர் ஆவார்கள் என்றும் க[illegible]ருந்தது.

இந்த வார்த்தைகளைப் படித்ததும் சீதாமணிக்குக் கண் கலங்கியது.



சிவசுந்தரம் காட்டிய ஒரு பத்திரிகையில், ரங்கசாமியின் படத்தைப் பார்த்ததும், திகைப்படைந்தாள் சிதாமணி.

"மணி! இதில் ஏதோ சூது இருக்கிறது என்று நினைக்கிறேன். ஆலையில் தீ வைத்த சூழ்ச்சியில் ரங்கசாமி நிச்சயம் கலந்திருப்பான் எனக்குத் தோன்றுகிறது. என்றாலும் மற்றப்படி வேறு எவ்விதத் திருட்டுக் குற்றமும் அவன் செய்திருப்பான் என்று எனக்குத் தோன்றவில்லை" என்று சிவசுந்தரம் சொன்னான்.

சீதாமணி மறுமொழியே பேசவில்லை. சற்று நேரம் அமைதியாக இருந்தாள். பிறகு சொல்லலானாள்:

"சுந்தரம்! கருணாகரனின் சூழ்ச்சி இந்த விஷயத்திலும் பலமாக வேலை செய்திருக்கிறது என்று நினைக்கிறேன்!"

"கருணாகரன் சூழ்ச்சியா! அவனும் ரங்கசாமியும் உடந்தையாயிற்றே! பார்க்கப் போனால் அந்த இருவருமே ஒன்று சேர்ந்து வேலை செய்ததால்தானே நமக்கு இத்தனை ஆபத்துக்கள்!" என்று சொன்னான், சிவசுந்தரம்.

அவனுக்கு மற்றச் செய்திகள் ஒன்றும் தெரியாது என்பதை உணர்ந்து கொண்ட சீதாமணி பதிலே பேசாமல் நின்றாள். அவளுடைய கண்கள் கலங்கின.

சிவசுந்தரம் கேட்டான்: "மணி! எத்தனை பெரிய கெடுதியை நமக்குச் செய்து விட்டான், இந்த ரங்கசாமி! என்றாலும் அவனை ஒரு திருடன் என்று அறிவித்திருக்கிறார்களே என்பதைப் பார்த்து எனக்கு அனுதாபம் அல்லவா உண்டாகிறது! எவ்வளவு பெரிய மடமை, அது! நமக்குத் துரோகம் செய்த ஒருவனைக்கூட நம்மால் அநியாயமாகக் குற்றம் சாட்டிப் பிடிக்கவில்லை! இப்படிப்பட்ட குணம் நமக்கு இருப்பதால்தான் நம்முடைய எதிரிகளின் கை ஓங்கி நிற்கிறது!"

இவ்வாறு சொல்லிக் கொண்டே சீதாமணிக்கு எதிரில் இருந்த நாற்காலியில் உட்கார்ந்தான், சிவசுந்தரம். சீதாமணி

என்ன பேசுவது என்று ஒன்றுமே தோன்ருதவளாகச் செய லற்று நின்ருள்.

"மணி! நான் இப்பொழுது வந்ததின் நோக்கம் உன்னே என்னுேடு போலீஸ் நிலேயத்துக்கு அழைத்துப் போகத்தான்! அங்கே ரங்கசாமியைப் பற்றிய தகவல்களேயெல்லாம் சேகரிச் கிருர்கள். ஆலேயிலே தீப்பற்றியதற்குக் காரணமாக இருந்த சில தொழிலாளர்களே ஏற்கனவே பிடித்து வைத்திருக்கிருர்கள்!' என்ருன், சுந்தரம்.

உடனே சீதாமணி "என்ன சொல்லுகிறீர்கள்! வடபழனி ஆலேக்குத் தீ வைத்தது யார்?" என்று கேட்டாள்.

"ரங்கசாமியும் அவனுேடு சேர்ந்த சகாக்களும்!" சிவ சுந்தரத்தின் குரலில் தீர்மானம் ஒலித்தது. எவ்விதமான சந்தேக மும் இல்லே.

"சுந்தரம்! வடபழனி ஆலேக்குத் தீ வைத்தது ரங்கசாமி என்பதை ஒப்புக் கொள்ளலாம். ஆனல், வேறு யாரைக் கைது செய்திருக்கிருர்கள்!" என்று சீதாமணி கேட்டாள்.

"வேறு யாரையா? ஒரு பெரிய கூட்டமே இதற்கு வேலே செய்திருக்கிறது. ரங்கசாமி தனியாக ஒன்றும் செய்யவில்லே. அதுமட்டுமில்லே. ரங்கசாமியைப் பற்றி மற்றத் தொழிலாளி களிடம் இருந்து ஏதேதோ தகவல்கள் சேகரித்து வைத்திருக் கிருர்கள். ஒவ்வொன்றும் ஆச்சரியமாக இருக்கிறது. சிலவற்றை நம்புவதே கஷ்டமாக இருக்கிறது!"

சிவசுந்தரம் ஒரே வியப்போடு இந்த வார்த்தைகளேப் பேசினன்.

"நம்ப முடியவில்லேயா? அப்படியென்ன தகவல்கள் கிடைத் திருக்கின்றன?,"

சீதாமணியின் இதயம் படபடத்தது.

"ஏதேதோ வரலாறுகளை எடுத்து வைத்திருக்கிறார்கள். என்றாலும் அவனைப் பல திருட்டுகளில் சம்பந்தப்படுத்தி சில தகவல்கள் வைத்திருக்கிறார்கள். எனக்கு என்னவோ அவற்றை மட்டும் நம்ப முடியவில்லை. அது ஏதோ எதிரிகளின் வேலை என்று நினைக்கிறேன். அவனுடைய சகாக்கள் இடையே அவனைப் பிடிக்காத பலர் உண்டு. அவர்கள் கட்டிய கதையாக இருக்கும் என்றுதான் நினைக்கிறேன். ஏனென்றால், அப்பா இருக்கும்வரை ரங்கசாமியின் விசுவாசத்தையும் நாணயத்தையும் பற்றி அப்பு அழுக்குச் சொன்னதில்லை. உண்மையில் அவருக்கு ரங்கசாமியின் திறமையிலும், குணத்திலும் அபாரமான நம்பிக்கை இருந்தது. அதனால்தான் அவன் இந்தத் தொழிலாளர் சண்டையில் சிக்கியதை எண்ணி அவர் அத்தனை வருத்தப்பட்டார்!"

"ரங்கசாமியைப் பற்றி இன்னும் ஏதேதோ நம்ப முடியாத தகவல்கள் கிடைத்திருப்பதாகச் சொன்னீர்களே, அது என்ன விஷயம்?"

சீதாமணியின் குரலில் அளவு கடந்த ஆவல் ஒலித்தது.

சிவசுந்தரம் இந்தக் கேள்விக்கு அதிக முக்கியம் கொடுக்கவில்லை. இந்தக் கேள்வியின் பின்னணியில் பொதிந்திருந்த உள்ளத்தின் தாபங்களும், சீதாமணியின் ஆசாபாசங்களும் அவனுக்கு எப்படித் தெரியும்?

அவன் ஆற அமர, "மணி! அந்தக் கதையெல்லாம் இப்பொழுது என்னத்திற்கு? ரங்கசாமி என்ற மனிதனைத் துப்புத் துலக்க ஆரம்பிக்கும்போது, என்னென்னவோ தகவல்கள் அதிகாரிகளிடம் வந்து சேரும். அவர்களே எல்லாச் செய்திகளையும் நம்பிவிடுவார்களா? ஆதாரம் கிடைக்கக் கூடியதும், இப்பொழுதுள்ள குற்றத்திற்கு அவசியமானதுமான தகவல்களை

மட்டும் ஆராய்வார்கள், அவ்வளவுதான்! எத்தனையோ ஆண்டு களுக்கு முன்னால் ரங்கசாமி யாரையோ காதலித்தான், மோசடி செய்தான் என்றால் அதைப்பற்றி இப்பொழுது ஆராய வேண் டிய அவசியம் என்ன உண்டு?" என்றான்.

சிதாமணியின் ஆவல் பன்மடங்காயிற்று. "சுந்தரம்!| என்ன சொல்லுகிறீர்கள் நீங்கள்? ரங்கசாமியின் காதலா?" என்று கேட்டாள், முகத்தில் புன்முறுவலை வரவழைத்துக் கொண்டு!

"ஆமாம். பல ஆண்டுகளுக்கு முன்பு! அதாவது ரங்க சாமி வாலிபனாக இருந்த காலத்தில் இலங்கையில் ஒருதேயிலைத் தோட்ட நிர்வாகியிடம் மோட்டார் ஓட்டியாக இருந்தானாம். கார் ஓட்டும் கலையில் அசகாயசூரனாம். அந்த நிர்வாகியின் மக ளுக்குக் கார் ஓட்டக் கற்றுக் கொடுத்தானாம். அதில் ஏதோ விபரீதம் நடந்ததாம்!"

வார்த்தைகளை அலட்சியமாகச் சொல்லிக் கொண்டு போனான், சிவசுந்தரம். அந்தக் கதையில் அவனுக்கு அக் கறையோ நம்பிக்கையோ இருந்ததாகத் தெரியவில்லை. ஆனால், சிதாமணி சிவசுந்தரத்தின் பேச்சை ஆவலோடு கேட்டாள்.

"என்னவோ சொல்கிறீர்களே! இலங்கைக்கு எங்கே போனான் ரங்கசாமி?"

சிவசுந்தரம் சிரித்தான்.

"அதுதான் ஆரம்பத்திலேயே சொன்னேனே! அதிகாரி களின் கைக்கு வந்து சேருகிற தகவல்களில் பலபல செய்திகள் இருக்கும். இவற்றையெல்லாம் அப்படியே நம்புவதற்கில்லை என்று அவர்களுக்கே தெரியும்! இலங்கை என்று தகவல் வரும். ஆராய்ந்து பார்த்தால் அது பர்மாவாக இருக்கும். அல்லது நமது ஊருக்குப் பக்கத்திலே உள்ள ஒரு ராங்கிப்பேட்டை

அல்லது சோங்கிப்பேட்டை அல்லது தூங்கிப்பேட்டையாக இருக்கும். அதைப்பற்றி இப்பொழுது என்ன? நமக்கும் கவலே இல்லே, போலீஸ்காரர்களுக்கும் கவலே இல்லே. அவர்கள் இப்பொழுது தெரிய விரும்புவது எல்லாம், ஆலேயைத் தீ வைப்பதற்கு முன்னுல், ரங்கசாமி யாரோடு எப்படிச் சதி செய்தான் என்ற விஷயந்தான்! அதற்கு நம் இருவரின் ஒத்தாசையும் அவர்களுக்குத் தேவை. மற்ற விஷயங்களேப்பற்றி இப்பொழுது என்ன வந்தது?"

"சுந்தரம்! நீங்கள் சொல்வது உண்மைதான். அந்தப் பழங்கதைகள் எல்லாம் அதிகாரிகளுக்கு அவசியமில்லே! என்றும், ரங்கசாமியின் சரித்திரம் விநோதமாக இருக்கிறது அல்லவா? அதனுல்தான் கேட்டேன்!"

"விநோதமா! இலங்கையில் இந்த விபரீதம் நடந்ததும் கர்ப்பவதியான அந்தப் பெண்ணே அங்கே விட்டு விட்டு இந்தியாவுக்கு ஓடி வந்து விட்டானும், ரங்கசாமி. இதற்கு அவர்கள் சேகரித்துள்ள தகவல்கள் இன்னும் ஆச்சரியமாக இருக்கின்றன!"

சிவசுந்தரம் அந்த விவரத்தைச் சீதாமணிக்குச் சொன்னுன்:

"மணி! தேயிலேத் தோட்டத்து நிர்வாகி ஒரு சீர்திருத்தவாதியாம். அவருடைய மகள் மிகவும் நல்ல குணசாலியாம்! ஏதோ ஒரு சூழ்நிலேயில் உணர்ச்சி விபரீதத்திலே ஏற்பட்டு விட்ட இந்த அநியாயமான நிகழ்ச்சியைக் குறித்து அவள் தன் தகப்பனுரிடமே சொல்லி, ரங்கசாமியைக் கல்யாணம் செய்து கொள்ள விரும்பினுளாம். ஆனுல், ரங்கசாமிக்கு இது ஒருவித அச்சத்தை உண்டாக்கியதாம். அந்தப் பெண்ணின் குடும்ப கவுரவத்தையும் இந்தச் சம்பவத்தினுல் ஏற்பட்டு விட்ட விபரீதத்தையும் எண்ணிப் பார்த்தபோது இந்த முட்டாளுக்கு

ஞானோதயம் ஏற்பட்டு, இந்தியாவுக்கு ஓடி வந்து விட்டானும்!"

"என்ன அநியாயம் இது?"

"அப்படியெல்லாம் சொல்லாதே! இந்தத் தகவல் எல்லாம் உண்மையென்று அதிகாரிகளே நம்பவில்லையே! ஆதாரம் இல்லாத, எத்தனையோ பல செய்திகளில் இதுவும் ஒன்று அவ்வளவுதான்!"

"சுந்தரம்! நீங்கள் சொல்வது சரிதான்! பிடிக்காத மனிதனைப் பற்றிப் பலரும் பலவிதமும் சொல்வார்கள்! ஊழ்வினையினால் இப்படிச் சில குடும்பங்களில் விபரீதங்கள் நடந்துள்ளதாகவும் ஆசிரமத்து ஐயா பல தடவை சொல்வதுண்டு. அது சரி, அந்தக் கதையெல்லாம் நமக்கு எதற்கு?"

"அதுமட்டுமில்லை மணி! அந்த நிகழ்ச்சி நடந்த பிறகு ரங்கசாமியைப் பல இடங்களிலும் தேடினார்களாம்! தோட்டத்து நிர்வாகியே தேடினாராம்!"

"எதற்காக?"

"நடந்தது நடந்து விட்டது என்று நினைத்த அந்தத் தந்தை, ரங்கசாமியைக் கண்டுபிடித்துத் தன் மகளை அவனுக்குக் கல்யாணம் செய்து கொடுத்து விடவேண்டும் என்று இரண்டு மாதம் எங்கெங்கோ வலைவீசிப் பார்த்தாராம். ரங்கசாமி அகப்படவில்லையாம்! அந்த விரக்தியில் அவர் எங்கோ சாமியாராகப் போய்விட்டார் என்றும் தெரிகிறதாம்! சிலர் அவர் இறந்து விட்டார் என்றும் சொல்கிறார்களாம். வேறு சிலர் அந்தப் பழைய இலங்கை முதலாளி இங்கு வந்து இப்போது ஓர் அனாதை ஆசிரமம் நடத்தி வருவதாகச் சொல்கிறார்களாம்! அவருடைய மகளும் இலங்கையில் இல்லையாம். அதிகாரிகளிடம் இந்தத் தகவலைச் சொன்னவனின் கற்பனை இதற்குமேல்

வேலை செய்திருக்குமானால், அந்த மகளையும் தற்கொலை புரிந்து கொள்ளும்படி செய்திருப்பான்! அல்லது ரங்கசாமியைக் கண்டு பிடித்து தந்தையும் மகளுமாக வாழ்க்கை நடத்தி வருவதாக ஜோடித்திருப்பான்! நல்ல வேடிக்கை!"

பேச்சை இப்படி முடித்து விட்டு எழுந்தா

"என்ன எழுந்து விட்டீர்கள்?" என்று கேட்டாள், சீதா மணி.

"ஆமாம். நான் மட்டுமில்லை; நீயும்தான். இப்பொழுது உடனே புறப்பட வேண்டும். காவலர் நிலையத்தில் இரகசியப் போலீசார் நம் இருவருக்காகக் காத்துக் கொண்டிருப்பார் கள்!" என்றான் சிவசுந்தரம்.

"அப்படி என்றால்?"

"மணி! நமது ஆலை எரிந்து சாம்பலாகிப் போய்விட்டது அல்லவா? தந்தையின் வாழ்வையே சாம்பலாக்கி விட்ட அந்தக் கருணாகரனையும் அவனுடைய கையாளான துரோகி ரங்க சாமியையும்..."

"பொறுங்கள், பொறுங்கள். இத்தனை நேரம் ரங்கசாமி யைப் பற்றி இவ்வளவு அனுதாபத்தோடு பேசிவிட்டு இப் பொழுது திடீரென்று..."

"மணி! விளையாட்டுப் பேச்சுப் பேச இது நேரமில்லை. எது மெய்—எது பொய் என்று ஆராய்கிற முறையில் இது வரை ரங்கசாமியைப் பற்றி நியாய உணர்ச்சியோடு சொன் னேன். அதனால் அவன் நமக்குச் செய்த துரோகம் இல்லை யென்று போய்விடுமா?"

"உண்மைதான். என்றாலும் இந்த வழக்கு விசாரணையில் நாம் இருவரும் இவ்வளவு தீவிரமாக ஈடுபடுவதற்கு இது நேரமா என்றுதான் ஒரு விநாடி தயங்கினேன்!"

"மணி! என்ன சொல்லுகிறாய் நீ? ரங்கசாமியையும் கருணாகரனையும் பிடித்துக் கொடுக்கும்வரை நமக்கு நேரம் ஏது?, காலம் ஏது? அப்பாவிடம் கொடுத்த வாக்குறுதியை அதற்குள்..."

"பதறாதீர்கள். தயவுசெய்து பதறாதீர்கள். இரண்டு மூன்று நாட்களாக அதிர்ச்சிக்குமேல் அதிர்ச்சியாக என்னை வந்து தாக்கி விட்டன. இதயம் படபடக்கிறது. என்ன இருந்தாலும் நான் ஒரு பெண்தானே. என் இதயத்தில் உங்களுக்கு உள்ளது போல் அத்தனை திடம் இருக்குமா? மனம் பதறுகிறது. அவ்வளவுதான், ஆனாலும்..." என்று இழுத்தாள், சீதாமணி.

"ஆனாலும் என்ன?" என்று ஆத்திரத்தோடு கேட்டான், சிவசுந்தரம்.

"ஆனாலும் இத்தனை ஆராய்ச்சிகளுக்கும், அதிகாரிகளின் சர்ச்சைகளுக்கும் இனி இடம் இராது. ரங்கசாமி அத்தானைக்கு இடம் வைத்துக் கொள்ள மாட்டான் என்று நினைக்கிறேன்!"

இப்படிச் சொன்னபோது வார்த்தைகளை வேகமாகப் பேச முடியவில்லை, சீதாமணிக்கு! அவளது குரல் தளர்ந்தது.

"என்ன சொல்லுகிறாய், மணி! அத்தானைக்கு இடம் வைத்துக் கொள்ள மாட்டானா, ரங்கசாமி? பெண்புத்தி என்பது சரியாகத்தான் இருக்கிறது! எத்தனை கெட்டிக்காரியாக இருந்தும் சமயத்தில் பேதைமை வந்து விடுகிறது! பைத்தியம்! அதிகாரிகள் என்ன செய்திருக்கிறார்கள் தெரியுமா! ரங்கசாமியை இந்த ஈரேழு பதினாலு உலகத்திலும் வலை போட்டு அரிக்கிறார்கள். நிரந்தரக் குற்றவாளிகளின் வரிசையிலே ரங்கசாமியையும் அவனது புகைப்படத்தையும் சேர்த்தாயிற்று! தெரியுமா!"

உணர்ச்சி வசமாகப் பேசினான், சிவசுந்தரம்.

சீதாமணி இதைப் புரிந்து கொண்டு நிதானமாக மறுமொழி கூறினாள்:

"சுந்தரம்! ஏன் பதற்றத்தோடு இப்படித் துடிக்கிறீர்கள். அப்பாவிடம் கொடுத்த வாக்குறுதியில் உங்கள் பொறுப்பை விட என் பொறுப்புத்தான் அதிகம். எனக்குக் கவலை இருக்காதா? ரங்கசாமி என்று பிடிபடுகிறுனே அன்றுதான் நீங்கள் எனக்குச் சொந்தம் என்பது நன்ருகத் தெரியும். ஆனுலும், இன்று ஒருநாள் தயவுசெய்து பொறுமையாக இருங்கள். எனக்கு உடம்பு சரியில்லை. இதயத்தில் ஏதோ ஒரு படபடப்பு மிகவும் வேதனை கொடுக்கிறது. தவிர உங்களிடம் சொல்ல வேண்டிய தகவல்களும் ஏராளமாக உண்டு. ஆற அமர இருந்து பேசுவோம்!"

இவ்வாறு சொல்லிவிட்டு, சிவசுந்தரத்தின் அழகிய கண்களிலே அன்பு தோய்ந்த தனது எழிற் பார்வையை வீசினுள், சுந்தரக் குமரி சீதாமணி.

# 22 ஆன்ம அஞ்சலி

இந்த நிகழ்ச்சிகள் எல்லாம் நடைபெற்ற மறுநாள் சீதாமணியும் சிவசுந்தரமும் போலீஸ் அதிகாரிகளிடம் சென்று தங்கள் தகவல்களைத் தெரிவிப்பதற்கு இடமே இருக்கவில்லை! அதற்கு அவசியமில்லாத முறையில் ரங்கசாமியே முந்திக் கொண்டு விட்டான்.

பாதுகாவலர் நிலையத்தில் ரங்கசாமி நேரில் தோன்றினுன். தோன்றியதோடு சும்மா இருக்கவில்லை. விவரமான ஒரு கடிதத்தையும் நீட்டினுன். அதில் வடபழனி ஆலைக்குத் தீயிட்டது தானேதான் என்றும், இந்தச் சூழ்ச்சியின் பொறுப்பு நூற்றுக்கு நூறு தன்னையே சார்ந்தது என்றும், இது சம்பந்தமாக அதிகாரிகள் வேறு யாரையும் சந்தேகிக்கவோ அல்லது வேறு

எவர் பேரிலும் நடவடிக்கை எடுக்கவோ வேண்டிதியதில்லை— அப்படிச் செய்வது அனுவசியம் என்பதோடு நியாய விரோதமும் ஆகும் என்றும் ரங்கசாமி தன் கடிதத்தில் எழுதியிருந்தான். தவிரவும், சகாக்கள் பலர் வேண்டாம் என்று சொல்லியுங் கூடத் தான் ஒருவனே முனைந்து நின்று ஆலைக்குத் தீ வைத்ததால், குற்றம் தன்னுடைய சகாக்கள் யாரையும் சாராது என்றும் உறுதி கூறியிருந்தான்.

இந்த விசித்திரமான கடிதத்தைக் கொடுத்துவிட்டு அமைதியாக நின்முன், ரங்கசாமி. அதிகாரி அந்தக் கடிதத்தைப் படித்துப் பார்த்து விட்டு ஒரே வியப்பில் ஆழ்ந்து போனவராய் மீண்டும் அந்தக் கடிதத்தையும் ரங்கசாமியையும் மாறி மாறிப் பார்த்தார்.

“அதிகாரி அவர்களே! கடிதம் என் கையெழுத்துத்தான். நானே என் சொந்த புத்தியில் பூரண நினைவோடு எழுதிய கடிதந்தான். இது.. நான்தான் ரங்கசாமி. புகைப்படத்தோடு ஒட்பிட்டுப் பார்த்துக் கொள்ளுங்கள். என் கையெழுத்தில் சந்தேகம் இருந்தால், ஆலை முதலாளியின் மகனைக் கூப்பிட்டுக் காட்டுங்கள்!”

இப்படிச் சொல்லிக் கொண்டு வரும்போதே ரங்கசாமியின் தலை சுற்றுவதுபோல இருந்தது. மறுவினாடி அவன் தரையிலே உட்கார்ந்தான். அடுத்த நிமிடம் தரையிலே சாய்ந்தான். அதற்கு அடுத்த நிமிடம் தரையிலே சரிந்தான். மறுவினாடி அவன் உயிர் உடலில் இருந்து பிரிந்தது!

ரங்கசாமி ஒரு சரியான திட்டத்தோடுதான் பாதுகாவலர் நிலையத்துக்குள்ளே புகுந்திருந்தான் என்று பின்னால் தெரிய வந்தது. அவனுடைய உடம்பைப் பரிசோதித்த வைத்தியர்கள்,

கடுமையான விஷத்தை உட்கொண்டு விட்டுத்தான் அவன் அதி காரியின் முன்பு வந்திருக்க வேண்டும் என்று கூறினர்கள்.

இதெல்லாம் இன்று பழைய கதையாகி விட்டது. சிவசுந்தரமும் சீதாமணியும் இல்லறத்தில் ஈடுபட்டு ரங்கசாமியின் ஆசியோடு தங்கள் வாழ்வைத் தொடங்கினர்கள் என்பது வெளிப்படை. அவனது அன்பு உள்ளத்தின் அஸ்திவாரத்தில் அந்த இருவரின் வாழ்வும் நிர்மாணிக்கப்பட்டது என்பதை உற்ருர் உறவினர்கள் எல்லாம் இப்பொழுது பேசிக் கொள்கிருர்கள். ஆனல், ஆரம்பத்தில் ரங்கசாமியின் மரணத்துக்குப் பிறகு, இவர்களின் திருமணத்திற்கு எல்லா உறவினர்களும் ஒப்புதல் தந்தார்களா? இல்லே!

சுமதியின் அன்பும், அன்னபூரணி அம்மையின் ஆதரவும், ஆண்டவன் நிலேயத்து ஐயாவின் ஆசீர்வாதமும் பக்க பலமாக நின்று உதவின. ஐயாவின் ஆசியை அளவிட்டுச் சொல்ல முடியாது! ரங்கசாமியின் சடலத்தை ஆண்டவன் நிலேயத்துத் தோட்டத்திலேயே அடக்கம் செய்து அந்த இடத்தில் அன்போடு பூத்துக் குலுங்கும் ரோஜாச் செடியை வைத்து வளர்த்தார் ஐயா! முள்ளுக்கு மத்தியிலே மலர் பூத்துக் கொஞ்சுகிற அந்தச் செடி அவருக்கு ரங்கசாமியை நினேவூட்டும். எத்தனேயோ இன்னல்களுக்கு மத்தியில் அன்பு மலரைப் பூத்த அந்த ரங்கசாமியின் தியாக உள்ளத்துக்கு அவர் அஞ்சலி செய்வதுண்டு. வதந்தியிலே நாட்டம் கொண்டுள்ள பலர் ரங்கசாமியின் இலங்கை வாழ்வையும், ஆண்டவன் நிலேயத்து ஐயாவின் முன் வரலாற்றையும் தொடர்புபடுத்திக் கூடப் பேசி, இந்த அஞ்சலிக்கு ஒரு காரணம் கூறுவது உண்டு! சுமதி இது ஒன்றையும் காதிலே போட்டுக் கொள்ளுவதில்லே. சீதாமணியின் தாயார் இறந்ததும் அவள் மடியிலிருந்து கண்டெடுத்த கடிதம் அவருக்கு உண்மையான செய்திகளே உணர்த்தியிருந்தது என்று

அன்னபூரணி அம்மாள் இரகசியமாகத் தன் நண்பர் குழாத்தில் சொல்லுவாள். மற்றப்படி சிவசுந்தரமும் சீதாமணியும் கழிந்த காலத்தின் துயரங்களை மறந்து அவர்கள் வாழ்வுக்காகத் தன்னைத் தியாகம் செய்து கொண்ட உத்தமனுக்கு வழிபாடு செய்தார்கள்.

பரியவரின் வாழ்த்தோடு ஆண்டவன் நிலையத்திலிருந்து வெளிவந்து சென்னைமா நகரத்திலே தேச சேவை செய்து வரும் சீதாமணிக்கு எல்லா வகையிலும் வாழ்க்கைத் துணைவனாகவும் வழிகாட்டியாகவும் விளங்குகிறான், நவநிதியம் பாங்கின் இன்றைய நிர்வாக டைரக்டர் சிவசுந்தரம்! பாங்கின் நிர்வாகம் அவனுக்குப் பிடித்திருந்தது. சீதாமணிக்கும் ஆலை நிர்வாகத்தைவிடத் தன் கணவனின் பாங்கு நிர்வாகம் உகப்பாகவே இருந்தது. என்றாலும் ஒரே ஒரு விஷயம் மட்டும் அவளுக்குப் பிடிப்பதில்லை. பாங்கில் எங்காவது "திருடர்கள் ஜாக்கிரதை" என்று புகைப்படம் மாட்டியிருந்தால், அவளுக்குக் கண்கலங்கிவிடும். இந்தமாதிரி அறிவிப்புகள் நாட்டுக்கும் மக்களுக்கும் மிகவும் அவசியந்தான்-என்று அவளுக்குத் தெரியுமேயாயினும், அவளையும் மீறித் துயரம் மேலிட்டுவிடும். யாருக்கும் தெரியாமல் அந்தப் படத்தை இரகசியமாக எடுத்து யார் கண்களிலும் படாதபடி அப்புறப்படுத்திய பிறகுதான் மனதில் நிம்மதி யுண்டாகும்.

ஆண்டுக்கு ஒருமுறை சிவசுந்தரமும் சீதாமணியும் ஆண்டவன் நிலையத்திலே சென்று ஆன்ம அஞ்சலிச் சடங்கு நடத்துகிறார்கள். அந்த ரோஜாச் செடியிலிருந்து ஒரு மலரைப் பறித்துத் தனது மனைவியின் கூந்தலிலே செருகும்போது சிவசுந்தரத்தின் கண்கள் கலங்கும். சீதாமணி, சுமதியன்னையின் அறையிலே மாட்டித் தொங்கும் ரங்கசாமியின் படத்துக்கு ரோஜா மலர் மாலையை அணிவித்துப் படத்தின் எதிரே நின்று

*இரண்டு கரங்களையும் கூப்பியவாறு பாரதியாரின் அற்புதம பாடலைப் பாடி மனமுருகி அஞ்சலி செலுத்துவாள்:—*

எந்தையும் தாயும் மகிழ்ந்து குலாவி
இருந்ததும் இந்நாடே—அதன்
முந்தையர் ஆயிரம் ஆண்டுகள் வாழ்ந்து
முடிந்ததும் இந்நாடே—அவர்
சிந்தையில் ஆயிரம் எண்ணம் வளர்ந்து
சிறந்ததும் இந்நாடே—இதை
வந்தனை கூறி மனதில் இருத்தி என்
வாயுற வாழ்த்தேனோ—இதை
'வந்தே மாதரம், வந்தே மாதரம்'
என்று வணங்கேனோ!

*இவ்வாறு சீதாமணி மனமுருகிப் பாடிக்கொண்டு வ போதே, கீழ்க்கண்ட வரிகளில் இதயம் விம்மி விடுவாள்:—*

அங்கவர் மாய அவர்உடல் பூந்துகள்
ஆர்ந்ததும் இந்நாடே—இதை
'வந்தே மாதரம், வந்தே மாதரம்'
என்று வணங்கேனோ!

**(முடிந்தது)**

Edited and Published by B. Sivanthi Adityan 1, Rundalls Road, Madras-7 and Printed by R. Baskaran at Rani Press, 1-C, Rundalls Road, Madras-7.

Registered With the Registrar of Newspapers
in India under No: R. N. 17755/69.

Rani Muthu
(Literary Monthly)
March, 1973



WRAPPER PRINTED AT RANI PRINTERS, MADRAS-7.